பாகை - Degree
கலை - $\frac{1}{60}$th of degree
சாயனம் - அயனாம்சம் சேர்த்து கணித்த சங்கினை.
சங்கினை - Sum
நிராயனம் - அயனாம்சம் இல்லாமல்.

# ஜாதக கணிதம்

ஒராம் பாகம் என்னும்

## ஜோதிட கிரக சட்பலம் ஆயுள்கணிதம்

இதில் கிரக சட்பலம், துவாதச பாவபலம், தசவர்க்கம், பாவச் சக்கிரம், ஆயுள் கணிதம், குளிகாதி ஐவர், தூமாதி பஞ்ச கிரகம், ஜீவன், தேகம், மிருத்யூ ஸ்புடங்கள், ஆகிய இவைகளை வெகு சுலபமாய்ப்போட வாக்கியங்களும் சேஷ்டா பலம் கணிக்கத் தேவையான புதிய விஷயங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இது சென்னை முத்தியாலுப்பேட்டை ஐஸ்கூலில், சைன்ஸ் உபாத்தியாயராயிருந்தவரும் கணித சாஸ்திரத்தில் பி. ஏ. பட்டம் வகித்தவரும் திருக்சித்த ஆரிய சூரிய சித்தாந்த வாக்கிய கணிதப் பயிற்சியுள்ளவரும், "சுத்த திருக்கணித பஞ்சாங்க" கணிதரும், பிருஹத் ஜாதகத்தின் பதிப்பாசிரியருமாகிய

C. G. ராஜன் B. A., (Mathematics)

அவர்களால் எழுதப்பட்டது.

டெக்ஸ்ட் புக் கமிட்டியாரால் லைப்ரரி உபயோகத்திற்கு அங்கீகரிக்கப்பட்டது.



நான்காம் பதிப்பு] 1950 [விலை ரூ. 3—8—0.

உ

கடவுள் துணை.

# ஜாதக கணிதம்

ஓராம் பாகம் என்னும்

## ஜோதிட கிரக சட்பலம், ஆயுள் கணிதம்.

இது

வராஹமிகிராச்சாரியார் அருளிச்செய்த "பிருஹத் ஜாதகம்" அதற்கு வியாக்கியானமாக ஸ்ரீபதி அருளிச்செய்த ஜோதிட கணிதமாகிய "ஸ்ரீபதிபத்ததி" என்ற இந்த இரண்டு கிரந்தங்களுக்குங் கூட வியாக்கியானமாகும்

இதில்

கிரக சட்பலம், துவாதசபாவ பலம், தசவர்க்கம், பாவச் சக்கிரம், ஆயுள் கணிதம், குளிகாதி ஐவர், தூமாதி பஞ்ச கிரகம், ஜீவன், தேகம், மிருத்யூஸ்புடங்கள் ஆகிய இவைகளை வெகு சுலபமாகப்போட வாக்கியங்களும், சேஷ்டாபலங் கணிக்கத் தேவையான புதிய விஷயங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மேலும் இது பல தீபிகை என்ற கிரந்தப் பிரகாரம் பலன் அறிவதற்கு மிகவும் அவசியமானது.

மற்றும் இதில்

சட்பலத்தைக் கணிக்கும் விதத்தையும், தசவர்க்கம், பாவச் சக்கிரம், ஆயுள் கணிதம் ஆகிய இவைகளைப் போடும் வழியையும், கிரகஸ்புடம், லக்கினஸ்புடம், ஜாதகம் இவைகளைக் கணிக்க வேண்டிய முறையையும் ஒரு ஜாதகத்தை உதாரணமாக வைத்துக் காட்டப்பட்டிருக்கின்றது.

இது

சென்னை முத்தியாலுப்பேட்டை ஹை ஸ்கூலில் ஸையன்ஸ் உபாத்தியாயராயிருந்தவரும், கணித சாஸ்திரத்தில் பி.ஏ. பட்டம் வகித்தவரும், திருக்சித்த ஆரிய சூரிய சித்தாந்த வாக்கிய கணிதப் பயிற்சியுள்ளவரும், சி. ஜி. ராஜன் சுத்த திருக்கணித பஞ்சாங்கக் கணிதரும் பிருஹத் ஜாதகத்தின் பதிப்பாசிரியருமாகிய.

C. G. ராஜன் B. A., (Mathematic)

அவர்களால் எழுதப்பட்டது.

 1950 [Third Edition.

# முன்னுரை

ஜ்யோதிஷம் என்பது ஆகாயத்தில் ஜோதியாய் நமக்குப் புலப்படுகின்ற அண்டங்களால் உண்டாகின்ற நன்மை துன்மை களைப்பற்றி முந்தியாகவே தெரிவிக்கின்ற ஒரு சாஸ்திரமாகும். இது ஒரு புராதீனமான சாஸ்திரம். துன்மையை நீக்கி நன்மையைக் கோருவது மனிதருடைய இயல்பாதலாலும், மனிதருடைய வாழ் நாளில் இனிமேல் வரப்போகின்ற நன்மை துன்மைகளைப் பற்றி முன்னமே அறிவது அவசியமாதலாலும், இயற்கையாதலாலும், இந்த சாஸ்திரம் எக்காலத்திலும் எல்லோராலும் நன்கு மதிக்கப்படும் சாஸ்திரமாகும். இந்த சாஸ்திரம் இந்தியர்களால் மிகவும் பெருமையாகப் பாராட்டப்பட்டு வருகின்ற வேதத்தில் ஒரு அங்கமாகப் பாவிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால் இந்த சாஸ்திரம் மிகவும் பெருமை வாய்ந்தது என்று கருதுவதற்கு யாதொரு ஐயமுமில்லை இதை அனேக நிபுண இந்திய வான சாஸ்திரிகளும், ஜோதிடர்களும் படித்து கையாண்டு கொண்டு வந்திருப்பதாக நம்முடைய தேசத்து வானசாஸ்திர நூல்களாலும், ஜோதிட நூல்களாலும் இன்னும் இதர சாஸ்திரங்களாலும் புலப்படுகின்றது.

இந்த சாஸ்திரம் இரண்டு பெரிய வகுப்புகளாகப் பிரிக்கப் படும். அவை (1) வானசாஸ்திரம், (2) மானிட ஜென்மம் முதலாயுள்ள ஜீவராசிகளுக்கு நேரிடும் நன்மை துன்மைகளைத் தெரிவிக்கின்ற ஜோதிடம் என்பனவாம். வான சாஸ்திரம் என்பது ஆகாயத்திலுள்ள அனேகவருடங்கள் சென்றுலுங்கூட அசைவற்றிருப்பதுபோலத் தோற்றுகின்ற நட்சத்திரங்களைப்பற்றியும், ஒரேவிடத்தில் தங்கி இராமல் அடிக்கடி நகர்ந்துகொண்டே யிருக்கின்ற அண்டங்கள் என்று சொல்லப்படுகின்ற கிரகங்களைப்பற்றியும், தூமகேது முதலியவைகளைப்பற்றியும் நமக்குத் தெரிவிக்கும் அதாவது நட்சத்திரங்கள், கிரகங்கள் முதலியவைகளின் உருவத்தையும், அளவையும், அவைகள் எந்த உலோகங்களால் உண்டாக்கப்பட்டிருக்கின்றன வென்பதையும் தெரிவிப்பதுடன், கிரகங்கள் எவ்விதமாக அசைகின்றன என்பதையும், அப்படி அசைவதற்குக் காரணத்தையும், அந்தக் காரணத்தைக் கொண்டு நமக்குத் தேவையான ஒரு காலத்தில் கிரகங்கள் ஆகாயத்தில்

எவ்விடத்தில் இருக்கும் என்பதை அறியும் மார்க்கத்தையும், கிரஹணங்கள் சம்பவிக்கும் காலத்தையும் தெரிவிக்கும். ஆனால் இந்த சாஸ்திரம், நட்சத்திரம், கிரகங்கள் தூமகேதுக்கள் முதலியவைகளால் இந்த பூமண்டலத்திலுள்ள ஜீவ பிராணிகளுக்குச் சம்பவிக்கும் நன்மை துன்மைகளைப்பற்றி ஒன்றுந் தெரிவிக்கின்றதில்லை. ஜோதிட சாஸ்திரமோ இப்பிரபஞ்சத்திலுள்ள ஜீவராசிகள், தாவரவர்க்கங்கள் முதலியவைகளுக்கும் ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்கள், கிரகங்கள் முதலிய அண்டங்களுக்குமுள்ள ஒருவித சம்பந்தத்தை எடுத்துக் காட்டுகின்றது. மேலும் ஜீவராசி முதலியவைகளுக்கு உண்டாகின்ற நன்மை, துன்மைகள் கிரகங்கள் ஆகாயத்திலிருக்கும் இடத்திற்குத் தக்கவாறு மாறுபடுகின்றனவென்றும் ஜோதிடந் தெரிவிக்கும் ஆகையால் ஆகாயத்தில் கிரகங்கள் இருக்குமிடங்களை மிகவும் துல்லிபமாக அறிய வேண்டிய தவசியமென்று புலப்படுகின்றது. ஆகாயத்தில் கிரகங்கள் இருக்கின்ற இடங்கள், சோதிடத்திற்கு முக்கியமானதால், இந்த இடங்களைப்பற்றித் தெரிவிக்கின்ற வான சாஸ்திரம் ஜோதிடத்திற்கு முதற்கருவியாகவும், துணைக் கருவியாகவுமிருக்கின்றது என்பது எடுத்துக் காட்டாமலே நன்ருய்ப் புலப்படுகின்றது. ஆகையால் ஜோதிட சாஸ்திரத்தைக் கையாளுகின்றவர்களுக்கு வானசாஸ்திரந் தெரிந்திருப்பது மிகவும் நன்மையை விளைவிக்கும்.

ஜோதிட சாஸ்திரத்தைக் கொண்டு சொல்லப்படும் பலாபலன்கள் தவறிப் போகாமல் சரியாக இருக்க வேண்டுமானல் மேலே சொல்லிய காரணத்தினல் வானசாஸ்திரமும் தவறுதலாயில்லாமல் சரியாகவிருக்க வேண்டுமென்பது அவசியமாகின்றது. நமது இந்து தேச வானசாஸ்திரம் அநேக வருஷங்களாகக் கையாளப்பட்டு வந்திருந்தும் சுமார் முன்னூறு, நானூறு வருடங்களாக விருத்தியில்லாமலிருந்துகொண்டிருக்கின்றது. இது இப்படி இருப்பதற்குப் பல காரணங்களுள. அவைகளைப்பற்றி இங்கு விவரமாகச் சொல்லுவது அனுவசியமானது. வானசாஸ்திரம் அனேக காலமாக நாளுக்கு நாள் விருத்தி செய்யப்பட்டு அப்போதைக்கப்போது கூடியமட்டும் துல்லிபமாக இருக்கும்படியாக நமது முன்னோர்கள் வானசாஸ்திரப் புத்தகங்களை எழுதியிருக்கின்றூர்கள். இப்படி எழுதப்பட்ட புத்தகங்கள் அனேகமாயும். ஒன்றுக்கொன்று வித்தியாசமாயுமிருக்கின்றன. இப்புத்தகங்களுக்குச் சித்தாந்தமென்றும், கரணக் கிரந்தங்கள் என்றும்,

வாக்கிய கணிதங்கள் என்றும் பலவாருகப் பெயரிடப்பட்டிருக்கின்றது. சோதிடத்திற்கு வேண்டிய கிரகங்களிருக்கின்ற ஸ்தானங்களைப் பெரும்பான்மையோர் பஞ்சாங்கங்கள் மூலமாய் அறிவதாலும், சோதிடத்திற்குப் பஞ்சாங்கங்கள் சரியாக இருக்க வேண்டுமென்பது அவசியமாகின்றது. பஞ்சாங்கங்கள் வான சாஸ்திரப் புத்தகங்களினுதவியால் கணிக்கப்படுவதாலும், இந்து தேசத்து வானசாஸ்திர புத்தகங்கள் கிரகங்களினுடைய நிலையில் ஒன்றுக்கொன்று வித்தியாசம் விளைவிக்கக் கூடியனவாயிருப்பதாலும் பஞ்சாங்கங்கள் ஒன்றுக்கொன்று வித்தியாசமாக இருக்கின்றன. இவ்வித வித்தியாசமாகயிருக்கின்ற பல பஞ்சாங்கங்களைப் பலர் உபயோகப்படுத்துவதால் ஒரே ஜாதகம் பலரால் பலவித வித்தியாசத்துடன் எழுதப்பட்டு வருகிறது சகஜமாக இருக்கின்றது. இவ்விதமாக இருப்பதற்கு இந்துதேச வான சாஸ்திரப் புத்தகங்கள் எவ்வளவு வரையிலும் சரியானதாக இருக்கின்றனவென்றும், இந்தியர்களால் செய்யப்பட்ட சரியான வானசாஸ்திரப் புத்தகம் ஒன்று மில்லாம லிருந்தால் சரியான வான சாஸ்திரப் புத்தகங்கள் எந்த தேசத்தாரால் எழுதப்பட்டு வருகின்றன என்றும் அறிந்து அந்த புத்தகங்களைக் கையாளாம லிருப்பதே முக்கிய காரணமாகும். தற்காலத்தில் சரியான வான சாஸ்திர புத்தகங்களைக் கொண்டு திருக்கணித பஞ்சாங்கங்கள் என்று பெயரிட்டுச் சிலர் பஞ்சாங்கங்களைக் கணித்து வருகின்றார்கள். இப்பஞ்சாங்கங்களினுதவியால் அல்லது சரியான வான சாஸ்திர புத்தகங்களினுதவியால் கிரகங்களின் ஸ்புடத்தைக் கணித்தல் மிகவும் அவசியமானது.

மேலும் ஜாதக பலாபலன்களை அறிவதற்குக் கிரகங்களிருக்கும் நிலையையும், அவைகளினுடைய வலிவையும் அறியவேண்டும், உதாரணமாக ஒரு ஜாதகருக்கு ஆயுள், அல்லது ஜீவன யோகம் அல்லது களத்திர யோகம், அல்லது புத்திரயோகம் அறியவேண்டுமானல் அந்தந்த பாவங்களை எந்த கிரகங்கள் பார்க்கின்றனவென்றும், பார்க்கின்ற கிரகங்களின் பலாபலத்தையும், அந்தந்த பாவங்களுக்கு அதிபதியா யிருக்கின்ற கிரகங்களினுடைய பலத்தையும் அவைகளுடன் சம்மந்தப்பட்ட அல்லது அவைகளைப் பார்க்கும் கிரகங்களின் பலத்தையும் அந்தந்த பாவங்களிலிருக்கின்ற கிரகங்களின் பலத்தையும் அறியவேண்டியது மிகவும் அவசியமாக இருக்கிறது. ஆகையால் எவ்வித பலாபலன்களைச் சொல்லுவதற்குச்

கிரகங்களின் பலாபலத்தை முதலில் அறியவேண்டுமென்று ஏற்படுகின்றது. கிரகங்களின் பலத்தை அறிய வேண்டுமானால் கணிதம் செய்து அறியவேண்டுமேயல்லாமல் ஜாதகத்தை அவசரமாய்ப் பார்த்துவிட்டுக் கணிதம் செய்யாமல் சொல்ல முடியாது; ஒரு சமயம் சொல்லினும் அது தோராயவானதே தவிர துல்லியமானதல்ல. ஏனென்றால் கிரகங்களின் பலத்தை அறிவதற்கு அநேக அம்சங்களைக் கொண்டு பலம் ஆராய வேண்டுமாதலால் ஜாதகத்தைப் பார்த்த மாத்திரத்தில் கிரக பலத்தை நிர்ணயிப்பது அசாத்தியமாகும். ஆகையால்தான் உதாரணமாக ஒரு இராசியில் குரு, சனி என்ற இரண்டு கிரகங்களும் சம்மந்தப்பட்டிருந்தால் இரண்டு ஜோதிடர்களில் ஒருவர் சனியைவிட குரு வலுவாயிருக்கின்றார் என்றும், மற்றொருவர் அப்படித் தோன்றவில்லை என்றும், குருவைவிட சனிதான் வலுவாயிருக்கின்றதாகத் தோன்றுகிறதென்றும் சொல்லுவது மிகவும் சகஜமாகவிருக்கின்றது. இப்படிச் சொல்லுவதற்கு, இவ்விரண்டு கிரகங்களின் வலிவைக் கணித ரீதியாய் இவ்விரண்டு ஜோதிடர்களும் கணித்துப் பார்க்காமல் ஜாதகத்தைப் பார்த்துவிட்டு அவர்களுடைய மனதிற்குத் தோன்றியபடி சொல்லுவதுதான் காரணமாகும். இப்படிச் செய்யாமல் கணித ரீதியாய்க் கணித்துப் பார்த்தால் இரண்டு ஜோதிடர்களும் வித்தியாசமாய் அபிப்பிராயப்படுவதற்குக் காரணமிராது. ஒரு கிரகத்தினுடைய பலம் 6 வகைப்படும். அவை (1) ஸ்தானபலம், கிரகதிருஷ்டிபலம், (2) காலபலம், (3) அயனபலம், கிரகயுத்த பலம், (4) நைசர்க்கிகப்பலம், (5) திக்குப்பலம், (6) சேஷ்டாபலம் என அறுவகைப்படும். இந்த 6 வித பலங்களும் சட்பலம் என்று சொல்லப்படும். இந்த 6 வித பலங்களில் சில அநேக அம்சங்களுடையனவாகும். உதாரணமாக ஸ்தானபலம் என்பது (1) உச்சபலம், (2) கேந்திராதிபலம், (3) திரேகாணபலம், (4) யுக்மாயுக்மபலம், (5) சப்த வர்க்கஜபலம் என 5 வகைப்படும். இந்த சப்த வர்க்கஜ பலம் என்பது (1) இராசிவர்க்கபலம், (2) நவாம்சைவர்க்கபலம், (3) திரேகாணவர்க்கபலம், (4) துவாதசாம்ச வர்க்கபலம், (5) சப்தமாம்ச வர்க்கபலம், (6) ஓராவர்க்கபலம், (7) திரிம்சாம்ச வர்க்கபலம் என 7 வகைப்படும். ஆகையால் ஸ்தானபலம் என்பது மொத்தத்தில் 11 அம்சங்களுடையது. மேலும் காலபலம் என்பது (1) நத உன்னதபலம், (2) தினராத்திரி திரிபாகபலம், (3) தினபலம், (4) மாதபலம், (5) வருஷபலம்,

(6) ஓராபலம், (7) பட்சபலம் என 7 வகைப்படும். ஆகையால் கிரகங்களினுடைய சட்பலம் என்று சொல்லப்பட்டது அடியிற் கண்ட பலங்கள் அடங்கியுள்ளதென்று அறியவேண்டியது.

1. கிரகதிருஷ்டிபலம்
2. உச்சபலம்
3. கேந்திராதிபலம்
4. திரேகாணபலம்
5. யுக்மாயுக்மபலம்
6. இராசி வர்க்கபலம்
7. நவாம்ச வர்க்கபலம்
8. திரேகாண வர்க்கபலம்
9. துவாதசாம்ச வர்க்கபலம்
10. சப்தமாம்ச வர்க்கபலம்
11. ஓராவர்க்கபலம்
12. திரிம்சாம்ச வர்க்கபலம்
13. நத உன்னதபலம்
14. தினராத்திரி திரிபாகபலம்
15. தினபலம்
16. மாதபலம்
17. வருஷபலம்
18. ஓராபலம்
19. பட்சபலம்
20. அயனபலம்
21. கிரகயுத்தபலம்
22. நைசர்க்கிகபலம்
23. திக்குப்பலம்
24. சேஷ்டாபலம்

ஆகையால் ஒரு கிரகத்தினுடைய பலம் 24 அம்சங்களால் ஏற்பட்டதாகும். ஒரு கிரகத்தின் பலத்தை அறியவேண்டுமானல் மேலே சொல்லிய 24 வித அம்சங்களையும், இந்த அம்சங்களை அறிவதற்காகத் தேவையான கணிதங்களையும் அறியவேண்டியது அவசியம். இவைகளெல்லாம் பெரும்பாலும் கணித்துப் பார்க்க வேண்டியனவாயிருப்பனவே தவிர மனதிலேயே அறியக்கூடியன வாகவில்லை. ஆகையால் ஒரு ஜாதகத்தைப் பார்த்தவுடனே கிரகங்களின் வலிவைப்பற்றி கணித்துப் பார்க்காமல் மனதிலேயே அபிப்பிராயப்படுவது பிசகாகும் அல்லது தோராயமாகும் என்பது எடுத்துக் காட்டாமலே தெரியவரும். ஆகையால் அநேக ஜோதிடர்கள் சொல்லும் பலாபலன்கள் தவறிப்போகின்றமை மிகவும் சகஜமாக இருக்கின்றது. மேலும் மேலே சொல்லியபடி கிரகங்களின் பலத்தைக் கணித்துத் தெரிந்துகொள்ளுவது சிரமமானதாலும் சிரமத்திற்குத் தக்கபடி ஜோதிடர்களுக்கு வெகுமானம் கிடைக்காததாலும் பெரும்பான்மையோர் சட்பலத்தைக் கணித்துப் பார்க்காமலே பலாபலன்களைச் சொல்லிவிடுகின்றார்கள். இப்படிச் செய்வதால் பலாபலன்கள் பெரும்பான்மையும் தவறிப்போகின்றன. பலாபலன்கள் தவறிப்போவதால் ஜோதிட சாஸ்திரம் பொய்யான சாஸ்திரம் என்று சிலர் அபிப்பிராயப்

படுவதற்கு முகாந்தரம் ஏற்படுகின்றது. மேலே சொல்லிய சட்பலத்தை ஜோதிடர்கள் கணித்துப் பார்த்துப் பலாபலன்களைச் சொல்லத் துணிவார்களேயானால் ஜோதிட சாஸ்திரத்திற்குத் தற்காலம் உண்டாயிருக்கும் அபகீர்த்தி நீங்கி அதனுடைய பெருமை நாளுக்கு நாள் விருத்தியடையும் என்பதற்குச் சந்தேகமே இராது.

மேலும் மேலே சொல்லிய ஒவ்வொரு பலத்தையும் கணிக்க வேண்டுமானால் கணித வித்தை தெரிந்திருக்க வேண்டியது அவசியமாகும். கணிப்பதற்கு வேண்டிய சிரமத்தை எடுத்துக் கொள்ள வேண்டிய தவசியமாக இருக்கின்றது. முக்கியமாக இவ்விரண்டு காரணங்களைப்பற்றியே அநேக ஜோதிடர்கள் கிரகங்களின் சட்பலத்தைக் கணித்துப் பார்க்கின்றதில்லை. கணிப்பதனுலுண்டாகும் சிரமத்தையும், கணிதவித்தை தெரியாமலிருப்பதனுலுண்டாகும் கஷ்டத்தையும் நிவர்த்தி செய்யும்பொருட்டே இந்த புத்தகத்தில் அநேக வாக்கியங்கள் கணிக்கப்பட்டு கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த வாக்கியங்களினுதவியால் யாதொரு சிரமுமில்லாமல் வெகு சுலபமாகக் கிரக திருக்பலம், உச்சபலம், திக்குப்பலம், பட்சபலம், காலபலம், அயனபலம், வருஷபலம், மாதபலம், தினபலம் ஒராபலம், தசமலக்கினம் என்ற மத்திய லக்கினம், ஜெனனகாலத்தில் கெற்பச் செல்லுபோய் நின்ற கிரக திசையின் அளவு, கேந்திரபலம், திரேஸ்காணபலம், சதவர்க்கம் ஆகிய முதலியவைகளைப் போடலாம். மேலும் கணிக்கும்போது அநேக சந்தேகங்களுண்டாவது சகஜமானதால் அவைகளை நிவர்த்தி செய்யும்பொருட்டும் கணிக்கும் முறையை நன்ருய் விளக்கிக் காட்டும் பொருட்டும், அநேக உதாரணங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. கணிக்கும் முறையை நன்ருய் விளங்கும்படியாய் விவரித்துச் சொல்லியிருப்பதில் கூறுவதையே கூறுவது என்ற குற்றம் ஒரு சமயமிருந்தபோதிலுங்கூட அதைக் கவனியாமல் நன்ருய் விளங்கும்படிச் சொல்லுவது விசேஷமென்றே கருதி ஒவ்வொன்றையும் விபரமாகச் சொல்லியிருக்கின்றது. ஆகையால் ஒருவர் இந்த புத்தகத்தைப் பிறருடைய உதவியில்லாமலே தானே படித்துத் தெரிந்துகொள்ளலாம், மேலும் ஜாதகத்தைச் சரியாய்க் கணிக்கத் தெரியாதவர்களுக்கு ஜாதகத்தைச் சரியாய்க் கணிக்கவேண்டிய முறையையும் கிரகங்களின் சட்பலத்தைக் கணிக்கும் வழியையும், இராசிச் சக்கிரம், நவாம்சச் சக்கிரம், திரேகாணச் சக்கிரம், துவாதசாம்சச் சக்கிரம், சப்தமாம்சச்

சக்கிரம், ஓரை திரிம்சாம்சம் என்று சொல்லப்பட்ட 7 வித வர்க்கங்களென்ற சப்த வர்க்கங்களையும், பாவச் சக்கிரத்தைப் போடும் வழியையும், பாவபலம் முதலியவைகளைக் கணிக்கும் வழியையும் ஒரு ஜாதகத்தை உதாரணமாக எடுத்துக்கொண்டு அந்த ஜாதகத்திற்கு கணித்துப் போட்டும் காட்டியிருக்கின்றது. இந்த உதாரண ஜாதக கணிதத்தில் ஏதாகிலும் கைப்பிசகு, எழுத்துப் பிசகு இருந்தால் கணிக்கும் முறைகளின் விதிகளை நன்றாய் வாசித்து அவைகளை அனுசரித்து அவைகள் பிரகாரம் தாங்கள் கோரிய ஜாதகத்திற்குக் கணிதம் செய்துகொள்ளவும்.

இந்த புத்தகம் ஜோதிட சாஸ்திரமும், வானசாஸ்திரமும் நன்றாய் அறிந்த சுமார் தொள்ளாயிரம் வருஷங்களுக்கு முந்தி இந்தியாவில் ஜீவித்திருந்த ஸ்ரீபதி பட்டாச்சாரியார் எழுதிய ஸ்ரீபதி ஜோதிட சாஸ்திர கணிதம் அல்லது ஸ்ரீபதிபத்ததி என்று சொல்லப்பட்ட ஜாதக கர்மபத்ததியில் கொடுத்துள்ள விதிகளைப் பெரும்பாலுமனுசரித்து எழுதப்பட்டது. இந்த ஸ்ரீபதிபத்ததி என்ற கிரந்தம், உலக பிரசித்திபெற்ற வராஹமிகிராச்சாரியாரவர்களால் செய்யப்பட்ட பிருஹத் ஜாதகத்திற்கு ஒரு வியாக்கியானமாகும். ஆகையால் இந்த புத்தகம் பிருஹத்ஜாதகம், ஸ்ரீபதிபத்ததி என்ற இவ்விரண்டு கிரந்தங்களுக்குங்கூட ஒரு வியாக்கியானமென்றறிய வேண்டியது. வராஹமிகிரர் ஸ்ரீபதி இவர்கள் சொல்லிய பிரகாரம் ஒவ்வொரு தடவையும் ஒவ்வொரு கிரகத்திற்கும் முதலிலிருந்து சட்பலத்தைக் கணிப்பது மிகவும் சிரமமாதலால் இந்த சிரமத்தை நீங்கும்பொருட்டே இந்த புத்தகத்தில் அநேக வாக்கியங்கள் கணிக்கப்பட்டு வேண்டியபோது தயாராய் உபயோகப் படுத்துவதற்காகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இந்த புத்தகம் மூன்று பிரிவுகளாக எழுதப்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு பிரிவிற்கும் அத்தியாயம் என்று பெயரிட்டிருக்கின்றது. முதல் அத்தியாயத்தில் ஜாதகமென்பது என்ன என்பதையும், ஜாதகத்தைச் சரியாய்க் கணிக்கவேண்டிய முறையையுஞ் சொல்லியிருப்பதுந்தவிர, ஒரு ஜாதகத்திற்கு உதாரணமாகச் சட்வர்க்கமும், சட்பலமும், பாவச்சக்கிரமும், பாவபலமுங் கணித்துக் காட்டப்பட் டிருக்கின்றன. நாம் கொடுத்துள்ள உதாரன கணிதத்தில் கைப்பிழை, அச்சுப் பிழை இவைகள் இருந்தபோதிலும் இவைகளைப் பாராமல் விதிகளில் சொல்லியுள்ள பிரகாரம் கணிக்கவேண்டியது. மூன்றாவது அத்தியாயத்

தில் சட்வர்க்கம் சட்பலம், பாவச்சக்கிரம், பாவபலம் முதலிய வைகளைச் சுலபமாகக் கணிக்கும் பொருட்டுத் தேவையான வாக்கியங்களைக் கணித்துக் கொடுத்திருக்கின்றது. இரண்டாவது அத்தியாயத்தில், மூன்ருவது அத்தியாயத்தில் கொடுத்துள்ள வாக்கியங்களை உபயோகப்படுத்தும் வழிகளை கொடுத்திருக்கின்றது.

தமிழ் வசன நடையில் என்னுல் எழுதி அச்சிட்டிருக்கின்ற பிருஹத் ஜாதகத்திற்குங்கூட, இந்த புத்தகத்தை வியாக்கியானமாக விருக்கும்படி எண்ணி இதை நான் எழுத ஆரம்பித்தேன். என்னுடைய பிருஹத் ஜாதகத்திற்கும், வேறு எவராலும் அச்சிடப்பட்ட பிருஹத் ஜாதகத்திற்கும், ஸ்ரீபதி ஜோதிஷம் என்று சொல்லப்பட்ட ஸ்ரீபதி பத்ததிக்கும், பலதீபிகை, ஜாதக பாரிஜாதம் என்ற கிரந்தங்களுக்குங்கூட மிகவும் அவசியமான வியாக்கியானமாகும். இந்த புத்தகத்தை அச்சிடும்போது புரூப் முதலியவைகளைப் பார்த்து எனக்கு உதவி செய்த ஜோதிட சாஸ்திரம் தெரிந்த என்னுடைய மூத்த தமையனுருக்கு என்னுடைய அன்பார்ந்த வந்தனத்தை நான் அளிக்கின்றேன்.

இந்த புத்தகம் இப்போது மூன்ருவது பதிப்பாக அச்சிட்டிருக்கிறது. 2-வது பதிப்பிலுள்ள பிழைகள் திருத்தப்பட்டுள. 2-வது பதிப்பைவிட 3-வது பதிப்பில் சில விஷயங்கள் புதியதாய் சேர்க்கப்பட்டுள. சேஷ்டாபலம் கணிக்கத் தேவையான உவா, உவாந்தம், வக்கிர ஆரம்பம், வக்கிர நிவர்த்தியும் அக்காலங்களின் கிரகங்களின் ஸ்புடமும் சென்ற ஐம்பது வருஷங்களுக்குப் புதியதாய் இந்த மூன்ருவது பதிப்பில் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இந்தப் புத்தகத்தில் எழுத்துப் பிழை, சொற்பிழை முதலியவைகளிருந்தால் அவைகளை மன்னித்து இதிலுள்ள சாராம்சத்தை ஏற்றுக்கொண்டு இந்த புத்தகத்தை ஆமோதிக்கும்படியாய இதை வாசிக்கும் பெரியோர்களையும், சிறியோர்களையும் வணக்கத்துடன் கேட்டுக் கொள்ளுகிறேன். மேலும் இந்த புத்தகத்தை இன்னம் விருத்தி செய்வதற்காக யாராகிலும் தெரியப்படுத்தும் அபிப்பிராயங்களை வந்தனத்துடன் அங்கீகாரஞ் செய்வதுடன், அந்த அபிப்பிராயங்களுக்கிணங்க விருத்திகளை அடுத்த பதிப்பில் செய்யச் சித்தமாயிருக்கின்றேன்.

9—9—1950 C. G. ராஜன் B.A.,

# விஷய அட்டவணை

## 1-வது அத்தியாயம்.

பக்கம்

## 2-வது அத்தியாயம்

### வாக்கியங்களை உபயோகப்படுத்தும் விதம்

3-வது அத்தியாயம் வாக்கியங்கள்

———

## "ஜாதக கணித" மதிப்புரை.

"ஜாதக கணிதம்"—பஞ்சாங்க கணித ஆசிரியர் ஸ்ரீமான் சி. ஜி. ராஜன், B.A., இயற்றிய "ஜாதக கணிதம்" என்ற புத்தகத்தைக் கண்ணுற்று களித்தோம். 'கணிதக் கடலில் ஆழ்ந்து அகம் சோர்ந்து முகம் வியர்த்துச் செய்யக்கூடிய ஸ்ரீபதி பத்ஹதி கணிதத்திற்காவது ஜந்திரிகள் இயற்றவாவது; இஃதோரியலாத செயல்' என்றே கருதி யாம்வாளா விருந்தனம். தற்போது இனிய நடையில் புதிய வழியில் சுளுவான முறையில் எழுதப்பட்டுள்ள இந்த "ஜாதக கணிதம்" சற்றும் குற்றமின்றி ஜாதகம் கணிக்கவும், ஸ்ரீபதியால் மிக்க சிரமத்துடனும் கேசவரால் சற்று சிரமம் குறைத்துக் காண்பிக்கப்பட்டிருக்கின்ற ஜாதக கர்ம பத்ஹதியை மிக்க அவாவுடன் செய்து முடிக்கவும் ஓரின்றியமையாத கருவியாகி நின்றது. இப்புத்தகத்திற் பற்பல பகுதிகளைப் படித்தும் சிற்சில பகுதிகளைக் கணித்தும் நோக்குகையில் ஒப்பிலா வியப்பும் உவகையும் எம்மனத்திட முதித்தன. வாய்ப்பாடமாகத் தெரியவேண்டிய சில வாய்ப்பாடுகளும், கொஞ்சமும் சஞ்சலமின்றிக் கையாளக்கூடிய பல ஜந்திரிகளும் இப்புத்தகத்திற் பொதிந்து கிடக்கின்றன. தினராசிக் கணித வாக்கியங்கள் தசாம்ச பின்னமறியாதோரும் எளிதிலுபயோகிக்கு முறையிலியற்றப்பட்டிருப்பது மிகக் கொண்டாடற்பாலது. ராசி, ஹோரை, திரேக்காணம். சப்தமாம்சம் முதலிய சப்த வர்க்கங்களையும் சந்தேகமற எளிதிலியற்றும் வண்ணம் இயற்றப்பட்ட ஜந்திரிகள் மிக உதவுகின்றன. சப்த வர்க்கத்தையொட்டி பற்பல ஆசிரியர் ஒருவரையொருவர் வெட்டிப் பேசி படிப்போருக்கு மனக்கலக்க முண்டாகக்கூடிய வெவ்வேரு கோட்பாடுகளையொழித்து, சோதிடக் கடல் கடந்த வராஹ மிஹிரரின் வண்மையுற்ற வழியைக் கைப்பற்றியது புகழத்தகும். திருக்பல ஜந்திரிகள் சிந்தையை மகிழச் செய்கின்றன. உச்சபல ஜந்திரி மெச்சத்தக்கது. காலபல ஜந்திரிகள் மேலான முறையில் இயற்றப்பட்டன. உப அஹர்கண வாக்கியங்களின் உதவி ஒப்பற்றது. சேஷ்டா பலம் கணிக்க இவர் வரைந்ததினும் குறைந்த சிரமமுள்ள முறையொன்று உண்டென்றுயாம் கருதிலம். இந்த 'ஜாதக கணிதத்தில் பலவித ஆயுர்தாய அத்தியாயத்தில் சட் முறைகளை எளிதில் கணக்கிட்டறியுமாறு அமைக்கப்பெற்ற

ஜந்திரிகளைப் பார்த்து மனமகிழ்கின்றோம். ஸ்ரீபதி முதலிய பத்ஹதிகளில் ஆயுர்தாய கணனமே மிகக் கடினமாயது. கோட்கள் தாரா நின்ற ஆயுட்களில், அவைகளின் நீச்சம், உச்சம், அதிர்சயம், வக்ரம, யுத்தம் முதலிய பற்பல முகாந்தரங்களால் கழித்தலும் பெருக்கலும் பலவுள. இந்த "ஜாதக கணிதத்தில்" ஒழுங்கானவழியைக் கைக்கொண்டு ஒவ்வொன்றுக்கும் உதாரணமியற்றிச் செய் முறையைச் செவ்வனே விளக்கியது மிக்க பயனைத் தந்துதவுகின்றது. லக்கினமும், தசமலக்கினமும், கணிப்பதற்குதவுமாறு நிரயன சாயன ராசிமான ஜந்திரி மிகவும் பயனைத் தருகின்றது. கணிதத்திலுள்ள கஷ்டங்களைக் கணப்பொழுதிற் காணுமற் செய்கின்ற இந்த "ஜாதக கணிதம்" கற்போரையும் கணக் காயர்களையும் களிக்கச் செய்கின்ற ஓர் அரிய கருவி யென்பது எமது கருத்து.

அரசாங்கக் கல்லூரி,
கோவை
19—1—1929.

இங்ஙனம்.
ஏ. குப்புசாமி சாஸ்திரி,
வடமொழி கணக்காயர்.

ஷை ஜாதக கணிதம் விலை ரூ. 3—8—0

கிடைக்குமிடம் :—

(1) சி. விஸ்வநாதம் அண்டு கோ.,
7, வெங்கடேச மேஸ்திரி [illegible]தெரு,
சௌக்கார்பே[illegible] போஸ்ட்டு,
சென்னை.

(2) சி. சுப்பிரம[illegible]ம்,
நெ. 70, பேடல்ஸ் ரோட்டு பெரம்பூர், சென்னை.

உ

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| 26 | 7 | கலை சூரிய | காலை சூரிய |
| 32 | 2-3 | துலாம் 5-24, விருச்சிகம் 53-7-யை கன்னி 5-24-க்கு கீழ் மாத்தவும் | |
| 60 | 1 | 20 | 23 |
| 94 | 6 | பாகை 0 கலை | பாகை 0 கலை 4 |
| 95 | 4 | இந்த பகைா | இந்த பாகை |
| 103 | 6 | (2) அசுதமன | (2) அஸ்தமன |
| 106 | 19 | முடிவு என்னும் | முடிவு என்றும் |
| 109 | 3 | ராசியில் | ராசியின் |
| 114 | 1 | 5-வது வாக்கியம் | 15-வது வாக்கியம் |
| 134 | | 3-மணி 46 கலைக்கு 804 என்று திருத்தவும். | |
| 141 | 5 | 39—28 | 39—24 |
| ,, | 12 | 4—1 | 4—4 |
| 146 | 5 | 18—56 | 14—56 |
| 148 | 5 | 291—1 | 291—17 |
| 163 | 1 | 55-வது | 15-வது |
| ,, | 32 | 205—0 | 305—0 |
| ,, | 33 | 207—30 | 307—30 |
| 177 | | குரு என்ற கலத்தில் 9-வது வரியில் 95 என்பதை எடுத்துவிட்டு 25-வது வரியில் 86 என்பதின் கீழ் இன்னொரு 86 சேர்த்து மேலே இருக்கும் வரிகளை 1 வரி தூக்கவும். | |
| 214 | 33 | ஸ்புடம் 204—39 | ஸ்புடம் 204—32 |
| 215 | 17 | 308 | 302 |
| ,, | 32 | மணி 6 | மணி 16 |
| 226 | 23 | 502682-க்கு | 502681-க்கு |
| 235 | 1 | மற்ற 5 | மற்ற 6 |
| 280 | 11 | 446 | 346 |
| 285 | 10 | 22—56 | 22—55 |
| 321 | 25 | 12.26 | 12—6 |
| 331 | 23 | 11—5 | 11—8 |

Retried
29-3-1952

உ

கடவுள் துணை

# "ஜாதக கணிதம்"

என்னும்

# ஜோதிட கிரகசட்பலம்-ஆயுள் கணிதம்

(Hindu Calulations, etc.,)

## அத்தியாயம் 1.

### ஜாதகம் என்பதின் விபரம்.

ஜாதகம் என்பது ஏதாகிலும் ஒரு குறித்த காலத்தில் ஆகாயத்தில் அல்லது பாதாளத்தில் கிரகங்கள் இருக்கும் நிலையையும், பாதாளத்தை விட்டு பூமட்டத்திற்கு மேலே கிளம்பும் இராசியையும் காட்டும் ஒரு முகாந்தரம் என்பதாம். கிரகங்கள் வானத்தில் சஞ்சரிக்கும் பாகத்திற்கு இராசி மண்டலம் என்று பெயர். இந்த இராசி மண்டலத்தை 12 சம பாகங்களாகப் பங்கிட வரும் ஒவ்வொரு பாகத்திற்கும் இராசி என்று பெயர். மேற்சொல்லிய 12 சம பாகங்கள் அல்லது இராசிகள் முறையே வரிசையாக மேஷ ராசி, ரிஷப ராசி, மிதுன ராசி, கடக ராசி, சிம்ம ராசி, கன்னியா ராசி, துலா ராசி, விருச்சிக ராசி, தனுசு ராசி, மகர ராசி, கும்ப ராசி, மீன ராசி என்று சொல்லப்படும். மேற்குத் திக்கிலிருந்து கிழக்குத் திக்காக 23 மணி, 56 நிமிஷத்திற்கு ஒரு தரம் பூமி தன்னைத் தானே சுற்றுவதால் வானத்திலுள்ள நட்சத்திரங்களும், சூரியனும் மற்ற கிரகங்களும் கிழக்குத் திக்கிலிருந்து மேற்குத் திக்கில் செல்லுவதாக நமது கண்களுக்குப் புலப்படுகின்றன. இராசி மண்டலமும் வானத்திலிருப்பதால் அதுவும் கிழக்கு திக்கி

---

இந்த புத்தகம் பிறருடைய உதவியின்றி தானாகவே ஜோதிடம் கற்றுக்கொள்வதற்கும், முந்தியே ஜோதிடம் தெரிந்த ஜோதிடர்களுக்கும், பிருஹத் ஜாதகம், ஸ்ரீ பதி ஜாதக கர்ம பத்ததி, பல தீபிகை, ஜாதக பாரிஜாதம், சர்வார்த்த சிந்தாமணி என்ற இந்த புத்தகங்களைச் சுலபமாயும், நன்றாயும் அறிந்து இவைகளில் சொல்லியபடி பலன்கள் அறிவதற்கும் மிகவும் உபயோகப்படும்.

லிருந்து மேற்கு திக்காகச் செல்லுவதாகத் தோன்றுகிறது. பாதாளத்திலிருக்கும் இராசி மண்டலத்தின் பாகம் கொஞ்சங் கொஞ்சமாகக் கிழக்கில் உதயமாகி மேற்குத் திக்காக நோக்கிச் சென்று கடைசியாக மேற்கில் அஸ்தமனமாகும் ஒரு குறித்த காலத்தில் இராசி மண்டலத்தில் எந்த பாகம் கிழக்கில் உதயமாகுமோ அந்த பாகத்திற்கு உதய லக்கினமென்று பெயர். உதாரணமாக இராசி மண்டலத்தின் முதல் பாகமாகிய மேஷ ராசி ஒரு குறித்த காலத்தில் உதயமாகுமானால் அந்த மேஷ ராசியே அந்த குறித்த காலத்தில் உதய லக்கினம் என்பதாம். அதாவது அந்த குறித்த காலத்தில் லக்கினம் என்னவென்று யாராகிலும் கேட்டால் மேஷ ராசிதான் லக்கினம் என்று சொல்லவேண்டும். அந்த குறித்த காலம் ஒரு குழந்தை பிறந்த காலமானால் அந்த குழந்தை பிறந்த ஜென்ம லக்கினம் மேஷம் என்று சொல்ல வேண்டும். அந்த குறித்த காலம் ஒரு பெண் ருதுவான காலமானால், அந்த பெண் ருதுவான ருது லக்கினம் மேஷம் என்று சொல்லவேண்டும். இவ்விதமாக ஜென்ம லக்கினம் அல்லது ருது லக்கினம் அல்லது பலவிதமான முகூர்த்தங்களின் லக்கினம் அறியவேண்டும். உதயலக்கினம் என்று விவரமாகச் சொல்லாமல் லக்கினம் என்று சொன்னாலுங்கூட உதயலக்கினம் என்று அர்த்தமாகும்

கிரகங்கள் வானத்தில் சஞ்சரிக்கின்றனவென்று சொன்னோம். அவைகளில் முக்கியமானவை ஒன்பது. அவை சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேது எனப்படும். இந்த ஒன்பது கிரகங்களுக்கும் நவக் கிரகங்கள் என்று பெயர். இவைகளில் இராகு, கேது தவிர மற்றவைகள் உருவமும், அளவும், பிரகாசமும் உடையன. ஆகையால் நாம் இவைகளைப் பார்க்கின்றோம். இராகு, கேது என்ற இவ்விரண்டு கிரகங்களுக்கு அளவும், உருவமும், பிரகாசமும் இல்லை. ஆகையால் இவைகளை நாம் பார்க்க முடியாது. இவைகளுக்கு இக்காரணத்தினாலேயே "சாயாக் கிரகம்" என்று பெயர். மேற் சொல்லிய இந்த 9 கிரகங்களும் நமது ஜோதிட சாஸ்திர புத்தகங்களில் சொல்லப்பட்டு உபயோகப்படுத்தப் பட்டிருக்கின்றன. மேல் நாட்டு ஜோதிட சாஸ்திரங்களில் மேற்சொல்லிய நவக் கிரகங்களும் இன்னும் யுரேனஸ், நெப்தியூன் என்று சொல்லப்பட்ட இரண்டு புதிய கிரகங்களும் உபயோகப்படுத்

பட்டிருக்கின்றன. இவ்விரண்டு புதிய கிரகங்கள் சொற்ப காலத்திற்கு முந்தி கண்டுபிடிக்கப்பட்டதாலும், நமது வெறுங் கண்களுக்குப் புலப்படக் கூடியவைகளாயில்லாததாலும், நமது ஜோதிட சாஸ்திரங்களில் சொல்லப்படாமலிருப்பதாலும் இவைகளைப் பற்றி நாம் கவனிக்க வேண்டிய கவலை இல்லை. மேலும் மேற் சொல்லிய நவக் கிரகங்கள் தவிர குளிகன் என்ற ஒரு உபக்கிரகத்தையும் தென் இந்தியாவிற் சில ஜோதிட வகுப்பார் உபயோகப் படுத்துகிறார்கள்.

நாம் முந்தி இராசி மண்டலத்தை 12 சம பாகமாகப் பங்கிட வரும் ஒவ்வொரு பாகத்திற்குப் பெயர் இராசி என்று சொன்னோம். இந்த இராசி மண்டலத்தை 27 சம பாகமாகப் பங்கிட வரும் ஒவ்வொரு பாகத்திற்கும் கூடிய மட்டும் அதன் அருகில் இருக்கும் நட்சத்திரத்தின் பெயரைக் கொடுத்திருக்கின்றார்கள். உதாரணமாக அஸ்வனி நட்சத்திரத்திற்கு அருகிலிருக்கும் பாகத்திற்கு அஸ்வனி என்றும், பரணி நட்சத்திரத்திற்கு அருகிலிருக்கும் பாகத்திற்குப் பரணி என்றும் சொல்லப்படும். இராசி மண்டலத்தில் 12 இராசிகளிருப்பதாலும், 27 நட்சத்திரங்கள் இருப்பதாலும், 12 இராசிக்குள் 27 நட்சத்திரங்களும், அல்லது 27 நட்சத்திரங்களுள் 12 இராசிகளும் அடங்கும் என்று ஏற்படுகின்றது. 27-யை 12-ஆல் வகுக்க $2\frac{1}{4}$ வரும். ஆகையால் ஒரு இராசியில் $2\frac{1}{4}$ நட்சத்திரங்கள் அடங்கி இருக்கின்றனவென்றும் அல்லது $2\frac{1}{4}$ நட்சத்திரங்களில் ஒரு இராசி அடங்கி இருக்கின்றதென்றும் ஏற்படும். இராசி மண்டலத்தை 360 சம பாகங்களாகப் பங்கிட வரும் ஒவ்வொரு பாகத்திற்கும் பாகை என்று பெயர். ஒரு பாகையை 60 சம பாகமாகப் பங்கிட வரும் ஒவ்வொரு பாகத்திற்கும் கலை என்று பெயர். இராசி மண்டலத்தில் 12 இராசிகளும் அல்லது 360 பாகைகளும் இருப்பதால் ஒரு இராசியில் 360-யை 12-ஆல் வகுக்க வருகின்ற 30 பாகைகள் இருக்கின்றன. மறுபடியும் இராசி மண்டலத்தில் 360 பாகைகளும் அல்லது 27 நட்சத்திரங்களும் இருப்பதால், ஒரு நட்சத்திரத்தில் 360-யை 27-ஆல் வகுக்க வருகின்ற 13 பாகையும், 20 கலையும் இருக்கின்றன. ஒவ்வொரு நட்சத்திரத்தையும் 4 சம பாகமாகப் பங்கிட்டிருக்கின்றார்கள். ஒவ்வொரு பாகத்திற்கும் நட்சத்திர பாதம் என்று பெயர். ஒரு இராசி மண்டலத்தில் 27 நட்சத்திரங்கள் இருப்பதாலும் ஒவ்வொரு நட்சத்திரத்திலும் 4 பாதங்களிருப்ப

தாலும், இராசி மண்டலத்தில் மொத்தத்தில் 27-யை 4-ஆல் பெருக்க வருகின்ற 108 நட்சத்திரப் பாதங்கள் இருக்கின்றன. 4 பாதங்கள் கொண்ட ஒரு நட்சத்திரத்தில் 13 பாகை 20 கலை இருப்பதால், ஒரு பாதத்தில் 13 பாகை 20 கலையை 4-ஆல் வகுக்க வருகின்ற 3 பாகை 20 கலை இருக்கின்றன என்று ஏற்படும். மேற் சொல்லிய இராசிகளும், நட்சத்திரங்களும், நட்சத்திரப் பாதங் களும், அவைகளுள் ஒன்றுக்கொன்றுக்குள்ள சம்மந்தங்களும் 11-வது வாக்கியத்தில் (டேபிலில்) காட்டப்பட்டுள்ளன. இந் வாக்கியம் ஜாதகம் கணிப்பதற்கு மிகவும் உபயோகமாகஇருக்கும்.

## ஜாதகம் எழுத வேண்டிய முறை

இனிமேல் ஜாதகம் கணிக்க வேண்டிய வழியைப்பற்றி பேசு வோம். ஜாதகம் எவ்வளவு துல்லியமாகக் கணிக்கிறோமோ அவ் வளவும் நல்லது. இப்படியிருக்க அனேக ஜோதிடர்கள் தாங்கள் கணிக்கும் ஜாதகத்தில் பல பிழைகளைச் செய்கின்றார்கள். இப் பிழைகள் கீழே சொல்லியனவாகும்:—(1) குழந்தை ஜென்ன மாகுந் தினத்தில் சூரிய உதயம் அல்லது அஸ்தமனம் எப்போது நேரிட்டதென்பதைக் கவனிக்கின்றதே இல்லை. சூரியன் எப்போ தும் எல்லா இடங்களிலும் காலை 6 மணிக்கு உதயமாகின்றான் அல்லது மாலை 6 மணிக்கு அஸ்தமனமாகிறான் என்று எண்ணி காலை அல்லது மாலை 6 மணியிலிருந்து ஜெனன நாழிகையைக் கணக்கிட ஆரம்பிக்கின்றார்கள். சூரிய உதய காலமும், அஸ்தமன காலமும் நாளுக்கு நாள் வித்தியாசப்படுவதாலும், இடத்துக்கு இடம் வித்தியாசப்படுவதாலும் குழந்தை ஜெனனமான இடத்தில் ஜெனன தினத்தில் சூரிய உதய காலத்தை அல்லது அஸ்தமன காலத்தை முதலில் அறியவேண்டியது.

(2) இலக்கினம் கணிப்பதில் மேஷாதி இராசிமான சங் யையை எல்லா இடங்களுக்கும் ஒரே விதமானதென்று கரு அதை உபயோகப்படுத்துகின்றார்கள், உதாரணமாக மேஷம் மீனம் $4\frac{1}{4}$ நாழிகை; ரிஷபம், கும்பம் $4\frac{3}{4}$ நாழிகை; மிதுனம், ம ரம் $5\frac{1}{4}$ நாழிகை; கடகம், தனுசு $5\frac{1}{2}$ நாழிகை; சிம்மம், விருச்சிக $5\frac{1}{4}$ நாழிகை; கன்னி, துலாம் 5 நாழிகை என்று எண்ணி அனே ஜோதிடர்கள் இந்த நாழிகைகளை உபயோகப்படுத்துகின்றார்கள் இது சுத்த பிசகு. இப்போது சொல்லிய நாழிகைகளெல்லா

தோராயமானவைகளே தவிர துல்லிபமானவைகள் அல்ல. மேலும் ஒரே இராசிமான சங்கியை எல்லா இடங்களுக்கும் பொருந்தாது. அதாவது மேஷம் ஒரிடத்திற்கு 4¼ நாழிகையானால் அது அந்த யிடத்திற்கு வடக்கு, தெற்குகளிலுள்ள எல்லா யிடங்களுக்கும் பொருந்தாது. நமது "ஸி. ஜி. ராஜன் பஞ்சாங்கத்தில்'' கொடுத்துள்ள நிரயன இராசிமான சங்கியைப் பார்த்தால் இராசிமான சங்கியை இடத்திற்குத் தகுந்தவாறு வித்தியாசப்படுகின்றதென்று புலப்படும். மேலும் மேஷம், மீனம் 4¼; ரிஷபம், கும்பம் 4¾ என்று வலது பக்கமாக மேஷம் முதல் 6 இராசிகளுக்கும், இடது பக்கமாக மீனம் முதல் 6 இராசிகளுக்கும் ஒரே நாழிகையைக் கொடுத்துள்ள இராசிமான சங்கியை சாயன இராசிமான சங்கியை ஆகும். சாயனம் என்பது "அயனும்சம்'' சேர்த்து கணித்த சங்கியை என்பதாம். நமது பஞ்சாங்கங்கள் எல்லாம் நிரயன பஞ்சாங்கங்களாகும். ஜோதிடமும் நிரயனம் பிரகாரம் பார்த்து வருகிறார்கள். நிரயனம் என்பது "அயனும்சம்'' இல்லாமல் என்பதாம். அப்படியிருக்க நமது ஜோதிடருக்குச் சாயன இராசிமான சங்கியை உபயோகித்து அதற்கு வேண்டிய கிரிகைகளைச் செய்யாமல் சும்மா விட்டுவிடுவது பிசகு. நிரயன இராசிமான சங்கியைக்கொண்டு உதயலக்கினம் கணிப்பதைவிட சாயன இராசிமான சங்கியைக்கொண்டு உதயலக்கினம் கணித்து அதற்கு வேண்டிய அயனும்ச கிரியை செய்வது மிகவும் துல்லிபம் என்று அனேகருடைய கொள்கை. அந்த காரணத்தைக் கொண்டுதான் நமது "ஸி. ஜி. ராஜன் பஞ்சாங்கத்தில்'' சாயன இராசிமான சங்கியையும் கொடுக்கப் பட்டிருக்கின்றது.

(3) சரியான பஞ்சாங்கங்களை உபயோகப்படுத்துகிறதில்லை. வான சாஸ்திரம் மற்ற எல்லா சாஸ்திரங்களைப் போலவே நாளுக்கு நாள் விருத்தியாகிக்கொண்டு வரப்பட்ட சாஸ்திரம். அப்படியிருக்க அனேக வருஷங்களுக்கு முன் எழுதப்பட்ட வான சாஸ்திரப் புத்தகங்களை அனுசரித்துக் கணிக்கப்படும் பஞ்சாங்கங்களைக் கொண்டு ஜாதகம் கணிப்பதால் கிரக சாரங்களில் பிழைகள் ஏற்படுகின்றன. ஏனென்றால் அந்த வான சாஸ்திரங்கள் தற்காலத்திற்குச் சரியாக யில்லை.

## ஜாதகம் கணிக்க ஒரு உதாரணம்

மேற்சொல்லிய பிழைகளில்லாமல் ஜாதகம் கணிக்கும் முறையை ஒரு உதாரணத்தால் விளக்கிக் காட்டுவது விசேஷ

மென்று தோற்றுவதால், உதாரணமாக ஒரு ஜெனன ஜாதகத்தைக் கணிப்போம்.

வர்த்தமான சாலிவாகன சகாப்தம் 1792ஞு கலியுகாப்தம் 4971-வது வருஷமாகிய சுக்கிலஞு புரட்டாசிமீ 18உக்குச் சரியான இங்கிலீஷ் 1869ஞு அக்டோபர்மீ 2உ சனிக்கிழமை பம்பாய் ராஜதானியிலுள்ள கத்தியவார் என்ற நகரத்திற்கு அடுத்த "போர்பந்தர்" என்ற ஊரில் காலை சூரிய உதயாதி நாழிகை 3 விநாடி $12\frac{1}{2}$-க்குக் கெடியார ரீதியாய் காலை மணி 7 நிமிஷம் 13-க்கு ஜெனித்த "ஜெயசீலர்" என்ற ஒரு புண்ணிய மகாத்மாவின் ஜாதகத்தைக் கணிப்போம்.

(1) ஜெனன நாழிகை கணிக்க :—ஜெனனமான தினத்தில் சூரிய உதயம் காலை மணி 5, நிமிஷம் 56-க்கும், அஸ்தமனம் மாலை 5 மணி 44 நிமிஷத்திற்கும் நேர்ந்தது. ஜெனனம் காலை 7 மணி 13 நிமிஷத்திற்கு நேர்ந்ததால் 5-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியிற் சொல்லிய பிரகாரம் கணிக்க ஜெனனம் சூரிய உதயத்திலிருந்து நாழிகை 3 விநாடி $12\frac{1}{2}$ என்று ஏற்படுகின்றது.

(2) நவக் கிரகங்களின் ஸ்புடம் கணிக்க :—பஞ்சாங்கங்களில் அல்லது புத்தகங்களில் கிரக ஸ்புடம் 10 நாளுக்கு ஒரு தரம் அல்லது 2 தினங்களுக்கொரு தரம் அல்லது தினந்தோறும் கொடுக்கப்பட்டிருக்கின்றது. அதன் உதவியால் நமக்குத் தேவையான காலத்திற்குக் கிரக ஸ்புடஞ் செய்யவேண்டியது. (சி. ஜீ. ராஜன் பஞ்சாங்கத்தில் கிரக ஸ்புடம் கொடுக்கப்பட்டிருக்கின்றது என்பதைக் கவனிக்கவும்) 1869ஞு அக்டோபர்மீ 1உ பகல் 4 மணி 36 நிமிஷத்திற்கும், 2உ பகல் 4 மணி 36 நிமிஷத்திற்கும் அடியிற்கண்டபடி கிரகங்களின் ஸ்புடங்கள் கொடுக்கப்பட்டிருப்பதாக வைத்துக்கொண்டு நமக்கு வேண்டிய காலமாகிய 1869ஞு அக்டோபர்மீ 2உ காலை 7 மணி 13 நிமிஷத்திற்குக் கிரக ஸ்புடங்களைக் கணிப்போம்.

| கிரகங்களின் பெயர் | 1உ பகல் 4 மணி 36 நிமிஷத்திற்கு ஸ்புடம் | 2உ பகல் 4 மணி 36 நிமிஷத்திற்கு ஸ்புடம் |
|---|---|---|
| | பாகை—கலை | பாகை—கலை |
| சூரியன் | 166—26 | 167—25 |
| சந்திரன் | 109—24 | 123—47 |
| செவ்வாய் | 206— 4 | 206—46 |

| | பாகை—கலை | பாகை—கலை |
|---|---|---|
| புதன் | 191—29 | 192— 7 |
| குரு | 28—19 | 28—15 |
| சுக்கிரன் | 203—47 | 205— 0 |
| சனி | 230—25 | 230—29 |
| இராகு | 102—19 | 102—16 |
| கேது | 282—19 | 282—16 |

இவ்விதமாகக் கிரகங்களின் ஸ்புடங்கள் இருந்தால் 6-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியிற் சொல்லியபடி கணிக்க, 2உ காலை 7 மணி 13 நிமிஷத்திற்குக் கிரக ஸ்புடங்கள் அடியிற்கண்டபடி ஆகும்.

| | பாகை—கலை | | பாகை—கலை |
|---|---|---|---|
| சூரியன் | 167— 2 | சுக்கிரன் | 204—32 |
| சந்திரன் | 118—10 | சனி | 230—27 |
| செவ்வாய் | 206—30 | இராகு | 102—17 |
| புதன் | 191—52 | கேது | 282—17 |
| குரு | 28—17 (வக்ரி) | | |

(3) ஜெனன காலத்தில் திதி அறிய:— பஞ்சாங்கத்தைப் பார்த்து நமக்கு தேவையான ஜெனன காலத்திலுள்ள திதியை அறியலாம். இது ஒரு வழி. இன்னும் ஒரு வழி உண்டு. அதாவது சூரிய சந்திராளுடைய ஸ்புடத்திலிருந்து அறியலாம். ஜெனன காலத்தில் சந்திர ஸ்புடம் பாகை 118 கலை 10 என்றும், சூரியனுடைய ஸ்புடம் பாகை 167 கலை 2 என்றும் முன்னமே 2-வது அயிட்டத்தில் கணித்திருப்பதால் 8-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியிற் சொல்லியபடி கணிக்க ஜெனன காலத்தில் தேய்பிறை ஏகாதசி திதி என்று ஏற்படும்.

(4) ஜெனன காலத்தில் நட்சத்திரம் அறிய :—ஜெனன காலத்தில் சந்திரனுடைய ஸ்புடம் பாகை 118 கலை 10 என்று முன்னமே 2-வது அயிட்டத்தில் கணித்திருக்கின்றது. பிறகு 11-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் விதத்தில் 2-வது அயிட்டம் முதல் 6-வது அயிட்டம் வரையிலும் சொல்லி உள்ளதைப் படிக்க சந்திரன் ஆயில்ய நட்சத்திரம் 4-வது பாதத்தில் இருப்பதாக ஏற்படும்.

(5) ஜெனன கால திசையும், அதன் இருப்பும் கணிக்க :— ஜெனன காலத்தில் சந்திரன் ஸ்புடம்பாகை 118 கலை 10 என்றும்,

சந்திரன் ஆயிலியம் 4-ம் பாதத்தில் இருக்கின்றதென்றும் முன்னமே அறிந்தோம். பிறகு 10-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியிற் சொல்லியபடி கணிக்க, ஜெனன காலத்தில் புதன் தெசையில் கெர்ப்பச் செல்லு போய் இருப்பு நின்றது வரு 2, மீ 4, நாள் 1, நாழிகை 30 என்று ஆகும்.

(6) ஜெனன காலத்தில் உதய இலக்கினம் (அதாவது இலக்கினம் கணிக்க):—முதலில் ஜெனனமான தினத்தில் சூரிய உதய காலத்தில் சூரியனுடைய ஸ்புடத்தைக் கணிக்கவேண்டியது. இதை கணித்தால் ஜெனன தினத்தில் சூரிய உதய வேளையில் உதய இலக்கினமும் அந்த இலக்கினத்தில் எவ்வளவு பாகை கலை உதயமாகி இருக்கின்றதென்றும் இன்னும் எவ்வளவு பாகை கலை உதயமாக வேண்டும் என்றும், இன்னும் உதயமாக வேண்டிய பாகை கலை உதயமாவதற்கு எவ்வளவு நாழி, விநாடி செல்ல வேண்டுமென்றும் ஏற்படும். இந்த நாழிகை விநாடியைத்தான் சில பஞ்சாங்கங்களில் ஒவ்வொரு தினமும் இராசி இருப்பு நாழிகை என்று போடுகின்றார்கள். "ஸி. ஜி. ராஜன் பஞ்சாங்கம்" 32-வது கலத்தைப் பார்த்தால் இராசி இருப்பு என்று ஒவ்வொரு தேதிக்கும் எதிரில் போட்டிருப்பதைக் கவனிக்கலாம். ஜெனன தினத்தில் சூரிய உதய காலமாகிய மணி 5, நிமிஷம் 56-க்குச் சூரிய ஸ்புடம் கணிக்க:—1869வரு அக்டோபர்மீ 1உ பகல் 4 மணி 36 நிமிஷத்திற்குச் சூரிய ஸ்புடம் பாகை 166 கலை 26 ஆகும். 1969வரு அக்டோபர்மீ 2உ பகல் 4 மணி 36 நிமிஷத்திற்குச் சூரிய ஸ்புடம் பாகை 167 கலை 25 ஆகும். ஆகையால் சூரியனுடைய தினகதி பாகை 167 கலை 25-ல் இருந்து பாகை 166 கலை 26 ஐக் கழிக்க வருகின்ற பாகை 0 கலை 59 ஆகும் சூரிய ஸ்புடம் கொடுத்துள்ள 1உ பகல் 4 மணி 36 நிமிஷத்திலிருந்து சூரிய உதய காலமாகிய காலை மணி 5 நிமிஷம் 56 வரையிலும் இடையில் செல்லான காலம் மணி 13 நிமிஷம் 20 ஆகும். இப்போது நமக்குத் தினகதியும், 1உ, 2உ இவைகளின் சூரிய ஸ்புடமும், சூரிய ஸ்புடம் கொடுத்துள்ள காலத்திலிருந்து சூரிய உதயம் வரையிலுமுள்ள காலமாகிய 13 மணி 20 நிமிஷமும் கொடுத்திருப்பதால் 6-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் விதத்தில் சொல்லிய பிரகாரம் கணிக்க, சூரிய உதய வேளையில் சூரியனுடைய ஸ்புடம் பாகை 166 கலை 59 என்று ஏற்படும். 12-வது வாக்கியத்தைப் பார்த்தால் சூரியன் கன்னியா ராசியில் இருப்பதாக

வும் இன்னும் கன்னியா ராசியில் பாகை 180 கலை 0-த்திலிருந்து பாகை 166 கலை 59 ஐக் கழிக்க வருகின்ற 13 பாகை 1 கலை செல்லவேண்டும் என்றும் ஏற்படும். அதாவது சூரிய உதய காலத்தில் கன்னியா ராசி உதயம் என்றும் இன்னும் கன்னியா ராசியில் உதயமான பாகம் போக உதயமாக வேண்டியது பாகை 13 கலை 1 என்றும் ஏற்படும். இதை ஒரு இடத்தில் எழுதி வைத்துக் கொள்ளவும். பஞ்சாங்கங்களில் நிரயன இராசிமான சங்கியைகள் கொடுக்கப்பட்டிருக்கும். அதாவது ஒவ்வொரு ஊரிலும் மேஷாதி முதலிய 12 இராசிகளும் உதயமாகும் காலத்தைக் கொடுக்கப்பட்டிருக்கும். உதாரணமாக எடுத்துக்கொள்ளப்பட்ட ஜேயசீலர் பிறந்த ஊர் போர்பந்தர் ஆனதாலும், அந்த ஊரின் அட்க்ஷாம்சம் $21\frac{1}{2}$ பாகையானதாலும் அந்த ஊரில் மேஷாதி முதலிய 12 இராசிகளும் உதயமாகும் காலம் அடியிற்கண்டபடி ஆகும்.

| இராசியின் பெயர். | நிரயன இராசிமானம். நாழிகை—விநாடி. | இராசியின் பெயர். | நிரயன இராசிமானம். நாழிகை—விநாடி. |
|---|---|---|---|
| மேஷம் | .... 4—12 | துலாம் | .... 5—32 |
| ரிஷபம் | .... 4—54 | விருச்சிகம் | .... 5—39 |
| மிதுனம் | .... 5—32 | தனுசு | .... 5—16 |
| கடகம் | .... 5—37 | மகரம் | .... 4—31 |
| சிம்மம் | .... 5—27 | கும்பம் | .... 3—57 |
| கன்னி | .... 5—23 | மீனம் | .... 3—50 |

மொத்தம் நாழிகை 59 விநாடி 50. மேலே கொடுத்துள்ள 12 இராசிமான சங்கியையில் பார்த்தால் சூரியன் இருக்கின்ற கன்னியா ராசி முழுதும் உதயமாக நாழிகை 5 விநாடி 23 ஆகின்றது. சூரிய உதய காலத்தில் கன்னியில் இன்னும் உதயமாகவேண்டியது பாகை 13 கலை 1 முன்னமே கணித்து வைததிருக்கின்றோம். 30 பாகைகள் அடங்கிய கன்னியா ராசி உதயமாக நாழிகை 5 விநாடி 23 ஆகுமென்றால் பாகை 13 கலை 1 உதயமாக எவ்வளவு நாழிகை விநாடி செல்லும் என்பதை அறிய வேண்டியது. இதைப் பின்வருமாறு அறியவும். கன்னியா ராசியின் சங்கியையாகிய நாழிகை 5 விநாடி 23-யை விநாடியாக மாற்ற 323 விநாடி வரும். பாகை 13 கலை 1-யை கலையாக மாற்ற 781 கலை வரும். ஒரு ராசியின் பிரமாணமாகிய 30 பாகையைக் கலையாக மாற்ற 1,800 கலை வரும். இன்னும் கன்னியா ராசியில் உதயமாக வேண்டிய பாக

மாகிய 781-ஐ இராசிமானமாகிய 323-ஆல் பெருக்கி ஒரு இராசி யின் பிரமாணமாகிய 1,800-ஆல் வகுக்க வருகின்ற ஈவு விநாடி ஆகும். இப்படிப் பெருக்கி வகுக்க ஈவு 140 விநாடி வரும். இதை நாழிகையாக மாற்ற 2 நாழிகை 20 விநாடி ஆகும். ஆகையால் சூரிய உதய காலத்தில் கன்னியா ராசியில் இன்னும் உதயமாக வேண்டிய பாகமாகிய பாகை 13 கலை 1 உதயமாக நாழிகை 2 விநாடி 20 ஆகும். இந்த 2 நாழிகை 20 விநாடியைத்தான் ஜனன மான தினத்தில் கன்னியா ராசி இருப்பு என்று சொல்லுகிறது வழக்கம். கன்னியா ராசி இருப்பு நாழிகை 2 விநாடி 20 ஆகும். அதாவது கன்னியா ராசி முடியுங்காலம் சூரிய உதயத்திலிருந்து நாழிகை 2 விநாடி 20 ஆகும். உடனே அடுத்த இராசியாகிய துலா ராசி உதயமாகி அதற்குரிய இராசிமானமாகிய நாழிகை 5 விநாடி 32 வரையிலும் இருக்கின்றது அதாவது சூரிய உதயாதி நாழிகை 2 விநாடி 20-க்கு துலா லக்கினம் ஆரம்பித்து இந்த 2 நாழிகை 20 விநாடியுடன் துலா ராசியின் இராசிமானமாகிய நாழிகை 5 விநாடி 32-ஐக் கூட்ட வருகின்ற 7 நாழிகை 52 விநாடியில் முடிவு பெறுகின்றது. நமக்கு வேண்டிய ஜனன காலமாகிய நாழிகை 3 விநாடி $12\frac{1}{2}$, நாழிகை 2 விநாடி 20-க்கு மேற்பட்டு நாழிகை 7 விநாடி 52-க்குள் இருப்பதால் ஜனன காலத்தில் துலா லக்கினம் என்று ஏற்படுகின்றது. மேலும் துலா லக்கினம் 2 நாழிகை 20 விநாடிக்கு ஆரம்பிப்பதால் ஜனன காலமாகிய நாழிகை 3 விநாடி $12\frac{1}{2}$-யில் இருந்து நாழிகை 2 விநாடி 20-யைக் கழிக்க வருகின்ற 0 நாழிகை $52\frac{1}{2}$ விநாடிதான் துலா லக்கினத்தில் செல்லான நாழிகை விநாடியாகும். இப்போது துலா லக்கினத்தில் எவ்வளவு பாகம் அதாவது எவ்வளவு பாகை கலை செல்லானது என்பதைக் கணிப்போம். துலா லக்கினத்தில் செல்லான நாழிகை 0 விநாடி $52\frac{1}{2}$-யை விநாடியாக மாற்ற $52\frac{1}{2}$ விநாடி வரும். துலா ராசியின் இராசிமானமாகிய நாழிகை 5 விநாடி 32-யை விநாடியாக மாற்ற 332 விநாடி வரும். துலா ராசியின் பிரமாணமாகிய 30 பாகையைக் கலையாக மாற்ற 1,800 கலை வரும். இந்த இராசி பிரமாண மாகிய 1,800-யை, இராசியில் செல்லான விநாடியாகிய $52\frac{1}{2}$-ஆல் பெருக்கி துலா ராசியின் இராசிமானமாகிய 332-ஆல் வகுக்க வருகின்ற ஈவு கலை ஆகும். இப்படிப் பெருக்கி வகுக்க ஈவு 285 கலை வரும். இதைப் பாகையாக்க 4 பாகை 45 கலை வரும். ஆகையால் ஜனன காலத்தில் துலா ராசியில் செ

லானது பாகை 4 கலை 45 ஆகும். 12-வது வாக்கியத்தைப் பார்த்தால் துலா ராசியின் ஆரம்ப ஸ்புடம் பாகை 180 கலை 0 ஆகும். இத்துடன் மேலே வந்த பாகை 4-45 கலையைக் கூட்ட வருகின்ற 184 பாகை 45 கலையே ஜெனன காலத்தில் உதய லக்கினத்தின் ஸ்புடமாகும் இதைத்தான் இலக்கின ஸ்புடம் என்று சொல்லுகிறது வழக்கம். ஆகையால் இலக்கின ஸ்புடம் பாகை 184 கலை 45 என்பதாம்.

மேலே சொல்லிய பிரகாரம் இலக்கின ஸ்புடங் கணிப்பது ஒரு வழியாகும். இன்னொரு வழி இருக்கின்றது. அது மேலே சொல்லிய வழியைவிட கொஞ்சந் துல்லியமானது இந்த வழியில் சாயன இராசிமான சங்கியை உபயோகித்து இலக்கின ஸ்புடத்தைச் சாயன ரீதியாய்க் கணித்து அதிலிருந்து அயனம்ச ஸ்புடத்தைக் கழித்து நமக்குத் தேவையான நிரயன லக்கின ஸ்புடத்தை அடைவது. (முந்தி சொல்லிய "ஜாதகம் எழுதவேண்டிய முறை என்பதை" இங்கு ஒரு முறை வாசிக்கவும்).

இப்போது சாயன ரீதியாய் இலக்கின ஸ்புடங் கணிப்போம். ஜெனன தினத்தில் சூரிய உதய வேளையில் சூரியனுடைய ஸ்புடம் 166 பாகை 59 கலை என்று முந்தி கணித்தோம். இந்த ஸ்புடம் நிரயன ஸ்புடமாகும். இத்துடன் 43-வது வாக்கியத்தில் 1869-ம் வருஷத்திற்குக் கொடுத்துள்ள அயனம்ச ஸ்புடமாகிய 21 பாகை 54 கலையைக் கூட்ட 188 பாகை 53 கலை வரும். இது சாயன ஸ்புடமாகும். அதாவது சூரிய உதய வேளையில் சூரியனுடைய சாயன ஸ்புடம் 188 பாகை 53 கலை ஆகும். ஆகையால் 12-வது வாக்கியத்தைப் பார்த்தால் சூரியன் சாயன துலா ராசியில் 8 பாகை 53 கலையில் இருப்பதாக ஏற்படும் ஆகையால் சூரிய உதய வேளையில் சாயன துலா ராசியில் 8 பாகை 53 கலை உதயமாகி இன்னும் அதில் 21 பாகை 7 கலை உதயமாக வேண்டியதாக இருக்கின்றது. ஜெயசீலர் பிறந்தவிடம் போர்பந்தர் ஆனபடியால் அவ்வூருக்குச் சாயன இராசிமான சங்கியை அடியிற் கண்டபடி ஆகும்.

| இராசியின் பெயர். | சாயன இராசி மானம். நாழி—விநாடி. | இராசியின் பெயர். | சாயன இராசி மானம். நாழி—விநாடி. |
|---|---|---|---|
| மேஷம் | 3—50 | மிதுனம் | 5— 7 |
| ரிஷபம் | 4—18 | கடகம் | 5—39 |

| | நாழி—விநாடி | | நாழி—விநாடி |
|---|---|---|---|
| சிம்மம் | 5—37 | தனுசு | 5—39 |
| கன்னி | 5—24 | மகரம் | 5— 7 |
| துலாம் | 5—24 | கும்பம் | 4—18 |
| விருச்சிகம் | 5—37 | மீனம் | 3—50 |

மொத்தம் நாழிகை 59-50 விநாடி.

மேலே கொடுத்துள்ள 12 இராசிமான சங்கியையில் பார்த்தால் சூரியன் இருக்கின்ற சாயன துலா ராசி முழுவதும் உதயமாக நாழிகை 5-24 விநாடி ஆகின்றது. சூரிய உதய காலத்தில் சாயன துலா ராசியில் இன்னும் உதயமாக வேண்டியது 21 பாகை 7 கலை ஆகும். 30 பாகைகள் அடங்கிய சாயன துலா ராசி உதயமாக 5 நாழிகை 24 விநாடி ஆகும் என்றால் 21 பாகை 7 கலை உதயமாக இன்னும் எவ்வளவு நாழிகை விநாடி செல்லும் என்பதை அறியவேண்டியது. இதைப் பின் வருமாறு அறியவும். சாயன துலா ராசியின் சங்கியையாகிய 5 நாழிகை 24 விநாடியை விநாடியாக மாற்ற 324 விநாடி வரும் 21 பாகை 7 கலையை கலையாக மாற்ற 1,267 கலை வரும். ஒரு ராசியின் பிரமாணமாகிய 30 பாகையைக் கலையாக மாற்ற 1,800 கலை வரும். இன்னும் சாயன துலா ராசியில் உதயமாக வேண்டிய பாகமாகிய 1,267-ஐ இராசிமானமாகிய 324-ஆல் பெருக்கி இராசி பிரமாணமாகிய 1,800-ஆல் வகுக்க வருகின்ற ஈவு விநாடியாகும். இப்படி பெருக்கி வகுக்க ஈவு 228 ஆகும். இதை நாழிகையாக்க 3 நாழிகை 48 விநாடி வரும். ஆகையால் சாயன துலா ராசி முழுவதும் உதயமாக இன்னும் நாழிகை 3-48 விநாடி செல்லவேண்டும் என்பதாம். அதாவது சாயன துலா ராசி சூரிய உதயத்திலிருந்து 3 நாழிகை 48 விநாடியில் முடிகிறது என்பதாம் ஆகையால் ஜேயசீலரின் ஜெனன நாழிகை 3-12½ விநாடியானதால் ஜெனனமாகும்போது ஜெனன லக்கினம் சாயன துலா ராசி என்று அறியவும். இப்போது ஜெனனமான தினத்தில் சூரிய உதயத்திலிருந்து ஜெனன நாழிகை 3-12½ விநாடியில் சாயன துலா ராசியில் எவ்வளவு உதயம் என்பதை அறியலாம். 3 நாழிகை 12½ விநாடியை விநாடியாக மாற்ற 192½ விநாடி வரும். இராசிமானமாகிய நாழிகை 5-24 விநாடியை விநாடியாக மாற்ற 324 விநாடி வரும். இராசிப் பிரமாணமாகிய 30 பாகையை கலையாக்க 1,800 கலை வரும். நமக்குத் தேவையான விநாடியான 192½-யை இராசி பிரமாணமாகிய 1,800-ஆல் பெருக்கி இராசிமானமாகிய 324-ஆல்

வகுக்க வருகின்ற ஈவு கலையாகும். இப்படிப் பெருக்கி வகுக்க ஈவு 1,069 வரும். இதைப் பாகையாக்க 17 பாகை 49 கலை வரும். ஆகையால் சூரிய உதயத்திலிருந்து ஜெனன காலம் வரையில் சாயன துலா ராசியில் 17 பாகை 49 கலை உதயம் என்று ஏற்படும். சூரிய உதய வேளையில் சாயன சூரிய ஸ்புடம் 188 பாகை 53 கலை என்று கணித்து வைத்திருக்கின்றோம். இந்த 188 பாகை 53 கலையுடன் 17 பாகை 49 கலையைக் கூட்ட 206 பாகை 42 கலை ஆகும். இந்த 206 பாகை 42 கலைதான் சாயன ஜென்ம லக்கினம் அல்லது சாயன இலக்கினமாகும். ஆகையால் சாயன ரீதியாய் இலக்கின ஸ்புடம் பாகை 206-42 கலை ஆகும். இதிலிருந்து அவ்வருஷத்திற்குரிய அயனாம்சமாகிய 21 பாகை 54 கலையைக் கழிக்க வருகின்ற 184 பாகை 48 கலையே நிரயன லக்கின ஸ்புடமாகும். ஆகையால் நமக்குக் கடைசியாய்த் தேவையான இலக்கின ஸ்புடம் 184 பாகை 48 கலை ஆகும். 12-வது வாக்கியத்தைப் பார்த்தால் ஜென்ம லக்கினம் துலா ராசி என்றும், அதில் 4 பாகை 48 கலை செல்லானது என்றும் ஏற்படும்.

இலக்கினம் கணிக்கவேண்டிய முறையை ஜெயசீலரின் ஜெனன வேளையில் நேரிட்ட இலக்கினத்தைக் கணிக்கும் உதாரணத்தால் இதுவரையிலும் விளக்கிக்காட்டினோம். இந்த முறையை இன்னொரு உதாரணத்தால் விளக்கிக் காட்டுவோம். (1) வர்த்தமான கலியுகாதி 5029 பிரபவஹு சித்திரைமீ 2உக்குச் சரியான இங்கிலீஷ் 1927ஹு ஏப்ரல்மீ 14உ வியாழக்கிழமை சூரிய உதயாதி நாழிகை 37 விநாடி 19-க்கு ஒரு குழந்தை சென்னையில் ஜெனனமானால் அதனுடைய ஜென்ம இலக்கினம் கணிப்போம். 2உ சூரிய உதயம் கணிக்க, பிரபவ வருஷத்திய வி. ஜி. ராஜன் சுத்த திருக்கணித பஞ்சாங்கத்தில் 10-வது பக்கத்தைப் பார்த்தால் சித்திரைமீ 1உயில் சூரிய உதயம் காலை 6 மணி 1 நிமிஷத்தில் நேரிட்டது என்றும், 11உ காலை 5 மணி 56 நிமிஷத்தில் நேரிட்டதென்றும் ஏற்படும் ஆகையால் சூரிய உதயத்தில் வித்தியாசம் 6-1-ல் 5-56-ஐக் கழிக்க 5 நிமிஷம் வரும். இந்த 5 நிமிஷ வித்தியாசம் 10 தினத்தில் நேரிடுகின்றது. ஆகையால் தினம் 1-க்கு வித்தியாசம் $\frac{1}{2}$ நிமிஷம் ஆகும் நமக்கு வேண்டிய தினமாகிய 2உ 1உயிலிருந்து ஒரு தினமானதால் இந்த ஒரு தினத்திற்குச் சூரிய உதயத்தில் வித்தியாசம் $\frac{1}{2}$ நிமிஷம் ஆகும. சூரிய உதயம் 1உக்கு மேல் 11உ வரையிலும் பார்த்தால் நாளுக்கு

நாள் முந்தியாக நிகழ்வதால் சூரிய உதயம் 2உயில் 1உயைவிட ½ நிமிஷம் முந்தி நேரிடவேண்டும். அதாவது 2உ சூரிய உதயம் 6 மணி ½ நிமிஷத்தில் நேரிட்டது என்று ஏற்படும்.

(2) பிறகு சூரிய உதய வேளையில் சூரியனுடைய சாயன ஸ்புடம் கணிக்க வேண்டியது. இதைப் பின்வருமாறு கணிக்கவும். பிரபவ வருஷத்திய வி. ஜி. ராஜன் பஞ்சாங்கத்தில் 42-வது பக்கத்தில் நவக் கிரக ஸ்புடத்தில் சித்திரைமீ 1உக்கு எதிரில் சூரியனுடைய கலத்தில் பாகை 0-21 கலை போட்டிருக்கின்றது. அதாவது 1உ விடியற்காலம் (அதாவது பொழுது விடிந்தால் 2உ) 5 மணி 30 நிமிஷத்தில் சூரியனுடைய ஸ்புடம் பாகை 0-21 கலை ஆகும் என்பதாம். இந்த மணி 5 நிமிஷம் 30-ல் இருந்து கணக்கிட சூரிய உதய வேளையாகிய மணி 6-½ நிமிஷம் என்பது மணி 5 நிமிஷம் 30-ல் இருந்து 30½ நிமிஷ நேரமாகும். மேலும் 2உயின் ஸ்புடமாகிய 1 பாகை 20 கலையிலிருந்து 1உயின் ஸ்புடமாகிய பாகை 0-21 கலையைக் கழிக்க வருகின்ற பாகை 0-59 கலையே சூரியனுடைய தினகதி யாகும். (தினகதி என்றால் என்ன என்பதைப்பற்றி 6-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் விதத்தைப் படித்தால் தெரியவரும்). இப்போது நமக்கு 1உயும், 2உயும் காலை 5 மணி 30 நிமிஷத்திற்குச் சூரிய ஸ்புடமும், சூரியனுடைய தினகதியும் தெரிந்திருப்பதால் சூரியஉதய வேளையாகிய 6 மணி ½ நிமிஷத்தில் சூரியனுடைய ஸ்புடத்தை 6-வது வாக்கியத்தை உபயோகிக்கும் விதத்தில் சொல்லிய பிரகாரம் கணிக்க வேண்டியது. இப்படிக் கணிக்கச் சூரிய உதய வேளையில் சூரிய ஸ்புடம் 0 பாகை 22 கலை ஆகும். இது நிரயன ஸ்புடமாகும். பிரபவ வருஷத்திய வி. ஜி. ராஜன் பஞ்சாங்கம் 15-வது பக்கத்தின் தலைப்பின் அயன ஸ்புடம் பாகை 22-42-23 என்று போட்டிருக்கின்றது. அதாவது இவ்வருஷத்தில் அயன ஸ்புடம் பாகை 22 கலை 42 விகலை 23 அல்லது பாகை 22 கலை 42 ஆகும். (43-வது வாக்கியம் பார்க்கவும்.) இந்த அயனும்சமாகிய 22 பாகை 42 கலையை முந்தி கணித்து வந்த நிரயன சூரிய ஸ்புடமாகிய பாகை 0-22 கலையுடன் கூட்ட வருகின்ற 23 பாகை 4 கலையே சாயன ஸ்புடமாகும். ஆகையால் சூரிய உதய வேளையில் சூரியனுடைய சாயன ஸ்புடம் பாகை 23-4 கலை ஆகும்.

(3) சூரிய உதய வேளையில் உதய லக்கினமும் இந்த உதயலக்கினத்தில் இருப்பும் கணிக்க;-சாயன சூரிய ஸ்புடம் 23 பாகை 4

கலை என்று மேலே கணித்தோம். 12-வது வாக்கியத்தைப் பார்த்தால் சூரியன் சாயன மேஷ ராசியில் இருப்பதாகவும், அந்த ராசியில் 23 பாகை 4 கலை சென்றிருப்பதாகவும் ஏற்படும். அதாவது சூரிய உதய வேளையில் சாயன மேஷ ராசி உதயமாகி அதில் 23 பாகை 4 கலை செல்லானதென்றும், 30 பாகையில் 23 பாகை 4 கலையைக் கழிக்க வருகின்ற 6 பாகை 56 கலை இன்னும் செல்லாக வேண்டியதென்றும் ஏற்படும். இந்த 6 பாகை 56 கலை செல்ல எவ்வளவு நேரம் ஆகுமென்பதைக் கணிப்போம். இந்த 6 பாகை 56 கலையைக் கலையாக மாற்ற 416 கலை வரும். மேலும் பிரபவ வருஷத்திய வி. ஜி. ராஜன் பஞ்சாங்கம் 45-வது பக்கத்தில் சாயன இராசிமான சங்கியையில் ஜெனனவிடமாகிய சென்னைக் குரிய 13-வது அட்சாம்சத்திற்கு நேராய் மேஷாதி 12 இராசிகளுக்கும் அடியிற் கண்டபடி இராசிமானம் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

| இராசிகளின் பெயர். | சாயன இராசிமான சங்கியை. நாழிகை—விநாடி. | இராசிகளின் பெயர். | சாயன இராசிமான சங்கியை. நாழிகை—விநாடி. |
|---|---|---|---|
| மேஷம் | 4—11 | துலாம் | 5— 3 |
| ரிஷபம் | 4—36 | விருச்சிகம் | 5—20 |
| மிதுனம் | 5—13 | தனுசு | 5—32 |
| கடகம் | 5—32 | மகரம் | 5—13 |
| சிம்மம் | 5—20 | கும்பம் | 4—36 |
| கன்னி | 5— 3 | மீனம் | 4—11 |

ஆக மொத்தம் நாழிகை 59—50 விநாடி ஆகும்.

சாயன மேஷ ராசிக்கு மேலே கொடுத்துள்ள 4 நாழிகை 11 விநாடியை விநாடியாக மாற்ற 251 விநாடி வரும். ஆகையால் சாயன மேஷ ராசியிலுள்ள 30 பாகை அல்லது 1,800 கலை முழுவதும் உதயமாக 251 விநாடி ஆகும் என்றால் அந்த சாயன மேஷ ராசியில் 6 பாகை 56 கலை அல்லது 416 கலை உதயமாக எவ்வளவு விநாடியாகும் என்பதை இப்போது கணிக்க வேண்டியது. உதயமாக வேண்டிய பாகமாகிய 416-ஐ இராசிமானமாகிய 251-ஆல் பெருக்கி இராசி பிரமாணமாகிய 1,800-ஆல் வகுக்க வருகின்ற ஈவு விநாடியாகும். இப்படி வகுக்க 58 விநாடி வரும். ஆகையால் சாயன மேஷ ராசியில் இன்னும் உதயமாக வேண்டிய பாகமாகிய 6 பாகை 56 கலை உதயமாகச் சூரிய உதயத்திலிருந்து 58 விநாடி

செல்லும் என்பதாம். இந்த 58 விநாடியைத்தான் ஜெனன தேதி யில் இராசி இருப்பு என்று சொல்லுவது வழக்கம்.

பிறகு நமக்குச் சூரிய உதயாதி நாழிகை 37-19 விநாடிக்கு ஜென்ம லக்கினம் தேவையானதால் மேலே வந்த 0 நாழிகை 58 விநாடியுடன் சூரிய உதய வேளையில் எந்த ராசி உதயமோ அந்த இராசிக்கு அடுத்தாற்போல் வருகின்ற இராசிகளின் இராசிமான சங்கியை 37 நாழிகை 19 விநாடி வருகின்ற வரையிலும் அடியில் கண்டபடி கூட்டவும்.

| | | | | |
|---|---|---|---|---|
| ஜெனன உயில் சாயன மேஷராசி யிருப்பு நாழிகை | | | 0—58 | விநாடி |
| சாயன ரிஷப ராசி முழுவதும் உதயமாக (மேலே கொடுத்துள்ள ராசிமானம் பார்க்கவும்) | | | 4—36 | ,, |
| சாயன மிதுனம் | .... | .... | 5—13 | ,, |
| ,, கடகம் | .... | .... | 5—32 | ,, |
| ,, சிம்மம் | .... | .... | 5—20 | ,, |
| ,, கன்னி | .... | .... | 5— 3 | ,, |
| ,, துலாம் | .... | .... | 5— 3 | ,, |
| ,, விருச்சிகம் | .... | .... | 5—20 | ,, |

இதுவரையிலும் கூட்ட நா. 37-5 விநாடி வரும்.

இதனால் சூரிய உதயத்திலிருந்து 37 நாழிகை 5 விநாடியில் சாயன மேஷம் முதல் சாயன விருச்சிகம் வரையிலுமுள்ள ராசிகள் உதயமாகிவிடுகின்றது என்றும், இதற்குமேல் அடுத்த இராசியாகிய சாயன தனுசு ராசி உதயமாகின்றது என்றும் ஏற்படுகிறது. மேலே கொடுத்துள்ள 12 இராசிகளின் சாயன இராசிமான சங்கியைப் பார்த்தால் சாயன தனுசு ராசியின் சங்கியை 5 நாழிகை 32 விநாடி ஆகும். அதாவது சாயன தனுசு ராசி ஜெனன தினத்தில் சூரிய உதயாதி நாழிகை 37-5 விநாடிக்கு உதயமாக ஆரம்பித்து அதற்கு மேல் 5 நாழிகை 32 விநாடியில் முழுவதும் உதயமாகிவிடுகின்றது. அதாவது 37 நாழிகை 5 விநாடியில் உதயமாக ஆரம்பித்து அத்துடன் 5 நாழிகை 32 விநாடி கூட்ட வருகின்ற 42 நாழிகை 37 விநாடியில் முழுவதும் உதயமாகிவிடுகின்றது. இதையே சாயன தனுசு ராசி ஜெனன தினத்தில் சூரிய உதயாதி 37 நாழிகை 5 விநாடி முதல் சூரிய உதயாதி நாழிகை 42-37 விநாடி வரையிலும் உதயமாகின்றதென்று இன்னொரு விதமாகச் சொல்லுவது வழக்கம். ஆகையால் நமக்குத் தேவையான ஜெனன காலமாகிய 37 நாழிகை 19 விநாடிக்குச் சாயன தனுசு ராசி உதயமாகின்றதென்று ஏற்படுகிறது.

றது. பிறகு ஜெனன காலமாகிய 37 நாழிகை 19 விநாடியில் சாயன தனுசு ராசியில் எவ்வளவு உதயமானது என்பதைக் கணிக்க வேண்டியது. சாயன தனுசு ராசி 37 நாழிகை 5 விநாடியில் உதயமாவதால், 37 நாழிகை 19 விநாடி வரையில் அந்தச் சாயன தனுசு ராசி உதயமாகி 0 நாழிகை 14 விநாடி ஆகின்றது இந்த 0 நாழிகை 14 விநாடியைத்தான் ஜெனன காலத்தில் சாயன தனுசு ராசியில் செல்லான நாழிகை விநாடி என்று சொல்லுவது வழக்கம். சாயன தனுசு ராசியின் சங்கியையாகிய 5 நாழிகை 32 விநாடியை விநாடியாக்க 332 விநாடி வரும். இராசியின் பிரமாணமாகிய 30 பாகையைக் கலையாக்க 1,800 கலை வரும். சாயன தனுசு ராசியில் செல்லான 0 நாழிகை 14 விநாடியை விநாடியாக மாற்ற 14 விநாடி வரும். இராசிப் பிரமாணமாகிய 1,800-யைச் செல்லான விநாடியாகிய 14-ஆல் பெருக்கி இராசியின் சங்கியையாகிய 332-ஆல் வகுக்க வருகின்ற ஈவு கலை ஆகும். இப்படி வகுக்க 75 கலை வரும். இந்தப் பாகையைக் கலையாக மாற்ற 1 பாகை 15 கலை வரும். இந்த 1 பாகை 15 கலை தான் ஜெனன காலத்தில் சாயன தனுசு ராசியில் உதயமான அல்லது செல்லான பாகம் ஆகும். பிறகு 12-வது வாக்கியத்தைப் பார்த்தால் தனுசு இராசி ஆரம்பத்திற்கு ஸ்புடம் 240 பாகை 0 கலை என்று ஏற்படும். இத்துடன் அந்த ராசியில் செல்லான 1 பாகை 15 கலையைக் கூட்ட 241 பாகை 15 கலை வரும். ஆகையால் ஜெனன காலத்தில் சாயன தனுசு ராசியில் செல்லான பாகத்தின் ஸ்புடம் 241 பாகை 15 கலை ஆகும். இதிலிருந்து ஜெனன காலத்தில் அயனும்சமாகிய 22 பாகை 42 கலையைக் கழிக்க 218 பாகை 33 கலை வரும். இந்த 218 பாகை 33 கலை தான் ஜெனன காலத்தில் ஜென்ம லக்கினத்தின் நிரயன ஸ்புடம் ஆகும். மறுபடியும் 12-வது வாக்கியத்தைப் பார்த்தால் 218 பாகை 33 கலைக்கு விருச்சிக ராசி என்று ஏற்படுவதுமன்றி 218 பாகை 33 கலையிலிருந்து விருச்சிக ராசி ஆரம்பமாகிய 210 பாகை 0 கலையை கழிக்க வருகின்ற 8 பாகை 33 கலை இந்த விருச்சிக ராசியில் செல்லானது என்றும் ஏற்படும். ஆகையால் ஜெனன காலத்தில் ஜென்ம உதய லக்கினம் அல்லது இலக்கினம் விருச்சிகம் என்றும், அதில் 8 பாகை 33 கலை செல்லானதென்றும், ஜென்ம உதய லக்கினத்தில் அல்லது ஜென்ம லக்கினத்தின் ஸ்புடம் 218 பாகை 33 கலை என்றும் ஏற்படும். இந்த வழி பொது வழி. இந்த வழியை எப்போதும் உபயோகிக்கவும். ஜுலக்கினம்

முக்கியமானதாலும், அதைச் சரியாயக் கணிப்பது அவசியமாவ தாலும் அதைக் கணிக்கும் விதத்தைப்பற்றி இங்கு விவரமாகச் சொல்ல வேண்டியது அவசியம் என்று ஏற்பட்டதாலும் கூடிய மட்டும் சந்தேகங்களை நிவர்த்தி செய்யும் பொருட்டு விவரமாக இலக்கினம் கணிக்கும் வழி சொல்லப்பட்டிருக்கின்றது. இதில் கூறியதே அடிக்கடி கூறப்படுகின்ற குற்றம் இருந்தால் அது மன்னிக்கத்தக்கதாகும். இன்னும் அதிக துல்லியமாக லக்கினம் கணிக்க ஒரு வழி உண்டு. அதற்கு வான சாஸ்திரம் தெரிய வேண்டி இருக்கின்றது. ஆனால் நாம் மேலே உபயோகித்த வழி யால் நமக்குத் தேவையான வரையில் துல்லியமாக கணிக்கக் கூடுமாதலால் அந்த வழியே நமக்கு போதுமானது என்று அறியவும்.

7. ஜெனன காலத்தில் ஓரை கணிக்க:—ஜென்ம வாரம் சனிக்கிழமை, ஜெனன நாழிகை 3 விநாடி $12\frac{1}{2}$-க்குக் கணிக்க:— 32 (4)-வது வாக்கியத்தில் 2-வது வரிசை எண்ணிற்கு நேராய் $2\frac{1}{2}$ நாழிகை முதல் 5 நாழிகை வரையிலும் சனிக்கிழமை காலத் தில் குரு ஓராதிபதி என்று போட்டிருக்கின்றது ஆகையால் ஜெனன தினத்தில் 3 நாழிகை $12\frac{1}{2}$ விநாடிக்கு குரு ஓராதிபதி ஆகின்றார். ஆகையால் ஜெனனம் குரு ஓரையில் நேர்ந்தது என்று அறியவும்.

## சப்தவர்க்கச் சக்கிரங்கள்.

பிறகு நாம் சப்த வர்க்கம் என்கிற 1 இராசி, 2 நவாம்சம், 3 திரேகாணம், 4 துவாதசாம்சம், 5 ஓரை, 6 திரிம்சாம்சம், 7 சப்தாம்சம் ஆகிய இவைகளைப் போடுவோம். இதற்கு ஜெனன காலத்தில் நவக்கிரக ஸ்புடங்களும் ஜென்ம லக்கின ஸ்புடமும் தெரியவேண்டும். இவைகளை நாம் முந்தியே கணித்து வைத்திருப் பதால் இவைகளை இங்கு அடியிற்கண்டபடி எடுத்து எழுதுவோம்.

### ஜெனன காலத்தில் கிரக நிலை.

| கிரகத்தின் பெயர். | ஸ்புடம் பாகை—கலை. | கிரகத்தின் பெயர். | ஸ்புடம் பாகை—கலை |
|---|---|---|---|
| சூரியன் | 167—2 | சுக்கிரன் | 204—32 |
| சந்திரன் | 118—10 | சனி | 230—27 |
| செவ்வாய் | 206—30 | இராகு | 102—17 |
| புதன் | 191—52 | கேது | 282—17 |
| குரு | 28—17(வக்ரி) | இலக்கினம் | 184—48 |

(1) இராசி அல்லது இராசிச் சக்கிரம் போட :—சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை 2 கலை ஆகும். 12-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியை இங்கு ஒரு முறை படித்துவிட்டு 12-வது வாக்கியத்தைப் பார்த்தால், சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை 2 கலையானால் சூரியன் கன்னியில் இருப்பதாக ஏற்படும். ஆகையால் சூரியனைக் கன்னியா ராசியில் போடவேண்டியது. இவ்விதமாகவே ஒவ்வொரு கிரகத்தையும் இராசிகளில் அமைக்க இங்கு காட்டியபடி இராசிச் சக்கிரம் ஏற்படும்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | | |
| | இராசி சக்கிரம் | | ரா. சந். |
| கே. | | | |
| | சனி | அ. சு. பு. ல. | சூ. |

1-வது கட்டம்.

குறிப்பு :—இந்த கட்டத்தில் கிரகங்கள் இராசிகளில் இருக்கும் வரிசைக் கிரமமாகப் போடப்பட்டிருக்கின்றன. அதாவது கடக ராசியில் முதலில் இராகுவும், அதற்குப் பின் சந்திரனும் இருப்பதால் இராகுவை முதலில் போட்டு அதன் பின் சந்திரனைப் போட்டிருக்கின்றது. இவ்விதமாகவே துலா ராசியில் முதலில் இலக்கினமும், அதற்குப் பின் புதனும், அதற்குப் பின் சுக்கிரனும், அதற்குப் பின் அங்காரகனும் இருப்பதாக அவைகளின் ஸ்புடத்தைப் பார்த்தால் தெரிவதால் அந்த வரிசையாக அவைகள் துலா ராசியில் போடப்பட்டிருக்கின்றன. இவ்விதமாகக் கிரகங்களை இராசிச் சக்கிரத்தில் போடுவோமானால் இராசிச் சக்கிரத்தைப் பார்த்தவுடனே கிரக வரிசை நன்றாய்ப் புலப்படும் என்ற அபிப்பிராயம்.

| | | | |
|---|---|---|---|
| சந். | கே. | சு-அ. | சூ. |
| | நவாம்சை சக்கிரம் | | |
| சனி. பு. | | | |
| குரு | ல. | ரா. | |

2-வது கட்டம்.

(2) நவாம்சம் அல்லது நவாம்சை சக்கிரம் போட :—சூரி னுடைய ஸ்புடம் 167 பாகை 2 கலை ஆகும். 13-வது வாக் யத்தை உபயோகப்படுத்தும் வழியை இங்கு ஒரு முறை படித் விட்டு 13-வது வாக்கியத்தைப் பார்த்தால் சூரியனுடைய ஸ்புட 167 பாகை 2 கலை ஆனல் சூரியன் மிதுன நவாம்சையில் இருப் தாக ஏற்படும். ஆகையால் சூரியனை நவாம்சை சக்கிரத்தில் மி னத்தில் போடவேண்டியது. இவ்விதமாகவே ஒவ்வொரு கிர தையும் நவாம்சை சக்கிரத்தில் அடைக்க இங்கு காட்டியப நவாம்சை சக்கிரம் ஏற்படும்.

| | | | |
|---|---|---|---|
| சந். | | கே. | சு-அ. |
| பு. | திரேகாண சக்கிரம் | | சனி |
| சூ. | | | |
| குரு | ரா. | ல. | |

3-வது கட்டம்.

(3) திரேகாணம் அல்லது திரேகாணச் சக்கிரம் போட :— சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை 2 கலை ஆகும். 14-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியை இங்கு ஒரு முறை வாசித்துவிட்டு 14-வது வாக்கியத்தைப் பார்த்தால் சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை 2 கலை ஆனால் சூரியன் மகரத் திரேகாணத்தில் இருப்பதாக ஏற்படும். ஆகையால் சூரியனைத் திரேகாணச் சக்கிரத்தில் மகரத்தில் போடவேண்டியது. இவ்விதமாகவே ஒவ்வொரு கிரகத்தையும் திரேகாணச் சக்கிரத்தில் அடைக்க இங்கு காட்டியபடித் திரேகாணச் சக்கிரம் ஏற்படும்.

| | | | |
|---|---|---|---|
| குரு-சு. | | கே. | சந். |
| பு. | துவாதசாம்ச சக்கிரம் | | சு-சனி |
| | | | அ. |
| | ல-ரா. | | |

4-வது கட்டம்.

துவாதசாம்சம் அல்லது துவாதசாம்ச சக்கிரம் போட :— சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை 2 கலை ஆகும். 15-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியை இங்கு ஒரு முறை வாசித்துவிட்டு 15-வது வாக்கியத்தைப் பார்த்தால் சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை 2 கலை ஆனால் சூரியன் மீனத் துவாதசாம்சத்தில் இருப்பதாக ஏற்படும். ஆகையால் சூரியனைத் துவாதசாம்சச் சக்கிரத்தில் மீனத்தில் போடவேண்டியது. இவ்விதமாகவே ஒவ்வொரு கிரகத்தையும் துவாதசாம்சச் சக்கிரத்தில் அடைக்க இங்கு காட்டியபடி துவாதசாம்சச் சக்கிரம் ஏற்படும்.

5. ஓரை அல்லது ஓராதிபதி அறிய :—சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை 2 கலை ஆகும். 16-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியை இங்கு ஒரு முறை வாசித்துவிட்டு 16-வது வாக்கியத்தைப் பார்த்தால் சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை

2. கலை ஆனால் சூரியனுக்குச் சூரியனே ஓராதிபதியாக வருகின்றான் என்று ஏற்படும். இவ்விதமே ஒவ்வொரு கிரகத்திற்கும் ஓராதிபதி பார்க்க அடியிற்கண்டபடி ஓராதிபதி வருவார்கள்:

ஓரை.

| கிரகங்கள் | சூ | சந் | அ | பு | குரு | சு | சனி | ரா | கே | லக்கினம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஓராதிபதி | சூ | சூ | சந் | சூ | சந் | சந் | சூ | சந் | சந் | சூ |

5-வது கட்டம்.

இந்த 5-வது கட்டத்தால் சூரியனுக்குச் சூரியனும், சந்திரனுக்குச் சூரியனும், செவ்வாய்க்குச் சந்திரனும், புதனுக்குச் சூரியனும், குருவிற்குச் சந்திரனும், சுக்கிரனுக்குச் சந்திரனும், சனிக்குச் சூரியனும், ராகு கேதுகளுக்குச் சந்திரனும், லக்கினத்திற்குச் சூரியனும் ஓராதிபதி என்று அறியவும். குருவிற்குச் சந்திரன் ஓராதிபதி என்று சொல்வதற்குப் பதிலாக குரு சந்திரனுடைய ஓரையில் இருக்கின்றார் என்று சொல்லலாம். எல்லா கிரகங்களுக்கும் சூரியன் அல்லது சந்திரன் ஓராதிபதியாக வருவார்கள் என்று அறியவும்.

6. திரிம்சாம்சம் அல்லது திரிம்சாம்சாதிபதி அறிய:—சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை 2 கலை ஆகும். 17-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியை இங்கு ஒரு முறை வாசித்து விட்டு 17-வது வாக்கியத்தைப் பார்த்தால் சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை 2 கலை ஆனால் சூரியனுக்குக் குரு திரிம்சாம்சாதிபதியாக வருகின்றார் என்று ஏற்படும். இவ்விதமாகவே ஒவ்வொரு கிரகத்திற்கும் திரிம்சாம்சாதிபதி பார்க்க அடியிற்கண்டபடி திரிம்சாம்சாதிபதிகள் வருவார்கள்.

திரிம்சாம்சம்

| கிரகங்கள் | சூ | சந் | அ | பு | குரு | சு | சனி | ரா | கே | லக்கினம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| திரிம்சாம சாதிபதி | குரு | அ | சு | குரு | சு | பு | சனி | குரு | குரு | அ |

6-வது கட்டம்.

| | | | |
|---|---|---|---|
| ரா-சு. | அ. | | சூ |
| | சப்தாம்சச் சக்கிரம் | | சந். |
| | | | |
| பு. | ல. | குரு | சனி-கே. |

7-வது கட்டம்.

7. சப்தாம்சம் அல்லது சப்தாம்சச் சக்கிரம் போட :—சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை 2 கலை ஆகும் 18-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியை இங்கு ஒரு முறை வாசித்துவிட்டு 18-வது வாக்கியத்தைப் பார்த்தால் சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை 2 கலை ஆனல் சூரியன் மிதுன சப்தாம்சத்தில் இருப்பதாக ஏற்படும். ஆகையால் சூரியனை சப்தாம்சச் சக்கிரத்தில் மிதுனத்தில் போடவேண்டியது. இவ்விதமாகவே ஒவ்வொரு கிரகத்தையும் சப்தாம்சச் சக்கிரத்தில் அடைக்க இங்கு காட்டிய சப்தாம்சச் சக்கிரம் ஏற்படும்.

8. பாவச் சக்கிரம் போட :—பாவச் சக்கிரம் என்றால் என்னவென்பதும், அதைப் போடும் வழியும் 9-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியில் சொல்லப்பட்டிருக்கின்றன. அதை இங்கு ஒரு முறை படிக்கவும். இந்த ஜாதகருடைய பாவச் சக்கிரத்தைப் போடும் வழியை உதாரணமாக 9-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் விதத்தில் கணித்துக் காட்டியிருப்பதால் அதன் பிரகாரம் இந்த ஜாதகருடைய பாவ ஸ்புடங்கள் அடியிற் கண்டபடி ஆகும்.

| பாவம். | ஸ்புடம் பாகை—கலை. | பாவம். | ஸ்புடம் பாகை—கலை. |
|---|---|---|---|
| 1-வது பாவம் | 184—48 | 7-வது பாவம் | 4—48 |
| 2-வது பாவம் | 214—58 | 8-வது பாவம் | 34—58 |
| 3-வது பாவம் | 245— 8 | 9-வது பாவம் | 65— 8 |
| 4-வது பாவம் | 275—18 | 10-வது பாவம் | 95—18 |
| 5-வது பாவம் | 305— 8 | 11-வது பாவம் | 125— 8 |
| 6-வது பாவம் | 334—58 | 12-வது பாவம் | 154—58 |

யாதாயினுமொரு பாவ ஸ்புடத்திற்கும், அதற்கு அடுத்த பா[வ] ஸ்புடத்திற்கும், மத்தியை தெரிவிக்கின்ற ஸ்புடமே அடுத்[த] பாவத்தின் ஆரம்பமும், முந்திய பாவத்தின் முடிவும் ஆகும். உதாரணமாக 2-வது பாவத்தின் ஸ்புடம் 214 பாகை 58 கலையும் 3-வது பாவத்தின் ஸ்புடம் 245 பாகை 8 கலையும் ஆகும். இவ்விரண்டு ஸ்புடத்திற்கும் மத்தியை தெரிவிக்கின்ற ஸ்புடம் பாகை 230-3 கலை ஆகும். (230 பாகை 3 கலை என்பது 214 பாகை 58 கலையையும் 245 பாகை 8 கலையையுங் கூட்டி இரண்டால் வகுக்க வரும்) அல்லது 245 பாகை 8 கலையிலிருந்து 214 பாகை 58 கலையைக் கழிக்க வருகின்ற 30 பாகை 10 கலையை இரண்டா[ல்] வகுக்க வருகின்ற 15 பாகை 5 கலையை முந்தி வந்த 214 பாகை 58 கலையுடன் கூட்ட 230 பாகை 3 கலை வரும்) இந்த 230 பாகை 3 கலை என்பது 2-வது பாவத்தின் முடிவும், 3-வது பாவத்தின் ஆரம்பமுமாகும். இந்த மத்தியாகிய 230 பாகை 3 கலை "பாவ சந்தி'' என்று சொல்லப்படும். மேற்சொல்லியபடி 3-வது பாவமாகிய 245 பாகை 8 கலைக்கும், 4-வது பாவமாகிய 275 பாகை 18 கலைக்கும், மத்தியாகிய 260 பாகை 13 கலை 3-வது பாவத்தின் முடிவும், 4-வது பாவத்தின் ஆரம்பமும் ஆகும். ஆகையா[ல்] 3-வது பாவத்தின் ஆரம்ப ஸ்புடம் பாகை 230-13 கலையும் 3-வது பாவத்தின் முடிவு ஸ்புடம் பாகை 260-13 கலையும், 3-வ[து]

பாவத்தின் ஸ்புடம் பாகை 245-8 கலையும் ஆகும். ஒரு பாவ ஸ்புடத்திற்கு முந்தி இருக்கின்ற சந்திக்கு அந்தப் பாவத்தின் "ஆரம்பசந்தி'' என்றும், ஒரு பாவ ஸ்புடத்தின் பிந்தி இருக்கின்ற சந்திக்கு அந்த பாவத்தின் "முடிவு சந்தி'' என்றும் பெயர். உதாரணமாக 3-வது பாவமாகிய 245 பாகை 8 கலைக்கு முந்தி இருக்கின்ற சந்தியாகிய பாகை 230-3 கலைக்கு 3-வது பாவத்தின் ஆரம்பசந்தி என்று பெயர். பிந்தியிருக்கின்ற சந்தியாகிய பாகை 260-13 கலைக்கு 3-வது பாவத்தின் முடிவு சந்தி என்று பெயர். சந்தி அல்லது பாவசந்தி என்பது ஒரு பாவமும் மற்றொரு பாவமும் சந்திக்கின்ற இடமாகும். இது இரண்டு பாவமும், சந்திக்குமிடமாதலால் இந்த இடத்தில் எந்தப் பாவத்தினுடைய பலன்களும் கிடையாது. அதாவது இந்த இடத்தில் எந்தப் பாவத்தினுடைய பலமும் பூஜ்ஜியமாகும். ஆகையால் "பாவ சந்தி'' என்றால் பாவபலம் பூஜ்ஜியமாக இருக்கும் இடம் என்பதாம். ஒரு பாவ ஸ்புடத்திற்கு முந்தி ஆரம்பசந்தி என்கிற முந்தி சந்தியும், பிந்தி முடிவு சந்தி என்கிற பிந்தி சந்தியும் இருப்பதால், ஆரம்பசந்தியிலிருந்து அந்த பாவத்தின் பலம் அதிகப்பட்டுக் கொண்டே வந்து கடைசியாக பாவஸ்புடத்தண்டை முழு பலம் அடைந்து, பிறகு பாவஸ்புடத்தண்டையிருந்து குறைந்து கொண்டே, வந்து கடைசியாக முடிவு சந்தி என்ற பின் சந்தியில் பூஜ்ஜியத்தை அடையும். ஆகையால் ஒரு பாவஸ்புடம் என்பது அந்த பாவத்தின் முழுபலம் உள்ள இடம் என்பதாம். இதை நன்றாய்க் கவனிக்கவேண்டியது. இது பின்னால் இன்னும் விவரமாகச் சொல்லப்படும். (34-வது வாக்கியம் பார்க்கவும்).

இந்த ஜாதகருக்குப் பாவச் சக்கிரம் கீழே போடப்பட்டிருப்பதை நன்றாய்க் கவனிக்கவும். லக்கினஸ்புடமே 1-வது பாவ ஸ்புடமாகும். இந்தச் சக்கிரத்தில் 1-வது பாவத்தை முதலில் போட்டு இருக்கின்றது. இந்த பாவச் சக்கிரத்தில் கண்ட வீடுகளை இராசிச் சக்கிரத்தினுடைய இராசிகள் என்று கருதக்கூடாது. முதலில் ஒராவது பாவத்தைச் சக்கிர ஆரம்பத்தில் போட்டிருப்பதால் 1-வது பாவம் இருக்கின்ற இடம் மேஷராசி என்று கருதக் கூடாது. உண்மையிலே 1-வது பாவத்தின் ஆரம்ப ஸ்புடத்தையும், முடிவு ஸ்புடத்தையுங் கவனிக்கும்போது 1-வது பாவம் என்பது கன்னியா ராசியிலும், துலா ராசியிலும் இருப்பதாக

ஏற்படும், ஆகையால் கன்னி, துலா ராசியாதிபதிகளாகிய புத சுக்கிரன் ஆகிய இவ்விரண்டு கிரகங்களும், 1-வது பாவத்தி குடைய அதிபதிகள் அல்லது 1-வது பாவாதிபதிகள் ஆவார்க ஒரு பாவம் ஒரு இராசியிலும், இரண்டு இராசியிலும் அல்ல மூன்று இராசியிலும் இருக்கக்கூடுமாதலால் ஒரு பாவத்திற் ஒரு கிரகம், அல்லது இரண்டு கிரகம், அல்லது மூன்று கிரக பாவாதிபதிகளாக இருக்கக்கூடும் என்று அறிய வேண்டிய 1 முதல் 12 பாவங்களுக்கும் வரிசையாக ஒன்று முதல் 1 எண்கள் வரிசையாக ப்ராக்கட்டில் கொடுக்கப்பட்டிருக்கின்ற ஒரு கிரகத்தின் ஸ்புடம் எந்தப் பாவத்தில் இருக்கின்றதே அந்தப் பாவத்தில் அதாவது அந்தப் பாவ வீட்டில் அந் கிரகத்தைப் போடவேண்டியது. உதாரணமாக குருவினுடை ஸ்புடம் 28 பாகை 17 கலையானதாலும், 8-வது பாவம் 1 பாகை 53 கலை முதல் 50 பாகை 3 கலை வரையிலும் இருப்ப லும் குருவை 8-வது பாவத்தில் போட்டிருக்கிறது. இராசி சக்கிரத்தில் குரு 7-ல் இருந்தபோதிலும் பாவச் சக்கிரத்தி 8-வது பாவத்தில் இருப்பதாலும், பலன் சொல்வதற்குக் கிர களின் நிலைமையைக் கவனிக்கும்போது பாவச் சக்கிர நிலை கவனிப்பது அவசியமாதலாலும், குரு ஏழில் இருப்பதாகக் க தாமல் 8-வது பாவத்தில் இருப்பதாகக் கருதி 8-வது பா பலனைச் சொல்லவேண்டும். பாவச் சக்கிரம் போடாவிட்டா குரு ஏழில் இருப்பதாக வைத்துக்கொண்டு 7-வது பாவத்தி பலனைப் பார்க்க வேண்டியதாகும். அப்படிப் பார்ப்பதால் பல முழுவதும் தவறிப் போவதற்குச் சந்தேகமே கிடையா தற்கால ஜோதிடர்களில் பெரும்பான்மையோர் பாவச் சக்கி போடாமல் பலனைச் சொல்லுவதால் ஜாதகப் பலாபலன்க தவறிப் போகின்றன.

மேலும் குருவிற்குச் சொன்ன பிரகாரம் மற்ற கிரகங்க யும் பாவங்களில் போட அவைகள் இந்தப் பாவச் சக்கிரத்தி கண்டபடி இருப்பதாகத் தெரியவரும்.

| | | | |
|---|---|---|---|
| கு. (36) 154-58 (12) (13) 169-53 | ல (14) 184-48 (1) பு. (15) 199-53 | ச. சு (16) 214-58 (2) (17) 230-3 | சனி (3) (18) 245-8 (19) 260-13 |
| (35) 140-3 (34) 125-8 (11) சந். | | | (4) (20) 275-18 கே. (21) 290-13 |
| (33) 110-13 ராகு (32) 95-18 (10) | பாவச் சக்கிரம். | | (5) (22) 305-8 (23) 320-3 |
| (31) 80-13 (30) 65-8 (9) | (29) 50-3 (28) 34-58 (8) ஞா | (27) 19-53 (26) 4-48 (7) | (25) 349-53 (6) (24) 334-58 |

குறிப்பு:—இந்த பாவச் சக்கிரத்தில் விவரம் அடியிற் கண்டபடி ஆகும்

(1) 1-வது பாவம் பாகை 169-53 கலை முதல் பாகை 199-53 கலை வரையிலும்.

| | | |
|---|---|---|
| (2) 2-வது | 199—53 | 230— 3 |
| (3) 3-வது | 230— 3 | 260—13 |
| (4) 4-வது | 260—13 | 290—13 |
| (5) 5-வது | 290—13 | 320— 3 |
| (6) 6-வது | 320— 3 | 349—53 |
| (7) 7-வது | 349—53 | 19—53 |
| (8) 8-வது | 19—53 | 50— 3 |
| (9) 9-வது | 50— 3 | 80—13 |

| | | |
|---|---|---|
| (10) 10-வது | 80—13 | 110—13 |
| (11) 11-வது | 110—13 | 140— 3 |
| (12) 12-வது | 140— 3 | 169—53 |

(14), (16), (18), (20), (22), (24), (26), (28), (30), (32) (34), (36) இந்த நெம்பர்களுடைய பாகை-கலைகள் 25-வது பக்கத்தில் கட்டமாகக் காட்டியுள்ள பாவஸ்புடத்தில் கண்டுள்ளபடி அந்தந்தப் பாவத்தின் ஸ்புடமாகும். இந்த இடத்தில்தான் அந்தந்தப் பாவத்தின் பலம் முழுப் பலமாகும்.

(13), (15), (17), (19), (21), (23), (25), (27), (29), (31) (33), (35) இந்த நெம்பர்களுடைய பாகை-கலைகள் மேலே (1) முதல் (12) நெம்பர்களில் சொல்லியபடி முந்திய பாவத்தின் முடிவு ஸ்புடத்தையும், பிந்திய பாவத்தின் ஆரம்ப ஸ்புடத்தையும் தெரிவிக்கும். இந்த இடங்களில் எந்தப் பாவத்தின் பலமும் பூஜ்ஜியமாகும். இவ்விடங்களுக்குப் பாவசந்தி என்று பெயர்.

## கிரகங்களின் ஷட்வர்க்கப் பலம் அறிய

இது வரையிலும் ஜாதகம் சரியாய்க் கணிக்க வேண்டிய விதியைப்பற்றியும், வழியைப்பற்றியும், சப்தவர்க்கங்கள் போடும் வழியைப்பற்றியும் கவனித்தோம். ஜாதகப் பலாபலன்களை அறிய வேண்டுமானால் கிரகங்களுடைய பலத்தை முதலில் அறியவேண்டியது அவசியமானதால், இனிமேல் கிரகங்களின் பலத்தை அல்லது வலிவைக் கவனிக்கவேண்டிய முறைகளைப்பற்றி பேசுவோம்.

(1) கிரகங்களின் திருக்பலம் அல்லது பார்வையின் அளவை அறிய :—19 வது வாக்கியத்தையும், 20-வது வாக்கியத்தையும் உபயோகப்படுத்தும் வழியை இங்கு ஒரு முறை நன்றாய் வாசிக்க வேண்டியது. சூரியன் குருவைப் பார்க்கும் பார்வையின் அளவையும், குரு சூரியனைப் பார்க்கும் பார்வையின் அளவையும் உதாரணமாகக் கணித்துக் காட்டி இருக்கின்றது. இவ்விதமாகவே எல்லாக் கிரகங்களுக்கும் ஒன்றுக்கொன்றைப் பார்த்துக்கொள்ளும் பார்வையின் அளவைக் கணிக்கவேண்டியது. இவ்விதமாக கிரகங்களின் பார்வையின் அளவை அல்லது திருக்பலத்தை கணிக்க அடியிற்கண்டபடி திருக்பலம் வரும் (குறிப்பு :—இராகு கேது ஆகிய இவ்விரண்டு கிரகங்களும் நீக்கிவிடப்பட்டிருக்கின்றன).

இரக திருக்பலம் 8-வது கட்டம்.

| எண். | பார்க்கும் இரகம். | பார்க்கப்படும் இரகங்கள். குரு. | சுக்கிரன். | புதன். | சந்திரன். | சூரியன். | செவ்வாய். | சனி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | குரு | 0 | 87 | 47 | 75 | 36 | 93 | 82 |
| 2 | சுக்கிரன் | 97 | 0 | 0 | 22 | 0 | 0 | 0 |
| 3 | புதன் | 87 | 0 | 0 | 12 | 0 | 0 | 7 |
| 4 | சந்திரன் | 25 | 68 | 48 | 0 | 16 | 72 | 57 |
| 5 | கூட்ட சுபபலம் | 209 | 155 | 95 | 109 | 52 | 165 | 146 |
| 6 | சூரியன் | 66 | 7 | 0 | 0 | 0 | 7 | 30 |
| 7 | செவ்வாய் | 100 | 0 | 0 | 23 | 0 | 0 | 0 |
| 8 | சனி | 27 | 0 | 0 | 63 | 10 | 0 | 0 |
| 9 | கூட்ட பாபபலம் | 193 | 7 | 0 | 86 | 10 | 7 | 30 |
| 10 | மிகா சுபா அசுபபலம் | + 16 | + 148 | + 95 | + 23 | + 42 | + 158 | + 116 |
| 11 | சுபா அசுப பலம்4-ல் 1 பங்கு | + 4 | + 37 | + 24 | + 6 | + 11 | + 40 | + 29 |

7

மேலே காட்டியுள்ள கிரக திருக்பலத்தைக் காட்டும் 8-வது கட்டத்தை இங்கு விவரித்துச் சொல்லுவோம். வரிசை எண் 1-க்கு நேராய் குருவிற்கு அடியில் பூஜ்யமும், சுக்கிரனுக்கு அடியில் 87-ம், புதனுக்கு அடியில் 47-ம், சந்திரனுக்கு அடியில் 75-ம், சூரியனுக்கு அடியில் 36-ம், செவ்வாய்க்கு அடியில் 93-ம், சனிக்கு அடியில் 82-ம் போடப்பட்டிருக்கின்றன. அதாவது குரு என்கிற கிரகம் தன்னை 100-ல் பூஜ்ஜிய பங்கு பார்வையுடனும், சுக்கிரனை 100-ல் 87 பங்கு பார்வையுடனும், புதனை 100-ல் 47 பங்கு பார்வையுடனும், சந்திரனை 100-ல் 75 பங்கு பார்வையுடனும், சூரியனை 100-ல் 36 பங்கு பார்வையுடனும், செவ்வாயை 100-ல் 93 பங்கு பாாவையுடனும், சனியை 100-ல் 82 பங்கு பார்வையுடனும் பார்க்கின்றது என்று அர்த்தமாம். இப்படியே மற்ற வரிசை எண்களாகிய (2), (3), (4), (6), (7), (8) இவைகளுக்கு எதிரில் உள்ள எண்களின் அர்த்தத்தை அறியவும். வரிசை எண் (5)-க்கு நேராயுள்ள எண்கள் வரிசை எண்களாகிய (1), (2), (3), (4) இவைகளுக்கு எதிரிலுள்ள எண்களைக் கூட்ட வருகின்ற எண்களாகும். இந்த எண்களெல்லாம் மொத்த சுப பார்வையின் அளவைக் காட்டும் எண்களாகும். உதாரணமாக (5)-வது வரிசை எண்ணுக்கு நேராய் குருவிற்கு அடியில் 209 என்று இருப்பதால் குருவிற்குச் சுபருடைய பார்வையின் அளவு 209 பங்கு என்று அர்த்தமாம். (100 பங்கு கொண்டது முழு பார்வையாகுமாதலால் 209 பங்கு என்றால் இரண்டு முழுப் பார்வையுடன் 100-ல் 9 பங்கு பார்வை என்று அர்த்தங் கொள்ளவேண்டும்). மேலும் (9)-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்கள் வரிசை எண்களாகிய (6), (7), (8) இவைகளுக்கு எதிரிலுள்ள எண்களைக் கூட்ட வருகின்ற எண்களாகும். (9)-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்களெல்லாம் மொத்த அசுப பார்வையின் அளவைக் காட்டும் எண்களாகும். (10)-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்களெல்லாம் அந்தந்த கிரகத்தின் சுப பலத்திலிருந்து பாவபலத்தைக் கழிக்க அல்லது பாப பலத்திலிருந்து சுப பலத்தைக் கழிக்க வருகின்ற நிகர சுப பலத்தை அல்லது பாப பலத்தைக் காட்டும் எண்களாகும். பாப பலத்தைவிட சுப பலம் அதிகமாய் இருந்தால் நிகரம் சுப பலமாகும். சுப பலத்தைவிட பாப பலம் அதிகமாயிருந்தால் நிகரம் பாப பலமாகும். நிகர சுப பலத்திற்கு + என்ற குறி போடப்பட்

டிருக்கின்றது. நிகர அசுப பலத்திற்கு—என்ற குறி போடப் படும். உதாரணமாக (10)-வது வரிசை எண்ணிற்கு நேராய் குரு விற்கு அடியில் +16 என்று போட்டிருக்கின்றது. அதாவது குருவிற்கு மொத்த சுப பார்வையின் அளவாகிய 209-ல் இருந்து அதற்கு மொத்த அசுப பார்வையாகிய 193-யைக் கழிக்க நிகர சுப பார்வை 100-ல் 16 பங்கு ஆகும் என்பதாம். (11)-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்கள் (10)-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்களின் 4-ல் ஒரு பங்கு ஆகும். உதாரணமாக (11)-வது வரிசை எண்ணிற்கு நேராய் குருவிற்கு அடியில் +4 என்று போட்டிருக்கின்றது. அதாவது +4 என்பது (10)-வது வரிசை எண்ணிற்கு நேராய் குருவிற்கு அடியிலுள்ள +16 என்ற எண்ணில் 4-ல் ஒரு பங்கு ஆகும். (10)-வது வரிசை எண்ணிற்கு நேராய் சூரியனுக்கு அடியில் +42 என்ற எண் இருக்கின்றது. இந்த எண்ணில் 4-ல் ஒரு பங்கு +10½ ஆகும். கணிதத்தில் பாதியும், பாதிக்கு மேற்பட்டதையும் ஒன்றாக பாவிப்பதும், பாதிக்குட்பட்டதை தள்ளிவிடுவதும் சகஜமானதால் இந்தப் புத்தகத்தில் எவ்விடத்திலும் பாதியும், பாதிக்கு மேற்பட்டதையும் ஒன்றாக பாவித்தும், பாதிக்குட்பட்டதைத் தள்ளிவிடப் பட்டும் இருக்கின்றது. ஆகையால் மேலே சொல்லிய 10½-யை 11-ஆகப் பாவித்து +11 என்ற எண்ணை (11)-வது வரிசை எண்ணிற்கு நேராய் சூரியனுக்கு அடியிற் போடப்பட்டிருக்கின்றது.

2 உச்ச பலம் அறிய :—21-வது வாக்கியத்தை உபயோகப் படுத்தும் வழியை இங்கு ஒரு முறை வாசித்து அதன் பிரகாரம் கிரகங்களின் உச்ச பலத்தைக் கணிக்க கிரகங்களின் உச்ச பலம் அடியிற்கண்டபடி ஆகும்.

கிரக உச்ச பலம் 9-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| உச்ச பலம் | 13 | 53 | 49 | 85 | 63 | 15 | 83 |

இந்த 9-வது கட்டத்தில் சூரியனுக்கு எதிரில் 13 என்று போட்டிருக்கின்றது. ஆகையால் சூரியனுக்கு உச்சபலம் 100-ல்

13 பங்கு என்பதாம். சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை 2 க
இதை முழு பாகையாக மாற்ற 167 பாகை ஆகும். 21-வ
வாக்கியத்தில் 167 பாகைக்கு எதிரில் சூரியனுக்கு அடியில் 1
என்று போட்டிருப்பதால் சூரியனுடைய உச்ச பலம் 100
13 பங்கு ஆகுமென்று அறிய வேண்டியது. இவ்விதமாகவே
மற்ற கிரகங்களுக்கும் உச்ச பலம் அறியவும்.

கேந்திராதி பலம். 10-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | கு. | சு. | ச. |
|---|---|---|---|---|---|---|---|
| கேந்திர பலம் | 25 | 100 | 100 | 100 | 100 | 100 | 50 |

3. கேந்திராதி பலம் அறிய :—24-வது வாக்கியத்தை உ
யோகப்படுத்தும் வழியை இங்கு ஒரு முறை வாசித்து அத
பிரகாரம் கிரகங்களின் கேந்திர பலத்தைக் கணிக்க கிரகங்களி
கேந்திர பலமிங்கு கண்டபடி ஆகும். இந்த கட்டத்தில் சூரி
னுக்கு எதிரில் 25 போட்டிருப்பதால் சூரியனுக்குக் கேந்தி
பலம் 100-ல் 25 பங்கு என்பதாம். இவ்விதமாகவே மற்ற கிர
களுக்கு மறியவும்.

திரேகாண பலம். 11-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | கு. | சு. | ச. |
|---|---|---|---|---|---|---|---|
| திரேகாண பலம் | 0 | 25 | 0 | 25 | 0 | 25 | 0 |

4. திரேஷ்காண அல்லது திரேகாண் பலம் அறிய :—25-வ
வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியை இங்கு ஒரு மு
வாசித்து அதன் பிரகாரம் கிரகங்களின் திரேகாண பலத்
கணிக்க கிரகங்களின் திரேகாண பலமிங்கு கண்டபடி ஆகும்.

யுக்மாயுக்ம பலம் 12-வது கட்டம்.

| கிரகங்கள். | இராசி யுக்மா யுக்ம பலம். | நவாம்சை யுக்மாயுக்ம பலம் | கூட்டினால் மொத்த யுக்மா யுக்ம பலம். |
|---|---|---|---|
| சூரியன் .... | 0 | 25 | 25 |
| சந்திரன் .... | 25 | 25 | 50 |
| செவ்வாய் .... | 25 | 0 | 25 |
| புதன் .... | 25 | 0 | 25 |
| குரு .... | 25 | 25 | 50 |
| சுக்கிரன் .... | 0 | 25 | 25 |
| சனி .... | 0 | 0 | 0 |

5. யுக்மாயுக்ம பலம் கணிக்க:—23-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியை இங்கு ஒரு முறை படித்துவிட்டு அதன் பிரகாரம் 1-வது, 2-வது கட்டங்களையும் பார்த்துவிட்டு யுக்மாயுக்ம பலம் கணிக்கக் கிரகங்களின் யுக்மாயுக்ம பலம் இங்கு கண்டபடி ஆகும்.

6. சப்த வர்க்கஜ பலம் கணிக்க:—22-வது வாக்கியத்திலும், 22-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் விதத்திலும் சொல்லியதை இங்கு ஒரு முறை முதலில் வாசிக்கவும். இவைகளை வாசித்தால் கிரகங்களின் தற்கால மித்துரு, சத்துரு என்பதையும், நைசர்க்கிக மித்துரு, சத்துரு, சமம் என்பதையும் அவசியமாக முதலில் அறியவேண்டும் என்று ஏற்படும்.

தற்கால மித்துரு, சத்துரு அறிய:—22-வது வாக்கியத்தின் கீழ் 2-வது அயிட்டத்தில் கொடுத்துள்ள விதிப் பிரகாரம் இரா

இச் சக்கிரத்தில் கிரகங்களின் நிலையைக் கவனிக்க தற்கா[illegible] மித்துரு, சத்துரு என்பது அடியிற்கண்ட கட்டத்தில் காட்டிய[illegible] போல ஆகும்.

கிரகங்களின் தற்கால மித்துரு சத்துருவைக் காட்டும்
13-வது கட்டம்.

| வரிசை எண் | கிரகங்கள். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | சூ க்கு | — | மித் | மித் | மித் | சத் | மித் | மித் |
| 2 | சந். ,, | மித் | — | மித் | மித் | மித் | மித் | சத் |
| 3 | செ. ,, | மித் | மித் | — | சத் | சத் | சத் | மித் |
| 4 | பு. ,, | மித் | மித் | சத் | — | சத் | சத் | மித் |
| 5 | குரு ,, | சத் | மித் | சத் | சத் | — | சத் | சத் |
| 6 | சுக். ,, | மித் | மித் | சத் | சத் | சத் | — | மித் |
| 7 | சனி ,, | மித் | சத் | மித் | மித் | சத் | மித் | — |

இந்த கட்டத்தில் 1-வது வரிசை எண்ணிற்கு நேராய் சூரி[illegible] னுக்கு எதிரில் சந்திரனுக்கு அடியில் "மித்" என்று போட்டிரு[illegible] பதால் சூரியனுக்குச் சந்திரன் தற்கால மித்துரு என்று அறி[illegible] வும். இவ்விதமாகவே மற்றவையும் அறியவும்.

கிரகங்களின் நைசர்க்கிக மித்துரு, சத்துரு, சமம் என்ப[illegible] 22-வது வாக்கியத்தின் கீழே (3)-வது அயிட்டத்தில் கொடு[illegible] திருக்கின்றது. இது நிலையானது இதை இங்கு எடுத்து எழு[illegible] அடியிற்கண்டபடி ஆகும்.

கிரகங்களுக்கு நைசர்க்கிக நட்பு (மித்துரு), சமம், பகை (சத்துரு) இவைகளைக் காட்டும்.

14-வது கட்டம்.

| வரிசை எண். | கிரகங்கள். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | சூரியனுக்கு | — | ந | ந | ச | ந | ப | ப |
| 2 | சந்திரனுக்கு | ந | — | ச | ந | ச | ச | ச |
| 3 | செவ்வாய்க்கு | ந | ந | — | ப | ந | ச | ச |
| 4 | புதனுக்கு | ந | ப | ச | — | ச | ந | ச |
| 5 | குருவுக்கு | ந | ந | ந | ப | — | ப | ச |
| 6 | சுக்கிரனுக்கு | ப | ப | ச | ந | ச | — | ந |
| 7 | சனிக்கு | ப | ப | ப | ந | ச | ந | — |

சுலபமாக அடிக்கடி பார்க்க வேண்டியதற்காக இந்த நைசர்க்கிக மித்துரு, சத்துரு, சமம் இவைகளைக் காட்டும் கட்டத்தை இங்கு எடுத்து கொடுக்கப்பட்டிருக்கின்றது.

மேலும் தற்கால மித்துரு, சத்துருவையும், நைசர்க்கிக மித்துரு, சத்துரு, சமம் ஆகிய இவைகளையும் ஒன்றுச் சேர்த்து 22-வது வாக்கியம் (4)-வது அயிட்டத்தில் கொடுத்துள்ள விதி பிரகாரம் பார்த்தால் இந்த ஜாதகருக்குக் கிரகங்கள் அடியிற் கண்ட பிரகாரம் அதிமித்துரு, மித்துரு, சமம், சத்துரு, அதிசத்துருவாகும் என்று அறியவும்

இந்த ஜாதகத்தில் கிரகங்களின் அதிமித்துரு, மித்துரு, சமம், சத்துரு, அதிசத்துரு ஆகிய இவைகளைக் காட்டும்.

*15-வது கட்டம்.

| வரிசை எண். | கிரகங்கள். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | சூ. க்கு | — | அ-மி | அ-மி | மி | சம | சம | சம |
| 2 | சந். ,, | அ-மி | — | மி | அ-மி | மி | மி | சத் |
| 3 | செ. ,, | அ-மி | அ-மி | — | அ-சத் | சம | சத் | மி |
| 4 | பு. ,, | அ-மி | சம | சத் | — | சத் | சம | மி |
| 5 | குரு ,, | சம | அ-மி | சம | அ-சத் | — | அ-சத் | சத் |
| 6 | சு. ,, | சம | சம | சத் | சம | சத் | — | அ-மி |
| 7 | சனி ,, | சம | அ-சத் | சம | அ-மி | சத் | அ-மி | — |

குறிப்பு :—மி என்றால் மித்துரு, அ-மி என்றால் அதிமித்துரு, சத் என்றால் சத்துரு, அ-சத் என்றால் அதிசத்துரு, சம என்றால் சமம் என்று அறியவும்.

---

*இராசிச் சக்கிரத்திற்குக் கணித்து வரும் கட்டமே சப்தவர்க்கஜ பலத்திற்கும் உபயோகப்படும்.

மேல் கண்ட அதிமித்துரு, மித்துரு முதலியவைகளைக் காட்டும் கட்டத்தைப் போட்டுக்கொண்டால் சப்தவர்க்கஜ பலத்தை வெகு சுலபமாக 22-வது வாக்கியத்தின் கீழ் கொடுத்துள்ள (1)-வது அயிட்டத்தில் காட்டிய விதி பிரகாரம் கணிக்கலாம்.

இராசிவர்க்கஜ பலம் 16-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| பலம் | 25 | 50 | 6 | 13 | 13 | 50 | 13 |

(1) இராசிவர்க்கஜ பலம் கணிக்க :—சூரியன் இராசிச் சக்கிரத்தில் கன்னியிலிருப்பதால், அந்த கன்னியா ராசிக்குடைய புதன் சூரியனுக்கு, மேல் கண்ட 15-வது கட்டத்தால் மித்துரு என்று ஏற்படுவதால் 22-வது வாக்கியத்தின் 1-வது அயிட்டத்தில் கண்ட விதி பிரகாரம் பலம் 25 அதாவது 100-ல் 25 பங்கு என்று ஏற்படுகின்றது. இவ்விதமாகவே மற்ற கிரகங்களுக்கும் போட்ட 16-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

இங்கு சுக்கிரன் மூலத் திரிகோணத்திலில்லாமல் சுவ க்ஷேத்திரத்தில் இருப்பதால் சுக்கிரனுக்குப் பலம் 50.

நவாம்சவர்க்கஜ பலம் 17-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந் | செ. | பு | கு. | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| நவாம்சவர்க்கஜ பலம் | 25 | 25 | 6 | 25 | 50 | 50 | 50 |

(2) நவாம்சவர்க்கஜ பலம் கணிக்க :—சூரியன் நவாம்ச சக்கிரத்தில் மிதுனத்திலிருப்பதால் அந்த மிதுன ராசிக்குடைய புதன் சூரியனுக்கு மேல் கண்ட 15-வது கட்டத்தால் மித்துரு என்று ஏற்படுவதால், 22-வது வாக்கியத்தின் 1-வது அயிட்டத்தில் கண்ட விதி பிரகாரம் பலம் 25 அதாவது 100-ல் 25 பங்கு என்று ஏற்படுகின்றது. இவ்விதமாகவே மற்ற கிரகங்களுக்குப் போட்ட 17-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

8

திரேகாணவர்க்கஜ பலம்
18-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | கு. | சு. |
|---|---|---|---|---|---|---|
| திரேகாணவர்க்கஜ பலம் | 13 | 25 | 3 | 25 | 50 | 13 |

(3) திரேகாணவர்க்கஜ பலம் கணிக்க:—இதை நவா வர்க்கஜ பலம் கணித்ததுபோல் கணிக்கவேண்டியது. அப்ப கணிக்க இந்த 18-வது கட்டத்தில் கண்டதுபோல் திரேகா வர்க்கஜ பலம் வரும்.

துவாதசாம்சவர்க்கஜ பலம்
19-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. |
|---|---|---|---|---|---|---|
| துவாதசாம்சவர்கஜ பலம் | 13 | 38 | 50 | 25 | 50 | 13 |

(4) துவாதசாம்சவர்க்கஜ பலம் கணிக்க:—இதை நவா வர்க்கஜ பலம் கண த்ததுபோல் கணிக்கவேண்டியது. அப்ப கணிக்க இந்த 19-வது கட்டத்தில் கண்டதுபோல் துவாதசா வர்க்கஜ பலம் வரும்.

சப்தமாம்சவர்க்கஜ பலம்
20-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. |
|---|---|---|---|---|---|---|
| சப்தமாம்சவர்க்கஜ பலம் | 25 | 50 | 50 | 6 | 3 | 6 |

(5) சப்தமாம்சவர்க்கஜ பலம் கணிக்க:—இதை நவாம்ச வர்க்கஜ பலம் கணித்ததுபோல கணிக்கவேண்டியது. அப்படிக் கணிக்க இந்த 20-வது கட்டத்தில் கண்டதுபோல் சப்தமாம்ச வர்க்கஜ பலம் வரும்.

ஓராவர்க்கஜ பலம் 21-வது கட்டம்.

| கிரகங்கள். | சூ. | சந். | அ | பு | குரு | சு | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| ஓராவர்க்கஜபலம். | 50 | 38 | 38 | 38 | 38 | 13 | 13 |

(6) ஓராவர்க்கஜ பலம் கணிக்க:—குருவிற்கு ஓரா பலம் கணிப்போம். குரு சந்திரனுடைய ஓரையில் இருப்பதாலும், அந்த சந்திரன் குருவிற்கு அதிமித்துரு என்று 15-வது கட்டத்தால் ஏற்படுவதாலும் 22-வது வாக்கியத்தின் கீழ் 1-வது அயிட்டத்தில் கொடுத்துள்ள விதி பிரகாரம் குருவிற்கு ஓராவர்க்கஜ பலம் 38 அதாவது 100-ல் 38 பங்கு என்று ஏற்படும். இவ்விதமாகவே மற்ற கிரகங்களுக்கும் கணிக்க 21-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

திரிம்சாம்சவர்க்கஜ பலம் 22-வது கட்டம்.

| கிரகங்கள். | சூ | சந் | அ | பு | குரு | சு | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| திரிம்சாம்ச வர்க்கஜபலம். | 13 | 25 | 6 | 6 | 3 | 13 | 50 |

(7) திரிம்சாம்சவர்க்கஜ பலம் கணிக்க:—இதை ஓராவர்க்கஜ பலம் கணித்ததுபோல் கணிக்க வேண்டியது. அப்படிக் கணிக்க இந்த 22-வது கட்டத்தில் கண்டதுபோல் திரிம்சாம்ச வர்க்கஜ பலம் வரும்.

இவ்விதமாக சப்தவர்க்கத்திற் சேர்ந்த ஒவ்வொரு வர்க்கத்திற்கும் கணிக்க வந்த பலத்தைக் கூட்ட வருகின்ற மொத்த பலம் சப்தவர்க்கஜ பலமாகும். இந்த சப்தவர்க்கஜ பலம் அடுத்த பக்கத்தில் கண்டபடி ஆகும்.

சப்தவர்க்கஜ பலம் 20-வது கட்டம்.

| கிரகங்கள். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி | |
|---|---|---|---|---|---|---|---|---|
| இராசி வர்க்கம் | 25 | 50 | 6 | 13 | 13 | 50 | 13 | 16-வது கட்ட. பார்க்கவும் |
| ஸ்வாம்ச வர்க்கம் | 25 | 25 | 6 | 25 | 50 | 50 | 50 | 17-வது கட்ட. பார்க்கவும் |
| திரேகாண வர்க்கம் | 13 | 25 | 3 | 25 | 50 | 13 | 3 | 18-வது கட்ட. பார்க்கவும் |
| துவாதசாம்ச வர்க்கம் | 13 | 38 | 50 | 25 | 50 | 13 | 3 | 19-வது கட்ட. பார்க்கவும் |
| சப்தமாம்ச வர்க்கம் | 25 | 50 | 50 | 6 | 3 | 6 | 38 | 20-வது கட்ட. பார்க்கவும் |
| ஹோரா வர்க்கம் | 50 | 38 | 38 | 38 | 38 | 13 | 13 | 21-வது கட்ட. பார்க்கவும் |
| திரிம்சாம்ச வர்க்கம் | 13 | 25 | 6 | 6 | 3 | 13 | 50 | 22-வது கட்ட. பார்க்கவும் |
| கூட்டவருகின்ற சப்த வர்க்கஜ பலம் | 164 | 251 | 159 | 138 | 207 | 158 | 170 | |

மேலும் ஸ்தான பலம் அறிவதற்குத் தேவையான (1) கிர உச்ச பலம் (2) கேந்திராதி பலம் (3) திரேகாண பலம் (4) யுக்ம யுக்ம பலம் (5) சப்தவர்க்கஜ பலம் ஆகிய இவ்வைந்து பலங்க யும் நாம் கணித்து வைத்திருப்பதால் இவைகளை ஒன்றுய் சேர்த்துக் கூட்ட வருகின்ற பலம் ஸ்தான பலமாகும். இந் ஸ்தான பலம் அடியிற்கண்டபடி ஆகும்.

கிரகங்களின் ஸ்தான பலம் 24-வது கட்டம்.

| கிரகங்கள். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி | |
|---|---|---|---|---|---|---|---|---|
| உச்சபலம் | 31 | 53 | 49 | 85 | 63 | 15 | 83 | 9-வது கட்டம் பார்க்கவும் |
| கேந்திராதிபலம் | 25 | 100 | 100 | 100 | 100 | 100 | 50 | 10-வது கட்டம் பார்க்கவும் |
| திரேகாண பலம் | 0 | 25 | 0 | 25 | 0 | 25 | 0 | 11-வது கட்டம் பார்க்கவும் |
| யுக்மாயுக்மபலம் | 25 | 50 | 25 | 25 | 50 | 25 | 0 | 12-வது கட்டம் பார்க்கவும் |
| சப்தவர்கஜபலம் | 164 | 251 | 159 | 138 | 207 | 158 | 170 | 23-வது கட்டம் பார்க்கவும் |
| கூட்டவருகின்ற ஸ்தானபலம் | 227 | 479 | 333 | 373 | 420 | 323 | 303 | |

(7) காலபலம் கணிக்க:—காலபலம் என்பது 7 அங்கங்களுடையது என்று 28-வது வாக்கியத்தைப் பார்க்கத் தெரியவரும். இந்த 7 அங்கங்களின் பெயர் (1) நத உன்னதபலம் (2) தினராத்திரி திரிபாகபலம் (3) வருஷபலம் (4) மாசபலம் (5) தினபலம் (6) ஓராதி பலம் (7) பட்சபலம் ஆகும். இந்த 7 வித பலங்களையும் கணிப்போம்.

(1) நத உன்னதபலம் கணிக்க:—28-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் விதத்தை முதலில் இங்கு படிக்க வேண்டியது அவசியம். இந்த ஜாதகத்தின் ஜெனன நாழிகை 3 விநாடி $12\frac{1}{2}$ ஆகும் ஜெனன தினத்தில் சூரியன் உச்சிக்குச் சூரிய உதயாதி 14 நாழிகை 45 விநாடிக்கு வந்தது. ஆகையால் 28-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் விதத்தில் சொல்லிய உதாரணத்தைப் பார்க்கக் கிரகங்களின் நத உன்னதபலம் அடியிற் கண்டபடி ஆகும்.

நத உன்னதபலம் 25-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| நத உன்னதபலம் | 60 | 40 | 40 | 100 | 60 | 60 | 40 |

தினராத்திரி திரிபாகபலம் 26-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| தினராத்திரி திரிபாக பலம் | 0 | 0 | 0 | 100 | 100 | 0 | 0 |

(2) தினராத்திரி திரிபாகபலம் :—30-வது வாக்கியத்தையும், இந்த 30-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியையும் இங்கு ஒரு முறை படிக்கவும். இந்த ஜாதகத்தின் ஜெனன நாழிகை 3 விநாடி 12½ ஆகும். ஜெனன தினத்தில் அகசு 29 நாழிகை 30 விநாடி ஆகும். ஆகையால் 30-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் விதத்திற் சொல்லிய உதாரணத்தைப் பார்க்க கிரகங்களின் தினராத்திரி திரிபாகபலம் இங்கு கண்டபடி ஆகும்.

தினபலம் 27-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | குரு | சுக். | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| தினபலம் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 75 |

(3) தினபலம் (அதாவது தினாதிபலம்) அறிய :—32-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியை முதலில் இங்கு படிக்க வேண்டியது. இந்த ஜாதகருடைய ஜெனனம் 1869ஆ அக்டோபர்மீ 2வ சனிக்கிழமை நேர்ந்தது ஆகையால் இந்த 32-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் விதத்தில் சொல்லி

உதாரணத்தைப் பார்க்கச் சனி தினாதிபதி என்று ஏற்படும். தினாதிபதியாக வருகின்ற கிரகத்திற்கு தினபலம் 75 ஆனதாலும், மற்ற கிரகங்களுக்குத் தினபலம் பூஜ்ஜியமானதாலும் சனிக்குத் தினபலம் 75-ம் மற்ற கிரகங்களுக்கு பூஜ்ஜியமும் 27-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

மாதபலம் 28-வது கட்டம்.

| கிரகங்கள். | சூ | சந் | அ | பு | குரு | சு | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| மாதபலம் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 50 |

(4) மாதபலம் (அதாவது மாதாதி பலம்) அறிய :—32-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியிற் சொல்லிய உதாரணத்தைப் பார்க்க இந்த ஜாதகர் ஜெனனமான தினத்திற்குச் சனி மாதாதிபதியாக வருவதால் மாதபலம் அந்த 28-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

வருஷபலம் 29-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | கு. | சு. | ச. |
|---|---|---|---|---|---|---|---|
| வருஷபலம் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 25 |

(5) வருஷபலம் (அதாவது வருஷாதி பலம்) அறிய :—32-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் வழியிற் சொல்லிய உதாரணத்தைப் பார்க்க இந்த ஜாதகர் ஜெனனமான தினத்திற்குச் சனி வருஷாதிபதியாக வருவதால் வருஷபலம் இந்த 29-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

குறிப்பு :— இந்த ஜாதகத்திற்குச் சனி என்கிற ஒரு கிரகமே தினாதிபதியாகவும், மாதாதிபதியாகவும், வருஷாதிபதியாகவும் வருகின்றது. எல்லா ஜாதகத்திற்கும் ஒரே கிரகமே இவ்விதமாக வருஷாதிபதியாகவும், மாதாதிபதியாகவும், தினாதிபதியாகவும் வரவேண்டும் என்பது கிடையாது.

ஓராபலம் 30-வது கட்டம்.

| கிரகம். | சூ | சந். | செ. | பு. | குரு | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| ஓரா பலம் | 0 | 0 | 0 | 0 | 100 | 0 | 0 |

(6) ஓராபலம் (அதாவது ஓராதிபதி பலம்) அறிய :—இ (4)-வது வாக்கியத்தையும், இந்த வாக்கியத்தை உபயோகப்படு தும் விதத்தையும் இங்கு ஒரு முறை படிக்கவும். இந்த ஜாதக சனிக்கிழமையில் சூரிய உதயாதி நாழிகை 3-12½ விநாடிக் ஜெனனமானதால் 32-வது வாக்கியத்தை உபயோகப்படுத்து விதத்தில் ஓராதிபதி கணிக்கக் கொடுத்திருக்கும் உதாரணத்தை பார்க்கக் குரு ஓராதிபதியாக வருவார். ஓராதிபதியாக வ கின்ற கிரகத்திற்குப் பலம் 100-ம் மற்ற கிரகங்களுக்குப் பல பூஜ்ஜியமுமானபடியால் இந்த 30-வது கட்டத்தில் கண்டப ஓராபலம் வரும்.

பட்சபலம் 31-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | கு. | சு. | ச. |
|---|---|---|---|---|---|---|---|
| பட்ச பலம் | 73 | 27 | 73 | 27 | 27 | 27 | 73 |

(7) பட்சபலம் அறிய :—29-வது வாக்கியத்தில் சொல் யதை இங்கு ஒரு முறை முதலில் படிக்க வேண்டியது. ஜென காலத்தில் சந்திரனுடைய ஸ்புடம் 118 பாகை 10 கலை என்று சூரியனுடைய ஸ்புடம் 167 பாகை 2 கலை என்றும் முன்ன கணித்திருக்கின்றோம். சந்திரனுடைய ஸ்புடமாகிய 118 பாக 10 கலையிலிருந்து சூரியனுடைய ஸ்புடமாகிய 167 பாகை 2 க யைக் கழிக்க 311 பாகை 8 கலை வரும் (118-10 என்ப 167-2-யைவிட சிறியதா யிருப்பதால் 118-10-வுடன் 360 கூட்ட 478 பாகை 10 கலை வரும். இதில் இருந்து 167 பாக 2 கலையைக் கழிக்க பாகை 311 கலை 8 மேற்கண்டபடி வரும் 311 பாகை 8 கலையை முழு பாகையாக மாற்ற 311 பாகை வரு

பிறகு இந்த 29-வது வாக்கியத்தில் கொடுத்துள்ள உதாரணத்தைப் பார்க்க பட்சபலம் 30-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

மேலும் இப்போது கணிக்கப்பட்ட காலபலத்தின் 7 அங்கங்களையும் ஒன்ருய்க் கூட்ட காலபலம் அடியிற்கண்டபடி ஆகும்.

காலபலம் 32-வது கட்டம்.

| கிரகங்கள். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி | |
|---|---|---|---|---|---|---|---|---|
| நத உன்னத பலம் | 60 | 40 | 40 | 100 | 60 | 60 | 40 | 25-வது கட்டம் பார்க்கவும் |
| தினராத்திரி திரிபாகபலம் | 0 | 0 | 0 | 100 | 100 | 0 | 0 | 26-வது கட்டம் பார்க்கவும் |
| தினபலம் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 75 | 27-வது கட்டம் பார்க்கவும் |
| மாதபலம் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 50 | 28-வது கட்டம் பார்க்கவும் |
| வருஷபலம் | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 25 | 29-வது கட்டம பார்க்கவும் |
| ஓரா பலம் | 0 | 0 | 0 | 0 | 100 | 0 | 0 | 30-வது கட்டம் பார்க்கவும் |
| பட்சபலம் | 73 | 27 | 73 | 27 | 27 | 27 | 73 | 31-வது கட்டம் பார்க்கவும் |
| கூட்டவருகின்ற காலபலம் | 133 | 67 | 113 | 227 | 287 | 87 | 263 | |

(8) அயனபலம் கணிக்க :—அயனபலம் கிரகங்களின் உத்திர அல்லது தட்சணகிராந்தியை அனுசரித்தது. ஆகையால் இந்த ஜாதகருக்கு ஜெனன காலத்தில் கிரகங்களின் கிராந்தி தெரிய வேண்டியது அவசியம், கிராந்தியைக் கணிப்பது கொஞ்சம்

சிரமமானதாலும், வானசாஸ்திரம் தெரிந்திருக்கவேண்டியது அவசியமானதாலும், "நாடிகல் ஆல்மநெக்'' என்ற புத்தகத்தில் ஒவ்வொரு தினத்திற்கும், ஒவ்வொரு கிரகத்திற்கும் கிராந்தியை கணித்து கொடுத்திருப்பதாலும் அல்லது என்னுடைய "சித்தாந்த இராஜ சிரோன்மணி என்னும் இராஜ ஜோதிட கணிதத்தில்'' கிராந்தியை கணிக்கும் விதம் கொடுத்திருப்பதாலும் இந்த புத்தகத்திலிருந்து தேவையான ஜெனன காலத்திற்குக் கிரகங்களின் கிராந்தியை அறியவேண்டியது. இந்த நாடிகல் ஆல்மனெக் தற்காலத்தில் அனேகரிடத்தில் * இருப்பதால் இதை வைத்துக்கொண்டிருப்பவர்களிடமிருந்து தேவையான காலத்திற்கு கிராந்தியைத் தெரிந்துகொள்வதில் யாதொரு கஷ்டமும், நஷ்டமும் நேரிடாதென்று நம்புகிறேன். இந்த ஜாதகரின் ஜெனன காலத்தில் கிரகங்களின் கிராந்தி அடியிற்கண்டபடி ஆகும்.

* என்னிடம் இந்த புத்தகம் 1839, 1843, 1844, 18[illegible] 1862 முதல் 1908 வரையிலும், 1910 முதல் 1916 வரையிலும் 1918, 1920 முதல் நாளது வருஷம் வரையிலும் உள்ள வருஷங்களுக்கு இருக்கிறது. தேவையானவர்கள் தங்களுக்கு வேண்டிய கிராந்தியை, மேற்படி விலாஸத்திற்கு எழுதித் தெரிந்துகொள்ளவும்.

ஜெனன காலத்தில் கிரகங்களின் கிராந்தி.

| கிரகங்கள். | கிராந்தி. பாகை—கலை. | | முழு பாகை. |
|---|---|---|---|
| சூரியன் | 3—32 தட். | (அல்லது) | 4 தட். |
| சந்திரன் | 13— 4 உத். | ,, | 13 உத். |
| செவ்வாய் | 17—50 தட். | ,, | 18 தட். |
| புதன் | 15—54 தட். | ,, | 16 தட். |
| குரு | 16—32 உத். | ,, | 17 உத். |
| சுக்கிரன் | 17—42 தட். | ,, | 18 தட். |
| சனி | 20—55 தட். | ,, | 21 தட். |

குறிப்பு :—உத் என்றால் உத்திரகிராந்தி என்றும், தட் என்றால் தட்சணகிராந்தி என்றும் அர்த்தம்.

அயனபலம் 33-வது கட்டம்.

| கிரகங்கள். | சூ | சந் | அ | பு | குரு | சு | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| அயனபலம் | 42 | 23 | 12 | 83 | 85 | 12 | 94 |

அயனபலம் அறிய :—31-வது வாக்கியத்தை உபயோகப் படுத்தும் வழியை இங்கு ஒரு முறை வாசிக்கவும். இந்த வழியிற் சொல்லிய உதாரணம் பிரகாரம் கணிக்க அயனபலம் இந்த 33-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

நைசர்க்கிக பலம் 34-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | ச. |
|---|---|---|---|---|---|---|---|
| நைசர்க்கிகபலம் | 100 | 86 | 29 | 43 | 57 | 71 | 14 |

(9) நைசர்க்கிக பலம் அறிய :—இது 27-வது வாக்கியத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றது இது நிலையானதும் எல்லா ஜாதகங் களுக்கும் பொதுவானதுமானதால் இந்த வாக்கியத்தை அப் படியே இங்கு எடுத்து எழுத நைசர்க்கிக பலம் இந்த 34-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

திக்குப் பலம் 35-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| திக்குப்பலம் | 60 | 13 | 38 | 96 | 13 | 60 | 26 |

(10) திக்குப் பலம் கணிக்க :—26-வது வாக்கியத்தை இங்கு ஒரு முறை முதலில் வாசித்துவிட்டு அதில் கொடுத்துள்ள உதாரணம் பிரகாரம் திக்குப் பலங் கணிக்க இந்த ஜாதகருக்குத் திக்குப் பலம் இந்த 35-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

ஜேஷ்டா பலம் 36-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| ஜேஷ்டா பலம் | 42 | 27 | 55 | 87 | 85 | 59 | 58 |

(11) ஜேஷ்டா பலம் கணிக்க :—சூரியனுடைய ஜேஷ்டா பலம் என்பது சூரியனுடைய அயனபலமேயானதால் 33-வது கட்டத்தைப் பார்க்க சூரியனுடைய ஜேஷ்டா பலம் 42 என்று ஏற்படும். சந்திரனுடைய ஜேஷ்டா பலம் சந்திரனுடைய பட்ச பலமேயானதால் 31-வது கட்டத்தைப் பார்க்கச் சந்திரனுடைய ஜேஷ்டா பலம் 27 என்று ஏற்படும். மற்ற கிரகங்களின் ஜேஷ்டா பலத்தை 33-வது வாக்கியத்தில் சொல்லிய வழி பிரகாரம் கணிக்க வேண்டியது. செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி இவர்களின் ஜேஷ்டா பலத்தை முறையே 5-வது, 6-வது, 2-வது, 4-வது, 1-வது உதாரணங்களாக 33-வது வாக்கியத்தின் கீழ் கணித்துக் காட்டப்பட்டிருப்பதால் இவைகளின் ஜேஷ்டா பலம் இந்த 36-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

(12) கிரக யுத்தபலம் :—41-வது வாக்கியத்திற்கும், 42-வது வாக்கியத்திற்கும் இடையில் கொடுத்துள்ள கிரக யுத்தபலம் கணிக்கும் விதம் பிரகாரம் கணிக்க வேண்டியது. இந்த உதாரண ஜாதகத்திற்குக் கிரகயுத்தம் நேரிடாததால் கிரகயுத்த பலம் பூஜ்ஜியமாகும்.

சட்பலம் கணிக்க :—சட்பலம் என்பது ஆறுவித பலங்களை ஒன்றுய்ச் சேர்ந்த பலம் என்பதாம். (1-ஏ) ஸ்தானபலம், (1-பி) சுபா அசுப பலத்தில் 4-ல் 1 பங்கு, (2) காலபலம், (3) அயன பலம், கிரக யுத்தபலம், (4) நைசர்க்கிக பலம், (5) திக்குப்பலம், (6) ஜேஷ்டாபலம் ஆகிய இந்த ஆறு பலன்களையுங் கூட்ட வருவது சட்பலமாகும். இந்த சட்பலம் அடுத்த பக்கத்தில் 37-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

[குறிப்பு :—ஆயுளை மாத்திரம் கணிக்க வேண்டுமானால் ஆயுள் கணிதத்தில் 38-வது கட்டம் முதல் 56-வது கட்டம் வரையிலுமுள்ளவைகள் உபயோகப்படுத்தாமல் இருப்பதால் இவைகளைக் கணிப்பதை நிறுத்திவிட்டு ஆயுளைக் கணிக்க 42-வது வாக்கியத்திலிருந்து ஆரம்பிக்க வேண்டியது.]

சட்பலம் 37-வது கட்டம்.

| வரிசை எண் | | சூ. | சந். | செ. | பு. | குரு. | சு. | சனி | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1 எ) | ஸ்தான பலம் | 227 | 479 | 333 | 373 | 420 | 323 | 303 | 24-வது கட்டம் பார்க்கவும் |
| 2 | காலபலம் | 133 | 67 | 113 | 227 | 287 | 87 | 263 | 32-வது கட்டம் பார்க்கவும் |
| 3 | அயன பலம் | 42 | 23 | 12 | 83 | 85 | 12 | 94 | 33-வது கட்டம் பார்க்கவும் |
| 4 | நைசர்க்கிக பலம் | 100 | 86 | 29 | 43 | 57 | 71 | 14 | 34-வது கட்டம் பார்க்கவும் |
| 5 | திக்குப் பலம் | 60 | 13 | 38 | 96 | 13 | 60 | 26 | 35-வது கட்டம் பார்க்கவும் |
| 6 | ஜேஷ்டா பலம் | 42 | 27 | 55 | 87 | 85 | 59 | 58 | 36-வது கட்டம் பார்க்கவும் |
| 7 | கூட்ட | 604 | 695 | 580 | 909 | 947 | 612 | 758 | வரிசை எண் 1(எ முதல் 6 வரை கூட்ட |
| (1பி) | சுபா அசுப பலத்தில் 4ல் 1 பங்கு | +11 | +6 | +40 | +24 | +4 | +37 | +29 | 8 வது கட்டம் 11-வது வரிசை எண்பார் |
| 8 | கூட்ட | 615 | 701 | 620 | 933 | 951 | 649 | 787 | 7-ம் (1பி) வரிசை எண்களைக் கூட்ட |
| 9 | கிரகயுத்த பலம் | 0 | 0 | 10 | 0 | 0 | 0 | 0 | |
| 10 | சட்பலம் | 615 | 701 | 620 | 933 | 951 | 649 | 787 | 8-ம், 9-ம் சேர்க்க |

இந்த 37-வது கட்டத்தில் 8-வது வரிசை எண்ணுக்கு நேராய் சூரியனுக்கு அடியில் 615 என்று போட்டிருப்பது சூரிய

னுக்கு சட்பலம் 615 பங்கு என்று அர்த்தமாகும். இவ்வி மாகவே மற்ற கிரகங்களுக்கும் சட்பலம் அறியவும்.

குறிப்பு :—துவாதச பாவங்களில் எந்த பாவத்திலாகிலு பல கிரகங்கள் இருந்தால், எந்த கிரகத்திற்குச் சட்பலம் அதி மாக விருக்கின்றதோ அந்த கிரகத்தின் சுபா அசுப பலம்தா அந்த பாவத்திற்கு உண்டாகும். கிரகங்கள் முழு பலம், சமபல சமபலத்திற்குத் தாழ்ந்த பலம் உடையன என்பதை அடியி கண்ட எண்களால் ஜாதக பாரிஜாதம் 2-வது அத்தியாய 40-வது சுலோகத்தில் சொல்லியபடி அறியவும்.

| கிரகங்கள். | | ரூபம். | | நமது கணிதப்படி பங்கு |
|---|---|---|---|---|
| சூரியன் | .... | $6\frac{1}{2}$ | .... | 650 |
| சந்திரன் | .... | 6 | .... | 600 |
| செவ்வாய் | .... | 5 | .... | 500 |
| புதன் | .... | 7 | .... | 700 |
| குரு | .... | $6\frac{1}{2}$ | .... | 650 |
| சுக்கிரன் | .... | $5\frac{1}{2}$ | .... | 550 |
| சனி | .... | 5 | .... | 500 |

நமது கணிதப்படி 1 ரூபம் என்பது 100 பங்கு ஆகும். சூரி யனுக்குச் சட்பலம் 650 பங்கு வந்தால் சூரியன் சமபலம் உடை யது. 650-க்கு மேற்பட்டால் பூர்ணபலம் உடையது. 650-க்கு குறைந்தால் சமபலத்திற்குத் தாழ்ந்த பலம் உடையது. இவ்வி மாகவே மற்ற கிரகங்களுக்கும் அவைகளுக்கு எதிரில் கொடு துள்ள எண்களைக் கொண்டு அக்கிரகங்கள் சமபலமுடையனவா பூர்ணபலம் உடையனவா, சமபலத்திற்குத் தாழ்ந்த பலமுடை யனவாவென்று அறியவும்.

(12) பாவதிருக் பலம் கணிக்க :—19-வது, 20-வது வாக் யங்களை உபயோகப்படுத்தும் விதத்தில் பாவதிருக்பலம் கணிக் என்ற பாகத்தை இங்கு ஒரு முறை வாசிக்கவும் இந்த 19-வது 20-வது வாக்கியங்களை உபயோகப்படுத்தும் விதத்தில் சொல்லி உதாரணம் பிரகாரம் பாவ திருக் பலம் கணிக்க பாவதிருக் பல அடியிற்கண்டபடி ஆகும்.

## பாவதிருக் பலம் 38-வது கட்டம்.

| வரிசை எண் | பார்க்கும் கிரகம். | பார்க்கப்படும் பாவங்கள். | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 1 | குரு | 23 | 94 | 81 | 82 | 19 | 0 |
| 2 | சுக்கிரன் | 0 | 0 | 9 | 43 | 66 | 33 |
| 3 | புதன் | 0 | 0 | 19 | 63 | 56 | 12 |
| 4 | சந்திரன் | 37 | 70 | 33 | 23 | 94 | 69 |
| 5 | கூட்ட சுபபலம் | 60 | 164 | 147 | 211 | 235 | 114 |
| 6 | சூரியன் | 0 | 15 | 55 | 60 | 20 | 60 |
| 7 | செவ்வாய் | 0 | 0 | 7 | 47 | 84 | 37 |
| 8 | சனி | 0 | 0 | 0 | 50 | 88 | 62 |
| 9 | கூட்ட பாப பலம் | 0 | 15 | 62 | 157 | 192 | 159 |
| 10 | நிகர சுபா அசுப பலம் | + 60 | + 149 | + 85 | + 54 | + 43 | —45 |
| 11 | 4-ல் ஒரு பங்கு | + 15 | + 37 | + 21 | + 14 | + 11 | —11 |

பாவதிருக் பலம் 38-வது கட்டம் தொடர்ச்சி

| வரிசை எண் | பார்க்கும் கிரகம். | பார்க்கப்படும் பாவங்கள். | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
| 1 | குரு | 0 | 0 | 6 | 37 | 82 | 76 |
| 2 | சுக்கிரன் | 33 | 92 | 66 | 41 | 16 | 0 |
| 3 | புதன் | 77 | 81 | 56 | 31 | 6 | 0 |
| 4 | சந்திரன் | 44 | 19 | 6 | 0 | 0 | 6 |
| 5 | கூட்ட சுப பலம் | 154 | 192 | 128 | 109 | 104 | 82 |
| 6 | சூரியன் | 85 | 60 | 35 | 10 | 0 | 0 |
| 7 | செவ்வாய் | 27 | 100 | 84 | 42 | 17 | 0 |
| 8 | சனி | 27 | 50 | 87 | 62 | 75 | 50 |
| 9 | கூட்ட சுப பலம் | 139 | 210 | 206 | 114 | 92 | 50 |
| 10 | நிகர சுபா அசுப பலம் | +15 | —18 | — 8 | —5 | +12 | +82 |
| 11 | 4-ல் ஒரு பங்கு | +4 | —5 | —20 | —1 | +3 | +8 |

இந்த 38 வது கட்டத்தில் தலைப்பில் 1 முதல் 12 வரையி போடப்பட்டிருக்கின்ற எண்கள் 12 பாவங்களைத் தெரிவிக்கு

1-வது வரிசை எண்ணிற்கு நேராய் குருவிற்கு எதிரில் 1-வது பாவத்திற்கு அடியில் 23 என்ற எண் போட்டிருப்பதால் குரு 1-வது பாவத்தை 23 அதாவது 100-ல் 23 பங்கு பலத்துடன் பார்க்கின்றது என்று அறியவேண்டியது. 5-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்கள் 1, 2, 3, 4 என்ற வரிசை எண்களுக்கு நேராயுள்ள எண்களைக் கூட்ட வருகின்ற எண்களாகும். 9-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்கள் 6, 7, 8 என்ற வரிசை எண்களுக்கு நேராயுள்ள எண்களைக் கூட்ட வருகின்ற எண்களாகும். மேலும் 5-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்கள் அந்தந்த பாவத்தைச் சுபக் கிரகங்கள் பார்க்கின்ற பார்வையைக் கூட்ட வருகின்ற மொத்த சுப "பாவ திருக்பலத்தைக்" காட்டும் எண்களாகும். 9-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்கள அந்தந்த பாவத்தைப் பாபக் கிரகங்கள் பார்க்கின்ற பார்வையைக் கூட்ட வருகின்ற மொத்த அசுப "பாவ திருக்பலத்தைக்" காட்டும் எண்களாகும். 10-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்கள் 5-வது, 9-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்களில் பெரிய எண்ணிலிருந்து சிறிய எண்ணைக் கழிக்க வருகின்ற எண்களாகும். இந்த எண்கள் பெரிதாயிருக்கின்ற சுப பல எண்ணிலிருந்து சிறியதாயிருக்கின்ற அசுப பல எண்ணைக் கழிக்க வருகின்ற நிகர சுப பலத்தை அல்லது பெரியதாயிருக்கின்ற அசுப பல எண்ணிலிருந்து சிறியதாயிருக்கின்ற சுப பல எண்ணைக் கழிக்க வருகின்ற நிகர அசுப பலத்தைக் காட்டும் எண்களாகும். நிகர பலம் சுப பலமானல் கூட்டல் குறியாகிய + என்ற இக்குறியையும், அசுப பலமானல் கழித்தல் குறியாகிய — என்ற இக்குறியையும் 10-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்களுக்கு முந்தி போட்டிருக்கின்றது. 11-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்கள் 10-வது வரிசை எண்ணிற்கு நேராயுள்ள எண்களில் நான்கில் ஒரு பாகமாகும்.

(13) பாவாதி பலம் கணிக்க :—பாவாதி பலத்தை 34-வது வாக்கியம் (1)-வது அயிட்டத்தில் சொல்லிய பிரகாரம் கணிக்க வேண்டியது. 7-வது கட்டத்திற்குப் பிறகு கொடுத்துள்ள பாவச் சக்கிரத்தையும், 37-வது கட்டத்தில் கொடுத்துள்ள சட்பலத்தையும் அனுசரித்து பாவாதி பலம் கணிக்க வேண்டியது. (1)-வது பாவத்தின் பாவாதி பலத்தை 34-வது வாக்கியத்தின் (1)-வது அயிட்டத்தில் உதாரணமாகக் கணித்துக் காட்டப்பட்டிருக்கின்

றது. ஆகையால் (1)-வது பாவத்தின் பாவாதி பலம் அந்த உ
ரணத்தில் கணித்த பிரகாரம் 747 பங்கு ஆகும். மற்ற பா
களுக்கு இந்த உதாரணம் பிரகாரம் கணிக்க இந்த 39-வது
டத்தில் காட்டியபடி பாவாதிபதி பலம் வரும்.

பாவாதி பலம் 39-வது கட்டம்.

| பாவம். | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 1 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பாவாதிபதி பலம் | 745 | 633 | 847 | 840 | 783 | 891 | 732 | 643 | 844 | 776 | 640 | 8 |

இந்த 39-வது கட்டத்தில் 1 என்ற எண்ணிற்கு அடி
745 என்ற எண்ணிருப்பது 1-வது பாவத்தின் பாவாதிபதி ப
745 பங்கு என்று தெரிவிக்கும். இப்படியே மற்றவைகள
தெரிவிக்கும்.

(14) புத குரு பாவபலம் அல்லது புத குரு பாவ திருக்பல
போட:—முதலில் 34-வது வாக்கியத்தில் 3-வது அயிட்டத்
சொல்லியதைப் படிக்கவும். பிறகு புதனுடைய பாவதிருக் ப
த்தையும் குருவினுடைய பாவதிருக் பலத்தையும் முன்ன
கணித்து 38-வது கட்டத்தில் போட்டிருப்பதால் அவைக
எடுத்து அடியிற் கண்டபடி போட்டு கூட்ட வருவது புதகு
பாவபலமாகும்.

புதகுரு பாவபலம் 40-வது கட்டம்.

| வரிசை எண் | பார்க்குங் கிரகம். | பார்க்கப்படும் பாவங்கள். | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 1 | புதன் | 0 | 0 | 19 | 63 | 56 | 12 |
| 2 | குரு | 23 | 94 | 81 | 82 | 19 | 0 |
| 3 | புதகுரு பாவபலம் | 23 | 94 | 100 | 145 | 75 | 12 |

புதகுரு பாவபலம் 40-வது கட்டம் தொடர்ச்சி.

| வரிசை எண். | பார்க்கும் கிரகம். | பார்க்கப்படும் பாவங்கள். | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | |
| 1 | புதன் | 77 | 81 | 56 | 31 | 6 | 0 | 38-வது கட்டம 3-வது வரிசை எண் பார்க்க |
| 2 | குரு | 0 | 0 | 6 | 37 | 82 | 76 | 38-வது கட்டம் 1-வது வரிசை எண் பார்க்க |
| 3 | புதன் குரு பாவபலம் | 77 | 81 | 62 | 68 | 88 | 76 | 1, 2 வரிசை எண்களைக் கூட்ட |

(15) பாவதிக்குப் பலம் கணிக்க :—முதலில் பாவதிக்குப் பலத்தைக் கணிக்கும் வழி 34-வது வாக்கியத்தில் 4-வது அயிட்டத்தில் சொல்லியிருப்பதால் இதை முதலில் படிக்கவும். இந்த ஜாதகத்திற்கு 1-வது, 2-வது, 3-வது பாவங்களின் திக்குப் பலத்தை 34-வது வாக்கியத்தின் 4-வது அயிட்டத்தில் உதாரணங்களாக கணித்துக் காட்டியிருக்கின்றது. இவ்விதமாகக் கணிக்க 12 பாவங்களின் திக்குப் பலம் அடியிற்கண்டபடி ஆகும்.

பாவதிக்குப் பலம் 41-வது கட்டம்.

| பாவம். | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| திக்குப் பலம் | 100 | 17 | 67 | 0 | 33 | 67 | 50 | 67 | 33 | 0 | 83 | 83 |

(16) பாவபலம் கணிக்க :—பாவபலம் என்பது (1) பாவதிருக்பலம், (2) பாவாதிபதி பலம், (3) புதகுரு பாவதிருக் பலம், (4) பாவதிக்குப் பலம் ஆகிய இந்நான்கையுங் கூட்ட வரும் பாவபலம் அடுத்த பக்கத்தில் 42-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

## பாவபலம் 42-வது கட்டம்.

| வரிசை எண். | பாவம் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | பாவதிருக் பலம் | + 15 | + 37 | + 21 | + 14 | + 11 | —1 |
| 2 | பாவாதி பதிபலம் | 745 | 633 | 847 | 840 | 783 | 891 |
| 3 | புதகுரு பாவபலம் | 23 | 94 | 100 | 145 | 75 | 1 |
| 4 | பாவதிக்கு பலம் | 100 | 17 | 67 | 0 | 33 | 67 |
| 5 | பாவபலம் | 883 | 781 | 1,035 | 999 | 902 | 95 |

## பாவபலம் 42-வது கட்டம் தொடர்ச்சி.

| வரிசை எண். | பாவம் | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | பாவதிருக் பலம் | + 4 | —5 | —20 | —1 | + 3 | + 8 | 38-வது கட்ட பார்க்கவும் |
| 2 | பாவாதி பதிபலம் | 732 | 643 | 844 | 776 | 640 | 822 | 39-வது கட்ட பார்க்கவும் |
| 3 | புத குரு பாவ பலம் | 77 | 81 | 62 | 63 | 88 | 76 | 40-வது கட்ட பார்க்கவும் |
| 4 | பாவதிக் குப்பலம் | 50 | 67 | 33 | 0 | 83 | 83 | 41-வது கட்ட பார்க்கவும் |
| 5 | பாவ பலம் | 863 | 786 | 919 | 843 | 814 | 989 | கூட்ட |

குறிப்பு :—1-வது வரிசை எண்ணுக்கு நேராய் சிலவிடங்களில் கூட்டல் குறியாகிய + என்ற குறியையும், சிலவிடங்களில் கழித்தல் குறியாகிய — என்ற குறியையும் போட்டிருக்கின்றது. கூட்டல் குறி சுப பலத்தையும், கழித்தல் குறி அசுப பலத்தையும் தெரிவிக்கும். மற்ற எண்களுக்கு ஒரு குறியும் போடாமல் இருக்கின்றது. இப்படி எண்களுக்கு முன் ஒரு குறியும் போடாமலிருந்தால் அந்த எண்களுக்கு முன் + என்ற கூட்டல் குறி இருப்பதாக எப்போதும் பாவிக்கவேண்டியது. ஆகையால் 1-வது வரிசை எண் முதல் 4-வது வரிசை எண் வரையிலுமுள்ள வரிசை எண்களுக்கு எதிரிலுள்ள எண்களைக் கூட்ட 5-வது வரிசை எண்ணுக்கு நேராயுள்ள எண்கள் வரும். கூட்டும்போது கூட்டல் குறியுள்ள எண்களையும், ஒரு குறியும் இல்லாமல் இருக்கின்ற (அதாவது கூட்டல் குறியை முன்னே உடையதாக மேலே சொல்லப்பட்ட) எண்களையும் ஒன்ருய் கூட்ட வருகின்ற கூட்டல் எண்ணில் இருந்து கழித்தல் குறியையுடைய எண்ணைக் கழிக்க வேண்டியது. உதாரணமாக 6-வது பாவத்தின் கீழ் 1-வது வரிசை எண்ணுக்கு நேராய் 11-ம், 2-வது வரிசை எண்ணுக்கு நேராய் 891-ம், 3-வது வரிசை எண்ணுக்கு நேராய் 12-ம், 4-வது வரிசை எண்ணுக்கு நேராய் 67-ம் இருப்பதால், ஒரு குறியும் இல்லாமலிருக்கின்ற எண்களாகிய 891, 12, 67 இவைகளைக் கூட்ட 970 வரும். இந்த 970-ல் இருந்து கழித்தல் குறியையுடைய 11-யைக் கழிக்க 959 வரும். இந்த 959தான் 6-வது பாவத்தின் கீழ் 5-வது வரிசை எண்ணுக்கு நேராய்ப் போடப்பட்டுள்ளது.

இஷ்டபலம் 43-வது கட்டம்

| கிரகம். | சூ | சந். | செ. | பு. | கு. | சு. | ச. |
|---|---|---|---|---|---|---|---|
| இஷ்ட பலம் | 23 | 38 | 52 | 86 | 73 | 30 | 69 |

(17) இஷ்டபலம் கணிக்க :—35-வது வாக்கியத்தை இங்கு வாசிக்கவும். சூரியனுடைய இஷ்டபலத்தை 35-வது வாக்கியத்தில் இஷ்டபலம் கணிக்கும் விதத்தில் உதாரணமாகக் கணித்துக்

காட்டப்பட்டிருக்கிறது. இவ்விதமாகவே எல்லா கிரகங்களுக்கும் கணிக்க இஷ்டபலம் இந்த 43-வது கட்டத்தில் கண்டபடி ஆகும். (உச்சப்பலமும், ஜேஷ்டா பலமும் 9-வது, 36-வது கட்டங்களில் கொடுக்கப்பட்டுள).

கஷ்டபலம் 44-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| கஷ்ட பலம் | 71 | 59 | 48 | 41 | 24 | 59 | 27 |

(18) கஷ்டபலம் கணிக்க :—35-வது வாக்கியத்தை இங்கு வாசிக்கவும். சூரியனுடைய கஷ்டபலத்தை 35-வது வாக்கியத்தில் கஷ்டபலம் கணிக்கும் விதத்தில் உதாரணமாகக் கணித்து காட்டப்பட்டிருக்கின்றது. இவ்விதமாகவே எல்லா கிரகங்களுக்கும் கணிக்கக் கஷ்டபலம் இந்த 44-வது கட்டத்தில் கண்டபடி ஆகும். (உச்சபலமும், ஜேஷ்டா பலமும் 9-வது, 36-வது கட்டங்களில் கொடுக்கப்பட்டுள).

இஷ்டசட்பலம் 45-வது கட்டம்.

| கிரகம். | சூ. | சந். | செ. | பு. | கு. | சு. | ச. |
|---|---|---|---|---|---|---|---|
| இஷ்டசட்பலம் | 141 | 266 | 322 | 802 | 694 | 195 | 54 |

(19) இஷ்ட சட்பலம் கணிக்க :—36-வது வாக்கியத்தை இங்கு வாசிக்கவும். சூரியனுடைய இஷ்டசட்பலத்தை 36-வது வாக்கியத்தில் உதாரணமாகக் கணித்துக் காட்டப்பட்டிருக்கிறது. இவ்விதமாகவே எல்லா கிரகங்களுக்கும் கணிக்க இஷ்டசட்பலம் இந்த 45-வது கட்டத்தில் கண்டபடி ஆகும். (சட்பலமும், இஷ்டபலமும் 37-வது, 43-வது கட்டங்களில் கொடுக்கப்பட்டுள).

கஷ்டசட்பலம் 46-வது கட்டம்.

| கிரகம். | சூ | சந் | அ | பு | குரு | சு | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| கஷ்டசட்பலம் | 437 | 414 | 298 | 383 | 228 | 283 | 212 |

(20) கஷ்ட சட்பலம் கணிக்க:—36-வது வாக்கியத்தை இங்கு வாசிக்கவும். சூரியனுடைய கஷ்டசட்பலத்தை 36-வது வாக்கியத்தில் உதாரணமாகக் கணித்துக் காட்டப்பட்டிருக்கின்றது. இவ்விதமாகவே எல்லா கிரகங்களுக்கும் கணிக்க கஷ்டசட்பலம் இந்த 46-வது கட்டத்தில் கண்டபடி ஆகும். (சட்பலமும், கஷ்டபலமும் 37-வது, 44-வது கட்டங்களில் கொடுக்கப்பட்டுள.)

(21) இஷ்டகிரக திருக்பலம் கணிக்க:—இங்கு முதலில் 37-வது வாக்கியத்தில் சொல்லியதை வாசிக்கவும். கிரக திருக்பலத்தை முன்னமே கணித்து 8-வது கட்டத்தில் போட்டிருக்கின்றது. இஷ்டபலத்தை 43-வது கட்டத்தில் கொடுத்திருக்கிறது. இந்த கட்டத்தின் உதவியால் 37-வது வாக்கியத்தில் 1-வது அயிட்டத்தில் சொல்லியதுபோல கணிக்கவேண்டியது. சூரியனுடைய இஷ்டகிரக திருக்பலத்தை 37-வது வாக்கியத்தில் 1-வது அயிட்டத்தில் உதாரணமாகக் கணித்துக் காட்டப்பட்டிருக்கின்றது. இவ்விதமாகவே மற்ற கிரகங்களுக்கும் கணிக்க இஷ்டகிரக திருக்பலம் கீழே 47-வது கட்டத்தில் கண்டபடி ஆகும்.

## இஷ்டகிரக திருக்பலம் 47-வது கட்டம்.

| வரிசை எண் | பார்க்கும் கிரகம். | பார்க்கப்படும் கிரகங்கள். | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | சூ. | சந். | செ | பு. | குரு | சுக். | ச[illegible] |
| 1 | சூரியன் | 0 | 0 | 2 | 0 | 15 | 2 | [illegible] |
| 2 | சந்திரன் | 6 | 0 | 27 | 18 | 10 | 26 | 2[illegible] |
| 3 | செவ்வாய் | 0 | 12 | 0 | 0 | 52 | 0 | [illegible] |
| 4 | புதன் | 0 | 10 | 0 | 0 | 75 | 0 | [illegible] |
| 5 | குரு | 26 | 55 | 68 | 84 | 0 | 64 | 6[illegible] |
| 6 | சுக்கிரன் | 0 | 7 | 0 | 0 | 29 | 0 | [illegible] |
| 7 | சனி | 7 | 43 | 0 | 0 | 19 | 0 | [illegible] |

(22) கஷ்ட திருக்பலம் கணிக்க: இங்கு முதலில் 37-[illegible] வாக்கியத்தில் சொல்லியதை வாசிக்கவும். கிரக திருக்பலத்[illegible] முன்னமே கணித்து 8-வது கட்டத்தில் போட்டிருக்கின்[illegible] கஷ்டபலத்தை 44-வது கட்டத்தில் கொடுத்திருக்கின்றது. இ[illegible] கட்டத்தின் உதவியால் 37-வது வாக்கியத்தில் 2-வது அயிட்[illegible] தில் சொல்லியதுபோல கணிக்கவேண்டியது. சூரியனுடை[illegible] கஷ்ட திருக்பலத்தை 36-வது வாக்கியத்தில் 2-வது அயிட்[illegible] தில் உதாரணமாகக் கணித்துக் காட்டப்பட்டிருக்கின்றது. [illegible] விதமாகவே மற்ற கிரகங்களுக்கும் கணிக்க கஷ்டதிருக்ப[illegible] கீழ் 48-வது கண்டபடி ஆகும்.

கஷ்டதிருக்பலம் 48-வது கட்டம்.

| வரிசை எண் | பார்க்கும் கிரகம். | பார்க்கப்படும் கிரகங்கள். | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | சூ. | சந். | செ. | பு. | குரு | சுக். | சனி |
| 1 | சூரியன் | 0 | 0 | 5 | 0 | 47 | 5 | 21 |
| 2 | சந்திரன் | 9 | 0 | 42 | 28 | 15 | 40 | 34 |
| 3 | செவ்வாய் | 0 | 11 | 0 | 0 | 48 | 0 | 0 |
| 4 | புதன் | 0 | 2 | 0 | 0 | 12 | 0 | 1 |
| 5 | குரு | 9 | 18 | 22 | 11 | 0 | 21 | 20 |
| 6 | சுக்கிரன் | 0 | 13 | 0 | 0 | 57 | 0 | 0 |
| 7 | சனி | 3 | 17 | 0 | 0 | 7 | 0 | 0 |

(23) இஷ்ட கஷ்ட சப்தவர்க்கஜபலம் கணிக்க :—முதலில் 38-வது வாக்கியத்தில் சொல்லியதைப் படித்துவிட்டு அதில் சொல்லிய பிரகாரம் இஷ்ட கஷ்ட சப்தவர்க்கஜ பலத்தைக் கணிக்க வேண்டியது. இஷ்ட கஷ்ட இராசி வர்க்க பலத்தையும், இஷ்ட கஷ்ட நவாம்ச வர்க்க பலத்தையும் உதாரணமாக 38-வது வாக்கியத்தில் கணித்துக் காட்டப்பட்டிருக்கின்றது. இவ்விதமாகவே மற்ற வர்க்கங்களுக்கும் கணிக்க அடியில் 49-வது, 50-வது கட்டங்களில் கண்டபடி இஷ்ட கஷ்ட சப்தவர்க்கஜ பலம் வரும்.

## இஷ்ட சப்த வர்க்கஜ பலம் 49-வது கட்டம்.

| கிரகங்கள். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | [illegible] |
|---|---|---|---|---|---|---|---|
| இஷ்டராசி வர்க்கம் | 25 | 50 | 6 | 13 | 13 | 50 | [illegible] |
| இஷ்ட நவாம்ச வர்க்கம் | 13 | 13 | 3 | 13 | 25 | 25 | [illegible] |
| இஷ்ட திரேகாண வர்க்கம் | 7 | 13 | 2 | 13 | 25 | 7 | [illegible] |
| இஷ்ட துவாதசாம்ச வர்க்கம் | 7 | 19 | 25 | 13 | 25 | 7 | [illegible] |
| இஷ்ட சப்தமாம்ச வர்க்கம் | 13 | 25 | 25 | 3 | 2 | 3 | [illegible] |
| இஷ்ட ஓரா வர்க்கம் | 25 | 19 | 19 | 19 | 19 | 7 | [illegible] |
| இஷ்ட திரிம்சாம்ச வர்க்கம் | 7 | 13 | 3 | 3 | 2 | 7 | [illegible] |
| கூட்ட மொத்தம் | 97 | 152 | 83 | 77 | 111 | 106 | [illegible] |

கஷ்ட சப்தவர்க்கஜ பலம் 50-வது கட்டம்.

| இரகங்கள் | சூ. | சந். | செ. | பு. | குரு. | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| கஷ்டராசி வர்க்கம் | 75 | 50 | 94 | 87 | 87 | 50 | 87 |
| கஷ்ட நவாம்ச வர்க்கம் | 37 | 37 | 47 | 37 | 25 | 25 | 25 |
| கஷ்ட திரேகாண வர்க்கம் | 43 | 37 | 48 | 37 | 25 | 43 | 48 |
| கஷ்ட துவாதசாம்ச வர்க்கம் | 43 | 31 | 25 | 37 | 25 | 43 | 48 |
| கஷ்ட சப்த்தமாம்ச வர்க்கம் | 37 | 25 | 25 | 47 | 48 | 47 | 31 |
| கஷ்ட ஓராவர்க்கம் | 25 | 31 | 31 | 31 | 31 | 43 | 43 |
| கஷ்ட திரிம்சாம்ச வர்க்கம் | 43 | 37 | 47 | 47 | 48 | 43 | 25 |
| கூட்ட மொத்தம் | 303 | 248 | 317 | 328 | 289 | 294 | 307 |

(24) சுப அசுப பங்க்தீ கணிக்க :—சுப அசுப பங்க்தீ என்றால் என்னவென்பதை தெரிந்துகொள்ளவும், இவைகளைக் கணிக்கவும் 39-வது வாக்கியத்தைப் படிக்கவும். சுப அசுப பங்க்திகளை 39-வது வாக்கியத்தில் உதாரணமாகக் கணித்துக் காட்டப்பட்டிருக்கின்றது. அவைகள் அடியில் 51-வது, 52-வது கட்டங்களில் கண்டபடி ஆகும்.

## சுப பங்க்தி 51-வது கட்டம்.

| கிரகங்கள். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | [illegible] |
|---|---|---|---|---|---|---|---|
| இராசிவர்க்க சுப பங்க்தி | 24 | 88 | 21 | 19 | 28 | 27 | 2[illegible] |
| நவாம்சவர்க்க சுப பங்க்தி | 12 | 19 | 11 | 10 | 14 | 14 | 1[illegible] |
| திரேகாண வர்க்க சுப பங்க்தி | 12 | 19 | 11 | 10 | 14 | 14 | 1[illegible] |
| துவாதசாம்ச வர்க்க சுப பங்க்தி | 12 | 19 | 11 | 10 | 14 | 14 | 1[illegible] |
| சப்த்தமாம்ச வர்க்க சுப பங்க்தி | 12 | 19 | 11 | 10 | 14 | 14 | 1[illegible] |
| ஹோரா வர்க்க சுப பங்க்தி | 12 | 19 | 11 | 10 | 14 | 14 | 1[illegible] |
| திரிம்சாம்சவர்க்க சுப பங்க்தி | 12 | 19 | 11 | 10 | 14 | 14 | 1[illegible] |

## அசுப பங்க்தி 52-வது கட்டம்.

| கிரகங்கள். | ரூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| இராசிவர்க்க அசுப பங்க்தி | 76 | 62 | 79 | 81 | 72 | 74 | 77 |
| நவாம்சவர்க்க அசுப பங்க்தி | 38 | 31 | 40 | 41 | 36 | 37 | 39 |
| திரேகாணவர்க்க அசுப பங்க்தி | 38 | 31 | 40 | 41 | 36 | 37 | 39 |
| துவாதசாம்சவர்க்க அசுப பங்க்தி | 38 | 31 | 40 | 41 | 36 | 37 | 39 |
| சப்த்தமாம்சவர்க்க அசுப பங்க்தி | 38 | 31 | 40 | 41 | 36 | 37 | 39 |
| ஓராவர்க்க அசுப பங்க்தி | 38 | 31 | 40 | 41 | 36 | 37 | 39 |
| திரிம்சாம்சவர்க்க அசுபபங்க்தி | 38 | 31 | 40 | 41 | 36 | 37 | 39 |

(25) சுப அசுப மத்திய பலம் கணிக்க :—முதலில் 40-வது வாக்கியத்தை இங்கு படிக்கவேண்டியது. இந்த 40-வது வாக்கியத்தில் காட்டிய உதாரணங்கள் பிரகாரம் கணிக்க சுப அசுப மத்திய பலம் அடியில் 53-வது, 54-வது கட்டங்களில் கண்டபடி ஆகும்.

## சுப மத்திய பலம் 53-வது கட்டம்.

| கிரகங்கள். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | ச… |
|---|---|---|---|---|---|---|---|
| இராசிவர்க்க சுப மத்திய பலம் | 18 | 58 | 22 | 20 | 23 | 29 | 19 |
| நவாம்சவர்க்க சுப மத்தியபலம் | 9 | 21 | 12 | 9 | 16 | 15 | 11 |
| திரேகாண வர்க்க சுப மத்தியபலம் | 12 | 21 | 8 | 9 | 16 | 11 | 18 |
| துவாதசாம்ச வர்க்க சுப மத்தியபலம் | 13 | 15 | 11 | 9 | 16 | 21 | 18 |
| சப்தமாம்ச வர்க்க சுப மத்தியபலம் | 9 | 29 | 9 | 11 | 15 | 16 | 9 |
| ஓரா வர்க்க சுப மத்திய பலம் | 12 | 18 | 17 | 10 | 21 | 21 | 12 |
| திரிம்சாம்ச வர்க்க சுப மத்தியபலம் | 13 | 16 | 12 | 11 | 15 | 11 | 11 |
| மொத்த சுப மத்தியபலம் | 86 | 178 | 91 | 79 | 122 | 124 | 98 |

அசுப மத்திய பலம் 54-வது கட்டம்.

| கிரகங்கள். | சூ. | சந். | செ. | பு. | குரு | சுக். | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| இராசி வர்க்க அசுப மத்திய பலம் | 245 | 154 | 232 | 238 | 228 | 218 | 244 |
| நவாம்ச வர்க்க அசுப மத்தியபலம் | 123 | 90 | 118 | 126 | 104 | 109 | 120 |
| திரேகாண வர்க்க அசுப மத்தியபலம் | 117 | 90 | 129 | 126 | 104 | 120 | 97 |
| துவாதசாம்ச வர்க்க அசுப மத்தியபலம் | 110 | 100 | 121 | 126 | 104 | 92 | 97 |
| சப்தமாம்சவர்க்க அசுப மத்தியபலம் | 128 | 77 | 127 | 118 | 106 | 107 | 126 |
| ஓராவர்க்க அசுப மத்தியபலம் | 115 | 94 | 99 | 124 | 89 | 92 | 118 |
| திரிம்சாம்சவர்க்க அசுப மத்தியபலம் | 110 | 98 | 118 | 118 | 106 | 120 | 120 |
| மொத்த அசுப மத்திய பலம் | 948 | 703 | 944 | 976 | 841 | 858 | 922 |

(26) ஸ்பஷ்ட சுப பலம் கணிக்க :—முதலில் 41-வது வாக்கியத்தை இங்கு படிக்கவேண்டியது. இந்த 41-வது வாக்கியத்தில் கொடுத்துள்ள உதாரணங்கள் பிரகாரம் கணிக்க ஸ்பஷ்ட சுப அசுப பலம் அடியில் 55-வது, 56-வது கட்டங்களில் கண்டபடி ஆகும்.

ஸ்பஷ்ட சுப பலம் 55-வது கட்டம்.

| கிரகங்கள். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | ச[illegible] |
|---|---|---|---|---|---|---|---|
| இராசி வர்க்க ஸ்பஷ்ட சுப பலம் | 60 | 154 | 55 | 79 | 109 | 57 | 79 |
| நவாம்ச வர்க்க ஸ்பஷ்ட சுப பலம் | 30 | 90 | 30 | 59 | 111 | 29 | 6[illegible] |
| திரேகாண வர்க்க ஸ்பஷ்ட சுப பலம் | 33 | 90 | 41 | 59 | 111 | 44 | 6[illegible] |
| துவாதசாம்ச வர்க்க ஸ்பஷ்ட சுப பலம் | 41 | 69 | 23 | 59 | 111 | 48 | 6[illegible] |
| சப்தமாம்சவர்க்க ஸ்பஷ்ட சுப பலம் | 30 | 77 | 29 | 82 | 55 | 59 | 5[illegible] |
| ஓரா வர்க்க ஸ்பஷ்டசுப பலம் | 17 | 35 | 50 | 34 | 90 | 48 | [illegible] |
| திரிம்சாம்சவர்க்க ஸ்பஷ்ட சுப பலம் | 41 | 50 | 30 | 32 | 55 | 44 | [illegible] |
| மொத்த ஸ்பஷ்ட சுப பலம் | 252 | 565 | 258 | 454 | 642 | 329 | 4[illegible] |

ஸ்பஷ்ட அசுப பலம் 56-வது கட்டம்.

| கிரகங்கள். | சூ. | சந். | செ. | பு. | குரு | சு. | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| இராசிவர்க்க ஸ்பஷ்ட அசுப பலம் | 1002 | 638 | 784 | 912 | 594 | 835 | 618 |
| நவாம்சவர்க்க ஸ்பஷ்ட அசுப பலம் | 503 | 277 | 399 | 359 | 237 | 417 | 254 |
| திரேகாணவர்க்க ஸ்பஷ்ட அசுப பலம் | 356 | 277 | 436 | 359 | 237 | 460 | 287 |
| துவாதசாம்ச வர்க்க ஸ்பஷ்ட அசுப பலம் | 347 | 398 | 437 | 359 | 237 | 376 | 295 |
| சப்த்தமாம்ச வர்க்க ஸ்பஷ்ட அசுப பலம் | 503 | 319 | 378 | 349 | 313 | 316 | 359 |
| ஓராவர்க்க ஸ்பஷ்ட அசுப பலம் | 503 | 400 | 348 | 507 | 274 | 366 | 359 |
| திரிம்சாம்ச வர்க்க ஸ்பஷ்ட அசுப பலம் | 347 | 321 | 399 | 349 | 313 | 460 | 254 |
| மொத்த ஸ்பஷ்ட அசுப பலம் | 3561 | 2630 | 3181 | 3194 | 2205 | 3230 | 2421 |

## அத்தியாயம் 2.

---

இந்த புத்தகத்தின் மூன்ருவது அத்தியாயத்தில் கொடுத்து வாக்கியங்களை உபயோகப்படுத்தும் விதம் :—

1-வது, 2-வது, 3-வது, 4-வது, வாக்கியங்கள் :—இந்த நால் வாக்கியங்களும் வாய்ப்பாடுகளானபடியாலும், இவைகள் தா நன்ருய் விளங்கக்கூடியனவா யிருப்பதாலும் இவைகளைப்ப இங்கு விவரிப்பது அவசியமில்லை.

5-வது வாக்கியம் (மணி நிமிஷமும், நாழிகை விளுடியும்): இந்த வாக்கியத்தால் மணி நிமிஷத்தை நாழிகை விநாடியாக நாழிகை விளுடிகளை மணி நிமிஷங்களாகவும் வெகு சுலபத் மாற்றலாம்.

உதாரணம் :—உதாரணமாக ஒரு குழந்தை 1869ளு டோபர்மீ 2உ காலை கெடியார மணி 7 நிமிஷம் 13-க்கு ஜெ மானதென்றும், அன்று சூரிய உதயம் காலை மணி 5 நிமி 56-க்கு நேர்ந்ததென்றும் வைத்துக்கொண்டால், சூரிய உத லிருந்து ஜெனன காலம் வரையிலும் செல்லான நாழிகை டியை பின்வருமாறு இந்த 5-வது வாக்கியத்தால் அறிவோம்.

காலை மணி 7 நிமிஷம் 0-க்கு நாழிகை 2 விநாடி 30 ஆகு

மணி 0 நிமிஷம் 13-க்கு நாழிகை 0 விநாடி 32 $\frac{1}{2}$ ஆகும்.

ஆகவே காலை மணி 7, நிமிஷம் 13-க்கு நாழிகை 3 விநாடி கூட்ட வரும். அதாவது காலை மணி 6 நிமிஷம் 0-த்திலிரு காலை மணி 7 நிமிஷம் 13 வரையிலும் கணக்கிட நாழிகை விநாடி 2$\frac{1}{2}$ வரும். ஆனல் அன்று சூரியன் காலை மணி 6 நிமி 0-த்தில் உதயமாகாமல் முந்தியாக காலை மணி 5 நிமிஷம் 56- உதயம். அதாவது சூரியன் (மணி 6 நிமிஷம் 0-த்திலிருந்து 5 நிமிஷம் 56-யைக் கழிக்க வருகின்ற) 4 நிமிஷம் முந்தி உதயம், இந்த 5-வது வாக்கியத்தில் 4 நிமிஷத்திற்கு விநாடி

ஆவதால் சூரியன் 10 விநாடி முந்தியாக உதயம் என ஏற்படும். சூரிய உதயம் 6 மணிக்கு முந்தியாக விருப்பதால் * இங்கு வந்த 10 விநாடியை முந்தி மேலே வந்த நாழிகை 3 விநாடி 2½-புடன் கூட்டவேண்டும். அப்படிக் கூட்ட நாழிகை 3 விநாடி 12½ வரும். ஆகையால் மேல்கண்ட தேதியில் ஜெனன காலமாகிய காலை மணி 7 நிமிஷம் 13-க்குச் சூரிய உதயத்திலிருந்து நாழிகை 3 விநாடி 12½ ஆகும். அதாவது ஜெனனம் க.லை நாழிகை 3 விநாடி 12½-க்கு நேர்ந்தது என்று ஏற்படும்.

* குறிப்பு :—சூரிய உதயம் காலை 6 மணிக்கு முந்தி எவ்வளவு நிமிஷத்தில் நேரிடுகின்றதோ அவ்வளவு நிமிஷத்திற்குரிய நாழிகை விநாடியைக் கூட்டவேண்டும். சூரிய உதயம் 6 மணிக்கு பிந்தி எவ்வளவு நிமிஷத்தில் நேரிடுகின்றதோ அவ்வளவு நிமிஷத்திற்கு உரிய நாழிகை விநாடியைக் கழிக்க வேண்டும். உதாரணமாக சூரியனுடைய உதயம் காலை 6 மணி 4 நிமிஷத்திற்கு நேர்ந்தால் 4 நிமிஷத்திற்கு 10 விநாடியாவதால் இந்த 10 விநாடியை மேலே வந்த நாழிகை 3 விநாடி 2½-யிலிருந்து கழிக்கவேண்டும். அப்படி கழிக்க நாழிகை 2 விநாடி 52½ வரும். அதாவது சூரிய உதயம் காலை மணி 6 நிமிஷம் 4-க்கு நேரிடுகிற தினத்தில் காலை மணி 7 நிமிஷம் 13-க்கு சூரிய உதயத்திலிருந்து நாழிகை 2 விநாடி 52½ ஆகும் என்பதாம்.

உதாரணம் (2) ஒரு தினத்தில் சூரிய உதயம் காலை மணி 5 நிமிஷம் 56-க்கு நேர்ந்தது அன்று ஒரு குழந்தை சூரிய உதயத்திலிருந்து நாழிகை 3 விநாடி 12½-க்கு ஜெனனமானல் அப்போது கெடியார ரீதியாய் மணியை அறிவோம். இந்த நாழிகை 3 விநாடி 12½-க்கு அடுத்த சிறிய நாழிகை விநாடியை 5-வது வாக்கியத்தில் கண்டெடுத்து அதற்குத் தகுந்தாற்போல் இந்த நாழிகை 3 விநாடி 12½-யை பிரித்துக்கொள்ளவேண்டியது. அதாவது இதற்கு அடுத்த சிறிய நாழிகையானது 2 விநாடி 30 ஆகும். ஆகவே நாழிகை 3 விநாடி 12½-யை அடியிற்கண்டபடி பிரித்துக்கொள்ளவும்.

(1) நாழிகை 2 விநாடி 30 இதற்கு மணி 7 நிமிஷம் 0 ஆகும்.
(2) நாழிகை 0 விநாடி 30 ஷ 0 நிமிஷம் 12 „
(3) நாழிகை 0 விநாடி 12½ ஷ 0 நிமிஷம் 5 „
ஆகவே கூட்ட, நாழி 3 விநாடி 12½, இதற்கு மணி 7 நிமி. 17ஆகும்

ஆகையால் நாழிகை 3 விநாடி 12½-க்கு மணி 7 நிமிஷம் என்று அறியவும்.

அன்று சூரிய உதயம் காலை மணி 5 நிமிஷம் 56-க்கு அ வது 6 மணிக்கு * முந்தியே 4 நிமிஷத்தில் உதயமானதால் இ 4 நிமிஷத்தை மேலே வந்த மணி 7 நிமிஷம் 17-ல் இரு கழிக்க வேண்டும். அப்படி கழிக்க மணி 7 நிமிஷம் 13 வ ஆகையால் மேல் கண்ட தினத்தில் சூரிய உதயத்திலிரு நாழிகை 3 விநாடி 12½-க்குக் கெடியார ரீதியாய் காலை மணி நிமிஷம் 13 என்று அறியவேண்டியது.

* குறிப்பு :—சூரிய உதயம் 6 மணிக்குப் பிந்தியானல் எ ளவு நிமிஷம் பிந்தியாகின்றதோ அவ்வளவு நிமிஷத்தை ம 7 நிமிஷம் 17-உடன் கூட்டவேண்டும்.

விசேஷ குறிப்பு :—ஜெனன கால மணியோ அல்லது நா கையோ அறியவேண்டுமானல் அநேக சோதிடர்கள் சூரிய உ யத்தைக் கவனிக்கிறதே கிடையாது. அதனுல் லக்கின சந்தி ஜாதகங்களில் லக்கினத்தைத் தவறுதலாய்க் கணித்துவிடுகின் கள். சூரிய உதயத்தைக் கவனியாமல் கணிக்கின்ற லக்கின ளும், அம்சா லக்கினங்களும் பெரும்பான்மையும் தவறுதல இருக்கும் என்பதற்குச் சந்தேகமே கிடையாது. மேலும் ஜென மான குழந்தை ஆணு பெண்ணு என்று அறிவதற்கு தினத்தை 48 சம பாகமாகப் பங்கிடுகிருர்கள். அப்படி பங் பாகம் ஒன்றுக்கு 1¼ நாழிகை வரும். ஞாயிற்றுக்கிழமை முதல் பாகமாகிய 1¼ நாழிகைக்குள் குழந்தை ஜெனனமா அந்த குழந்தை ஆண் என்றும், இரண்டாவது பாகத்தில் ஜென மானல் பெண் என்றும் இவ்விதமாகக் கிழமையையும், ஜென நாழிகையையும் அனுசரித்து பிறந்த குழந்தை ஆணு பெண் என்று அறிய ஒரு வழி இருக்கின்றது. இந்த வழியை அனுசரி வேண்டுமானல் சூரிய உதயத்தைக் கவனித்தல் மிகவும் அவ மாகும். இல்லாவிட்டால் ஆண் பெண் என்று சொல்லுகி வழி தவறிப்போகும் என்பதற்குச் சந்தேகமே கிடையாது.

6-வது வாக்கியம் திரை ராசிக் கணிதம் :—இதற்குத் தி ராசிக் கணித வாக்கியம் என்று பெயர். கிரகங்களின் ஸ்பு செய்வதில் இது மிகவும் உபயோகமானது. உதாரணமாக

யில் கண்டபடி குரு, சுக்கிரன், சந்திரன் இவர்களுடைய ஸ்புடம் இருப்பதாக வைத்துக்கொள்வோம்.

| | (1) 1869ஞ அக்டோபர்மீ 1உ பகல் 4 மணி 36 நிமி ஷத்திற்கு கிரகஸ்புடம். | (2) 1869ஞ அக்டோபர்மீ 2உ பகல் 4 மணி 36 நிமி ஷத்திற்குக் கிரகஸ்புடம். | (3) தினகதி |
|---|---|---|---|
| | பாகை—கலை | பாகை—கலை | பாகை—கலை |
| குருஸ்புடம் | 28—19 | 28—15 | வக் 0— 4 |
| சுக்கிரஸ்புடம் | 203—47 | 205— 0 | 1—13 |
| சந்திரஸ்புடம் | 109—24 | 123—47 | 14—23 |

இவ்விதமாக கிரகஸ்புடமிருந்தால், 1869ஞ அக்டோபர்மீ 2உ காலை மணி 7 நிமிஷம் 13-க்குக் கிரகஸ்புடம் கணிப்போம்.

முதலில் மேலே கிரகஸ்புடங்கொடுத்துள்ள காலத்திலிருந்து ஜெனன காலம் வரையிலுமுள்ள காலத்தின் அளவை அறிய வேண்டும். கிரகஸ்புடம் கொடுத்துள்ள காலமாகிய 1-ம் தேதி பகல் 4-மணி 36 நிமிஷத்திலிருந்து ஜெனன காலமாகிய 2ந் தேதி காலை மணி 7-நிமிஷம் 13 வரையிலும் கணக்கிட 14 மணி 37 நிமிஷம் வரும். உதாரணமாக 1-ந் தேதி குருவின் ஸ்புடம் பாகை 28—19-ம், 2-ந் தேதி குருவின் ஸ்புடம் பாகை 28—15-ம் மேல் கண்டபடி. ஆனால் 2-ந் தேதி காலை மணி 7 நிமிஷம் 13-க்கு குருவின் ஸ்புடம் எவ்வளவு என்பதை கணிப்போம். 1-ந் தேதி குருவின் ஸ்புடம் பாகை 28—19 கலையும், 2-ந் தேதி பாகை 28—15 கலையுமாய் இருப்பதால் 24-மணி கொண்ட ஒரு தினத்தில் குரு பாகை 0—4 கலை தூரம் செல்லுகிறது. இந்த 4 கலை தான் குருவினுடைய தினகதி ஆகிறது இந்த 4 கலை, பாகை 28 கலை 19-ல் இருந்து பாகை 28 கலை 15-யைக் கழிக்க வருகின்றது என்று அறியவும். இதற்கு மேல் குருவின் தினகதி பாகை 0 கலை 4 ஆனல் அதாவது குரு 24-மணி நேரத்தில் பாகை 0 கலை 4 செல்லுமானல் மேற்கண்ட 14-மணி 37 நிமிஷ நேரத்தில் எவ்வளவு தூரம் செல்லும் என்பதைக் கணிக்கவேண்டியது. இதை 6-வது வாக்கியத்தால் வெகு சுலபமாகக் கணிக்கலாம். இந்த வாக்கியத்தில் தலைப்பில் இடது புரமிருந்து வலது புரமாகப் பாகைகள் 0, 1, 2, 3 என்று 14-வரையிலும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மேலும் 1-வது கலத்தில் மேலிருந்து கீழ் நோக்கி

கலைகள் 0, 1, 2, 3, 4 என்று 59 வரையிலும் கொடுக்கப்பட்டிரு
கின்றன. இந்த பாகை கலைகள் நாம் கணிக்கவேண்டிய கிர
தின் தினகதியிலுள்ள பாகை கலைகள் என்று வைத்துக்கொள்ள
வேண்டியது. மேலும் இந்த வாக்கியத்தில் தலைப்பில் மணியு
முதல் கலத்தில் நிமிஷமும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவ
களை நாம் எத்தனை மணி, நிமிஷத்திற்கு ஸ்புடஞ் செய்ய வே
டுமோ அத்தனை மணி நிமிஷம் என்று வைத்துக்கொள்ளவு
குருவினுடைய தினகதி பாகை 0 கலை ஆனதால் பாகை 0 என்
குறிப்பித்துள்ள கலத்தில் கலை 4 என்று குறிப்பித்துள்ள வரி
எதிரில் 2556 என்று இருக்கிறது. இந்த 2556 யை எடுத்து
இடத்தில் எழுதி வைக்கவும். பிறகு நமக்குத் தேவையான 1
மணி 37 நிமிஷம் ஆனதால் 14 மணி கலத்தில் 37 நிமிஷத்தி
எதிரில் 215 இருக்கிறது. இதை மேலே பிரத்தியேகமாக எடு
வைத்த 2556 உடன் கூட்டவேண்டியது அப்படிக் கூட்டி
2771 வரும். இந்த வாக்கியத்தில் 2771 அல்லது அதற்கு ச
பித்த எண் எங்கு இருக்கிறது என்று பார்க்கவும். அப்படிப்பட
சமீபித்த எண் 2857 இருக்கிறது. அது 0 பாகை என்று குறி
பிட்ட கலத்தில் 2 கலைக்கு நேரில் இருக்கின்றது. ஆகையா
இந்த பாகை 0 கலை 2 தான் குரு 14-மணி 37 நிமிஷ நேரத்
செல்லக்கூடிய தூரம் என்று ஏற்படுகின்றது. அதாவது குரு 2
மணி கொண்ட ஒரு தினத்தில் பாகை 0 கலை 4 செல்லுமாற
14-மணி 37 நிமிஷத்தில் பாகை 0 கலை 2 செல்லும் என்
ஏற்படுகின்றது குரு வக்கிரகதியில் இருப்பதால் இங்கு வ
பாகை 0 கலை 2-யை 1-ந் தேதியின் ஸ்புடமாகிய பாகை 28 க
19-ல் இருந்து கழிக்க பாகை 28 கலை 17 வரும். இதுதான் 2
தேதி காலை 7-மணி 13 நிமிஷத்திற்கு குருவின் ஸ்புடம் என்
ஏற்படுகின்றது.

இவ்விதமாகவே சுக்கிரனுடைய ஸ்புடம் கணிப்போம்.
அதாவது 1-ந்தேதி சுக்கிரனுடைய ஸ்புடம் பாகை 203 க
47ம், 2-ந்தேதி பாகை 205 கலை 0 மானால், 2-ந் தேதி கா
7-மணி 13 நிமிஷத்திற்குச் சுக்கிரன் ஸ்புடம் என்ன? பாக
205-0 கலையில் இருந்து பாகை 203-கலை 47-யைக் கழிக்க
பாகை 1-கலை 13 வரும். ஆகையால் சுக்கிரன் தினகதி பாக
1-கலை 13 ஆகும். முன்போல வாக்கியத்தில் பாகை 1-கலை 13
குப் பார்த்தால் பாகை 1 என்று குறிப்பிட்ட கலத்தில் க
13-க்கு நேராய் 1295 இருக்கிறது. மறுபடியும் 14 மணி 37 நி
ஷத்திற்கு முன்போல வாக்கியத்தில் பார்த்தால் 14 மணி கல
தில் 37 நிமிஷத்திற்கு எதிரில் 215 இருக்கிறது. இந்த 215-ஐ

1295-யுடன் கூட்ட 1510 வரும் இந்த 1510 அல்லது இதற்குச் சமீபித்த எண் எங்கு இருக்கின்றது என்று வாக்கியத்தில் பார்க்க 1505 என்ற எண் ஒன்று 0 கலத்தில் 45 கலைக்கு நேரில் இருக்கிறது. ஆகையால் இந்த பாகை 0 கலை 45-தான் சுக்கிரன் 14 மணி 37 நிமிஷத்தில் செல்லக்கூடிய தூரம் என்று ஏற்படுகின்றது. சுக்கிரன் வக்கிர கதியில் இல்லாமல் நேர் கதியில் இருப்பதால் மேலே வந்த பாகை 0 கலை 45-யை 1உயில் சுக்கிரனுடைய ஸ்புடமாகிய பாகை 203 கலை 47-யுடன் கூட்டவேண்டும். அப்படிக் கூட்ட வருகின்ற பாகை 204 கலை 32-தான், 2உ காலை 7 மணி 13 நிமிஷத்திற்குச் சுக்கிரனுடைய ஸ்புடம் என்று அறியவும்.

இப்பொழுது சந்திரனுடைய ஸ்புடம் கணிப்போம் :—மேற் சொல்லியபடி சந்திரனுடைய தினகதி பாகை 14 கலை 23 வரும். இதற்கு வாக்கியத்தில் மேற்சொல்லியபடி 222 வரும். மேலும் 14 மணி 37 நிமிஷத்திற்கு வாக்கியத்தில் 215 வரும். ஆகையால் முன்போல 222-யையும், 215-யையும் கூட்ட 437 வரும். இந்த 437 அல்லது அதற்கு அருகிலுள்ள எண் எங்கே இருக்கின்றதென்று பார்க்க 8 பாகை என்ற கலத்தில் 46 கலைக்கு எதிரில் இருக்கின்றது. ஆகையால் இந்த பாகை 8 கலை 46 தான் சந்திரன் 14 மணி 37 நிமிஷத்தில் செல்லக்கூடிய தூரம். சந்திரன் எப்போதும் நேர்கதியில் செல்வதால் இந்த பாகை 8 கலை 46-யை 1உயில் சந்திரனுடைய ஸ்புடமாகிய பாகை 100 கலை 24-உடன் கூட்ட வேண்டியது. அப்படிக் கூட்ட வருகின்ற பாகை 118 கலை 10-தான் 2உ காலை 7 மணி 13 நிமிஷத்திற்குச் சந்திரனுடைய ஸ்புடம் என்று அறியவும். இவ்விதமாகவே ஒவ்வொரு கிரகத்திற்கும் அறியவும்.

குறிப்பு :—இந்த வாக்கியத்தில் 14 மணி 59 நிமிஷம் வரையிலுந்தான்கொடுக்கப்பட்டிருக்கின்றது.நமக்குத்தேவையான மணி நிமிஷம் இதற்கு மேற்பட்டிருந்தால் அடியிற்கண்டபடி செய்யவும். உதாரணமாக, ஒரு கிரகத்தின் தினகதி பாகை 1 கலை 13 ஆனால் 18 மணி 10 நிமிஷத்தில் அந்த கிரகம் எவ்வளவு தூரம் செல்லும் என்பதைக் கணிப்போம். நமக்குத் தேவையான காலமாகிய 18 மணி 10 நிமிஷம் வாக்கியத்தில் கொடுத்துள்ள 14 மணி 59 நிமிஷத்திற்கு மேற்பட்டிருப்பதால் இந்த 18 மணி 10 நிமிஷத்தை இரண்டு பாகமாகப் பிரிக்கவும். ஒரு பாகத்தை எப்பொழுதும் 12

மணியாகவும் மற்றொரு பாகத்தை மிகுதியாகிய 6 மணி 10 நி
மாகவும் பிரிக்கவும். ஒரு பாகமாகிய 12 மணி, 24 மணி நே
தில் பாதியானதால் அந்த 12 மணி நேரத்தில் அந்த கிர
பாகை 1 கலை 13-ல் பாதியாகிய பாகை 0 கலை 36½ செல்
என்று ஏற்படும். பிறகு மற்றொரு பாகமாகிய 6 மணி 10 நி
நேரத்தில் அந்த கிரகம் எவ்வளவு தூரம் செல்லும் என்பத
கணிக்கவும். அதாவது ஒரு கிரகத்தின் தினகதி பாகை 1 கலை
ஆனால் அந்த கிரகம் 6 மணி 10 நிமிஷத்தில் எவ்வளவு தூ
செல்லும் என்று அறியவேண்டியது. முந்தி சொல்லியபடி தி
கதி பாகை 1 கலை 13-க்குப் பார்த்தால் பாகை 1 என்று கு
பிட்ட கலத்தில் 13-க்கு எதிரில் 1295 இருக்கிறது. மேலு
மணி 10 நிமிஷத்திற்குப் பார்த்தால் 6 மணி என்று குறிப்
டுள்ள கலத்தில் 10 நிமிஷத்திற்கு எதிரில் 590 என்ற எண் இ
கிறது. இந்த 590-யை முந்தி வந்த 1295-உடன் கூட்ட 18
வரும். இந்த 1885 அல்லது இதற்குச் சமீபித்த எண் எ
இருக்கின்றதென்று வாக்கியத்தில் பார்க்க 0 பாகை என்ற க
தில் 19 கலைக்கு எதிரில் 1880 இருக்கின்றது. ஆகையால் அ
கிரகம் 6 மணி 10 நிமிஷத்தில் பாகை 0 கலை 19 செல்லும் எ
ஏற்படுகிறது. முன்னமே 12 மணி நேரத்தில் அந்த கிரகம் பா
0 கலை 36½ செல்லும் என்று கணித்திருக்கிறோம். ஆகைய
இந்த இரண்டையும் கூட்ட 18 மணி 10 நிமிஷ நேரத்தில் பா
0 கலை 55½ வரும். அதாவது 18 மணி 10 நிமிஷ நேரத்தில் அ
கிரகம் பாகை 0 55½ கலை தூரம் செல்லும் என்று ஏற்படும். இ
னும் உதாரணமாக, நமக்கு வேண்டிய காலம் 22 மணி 48 நிமி
மானால் அதை ஒரு பாகம் 12 மணியாகவும் மற்றொரு பா
10 மணி 48 நிமிஷமாகவும் பிரித்துக்கொள்ள வேண்டிய
இவ்விதமாகவே நமக்கு வேண்டிய மணியைப் பிரித்துக்கொ
வேண்டியது அவசியம்.

மேலே சொல்லிய விதிகளைப் படிக்கப் படிக்க நன்றாய் வி
கும். நன்றாய்த் தெரிந்துகொண்ட பிறகு அடியிற்கண்டபடி இ
னும் வெகு சுலபமாக நமக்கு வேண்டிய காலத்திற்குக் கிரக
டங்களைக் கணிக்கலாம்.

கிரகங்களுடைய ஸ்புடங்கள் 1869ஆ அக்டோபர் 1
பகல் மணி 4 நிமிஷம் 36-க்கும், மறு நாளாகிய 2உ பகல் மணி
நிமிஷம் 36-க்கும் கொடுக்கப்பட்டிருந்தால் 2-ந் தேதி க

மணி 7 நிமிஷம் 13-க்கு அவைகளினுடைய ஸ்புடம் என்ன என்பதை அடியிற்கண்டவாறு கணிப்போம்.

| கிரகங்களின் பெயர். | 1869ஆம் அக்டோபர் 1உ பகல் 4-மணி 36 நிமிஷத்திற்கு கிரகஸ்புடம் பாகை—கலை | 1869ஆம் அக்டோபர் 2உ பகல் 4-மணி 36 நிமிஷத்திற்கு கிரகஸ்புடம் பாகை—கலை | கலம் 2-ல் இருந்து 1-லுள்ளதைக் கழிக்க வருவது (ஏ) பாகை—கலை | வாக்கியத்தில் கிரகத்திற்குரிய எண். |
|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 |
| சூரியன் | 166—26 | 167—25 | + 0—59 | 1888 |
| சந்திரன் | 109—24 | 123—47 | +14—28 | 222 |
| செவ்வாய் | 206—4 | 206—46 | + 0—42 | 1535 |
| புதன் | 191—29 | 192—7 | + 0—38 | 1579 |
| குரு | 28—19 | 28—15 | — 0—4 | 2556 |
| சுக்கிரன் | 203—47 | 205—0 | + 1—13 | 1295 |
| சனி | 230—25 | 230—29 | + 0—4 | 2556 |
| ராகு | 102—19 | 102—16 | — 0—3 | 2681 |
| கேது | 282—19 | 282—16 | — 0—3 | 2681 |

தொடர்ச்சி.

| கிரகங்களின் பெயர் | வாக்கியத்தில் 14 மணி 37 விநாடிக்குரிய எண் (ஏ) | 4-வது 5-வது கலத்திலுள்ள எண்களை கூட்டவருவது | வாக்கியத்தில் இந்த 6-வது கலத்திலுள்ள எண்ணிற்குரிய பாகை — கலை | 1-வது கலத்தையும் 7-வது கலத்தையும் கூட்டவருவது பாகை — |
|---|---|---|---|---|
| | 5 | 6 | 7 | 8 |
| சூரியன் | 215 | 1603 | 0—36 | 167— |
| சந்திரன் | 215 | 437 | 8—46 | 118—1 |
| செவ்வாய் | 215 | 1750 | 0—26 | 206—8 |
| புதன் | 215 | 1794 | 0—23 | 191—5 |
| குரு | 215 | 2771 | 0—2/ | 28—1 |
| சுக்கிரன் | 215 | 1510 | 0—45 | 204—3 |
| சனி | 215 | 2771 | 0—2 | 230—2 |
| ராகு | 215 | 2896 | 0—2 | 102—1 |
| கேது | 215 | 2896 | 0—2 | 282—1 |

குறிப்பு (எ) 2-வது கலத்திலிருந்து 1-வது கலம் கழி படுமானால் 3-வது கலத்தில் + என்ற இக்குறி போடவும். படிக் கழிபடாமல் 1-வது கலத்தில் இருந்து 2-வது கலம் படுமானால் — என்ற குறி போடவும். இவ்விதமாக கிரகம் வ மாக இருக்கும்போதுதான் சம்பவிக்கும்.

(பி) 3-வது கலத்தில் + என்ற கூட்டல் குறி இருந் 1-வது கலத்தையும் 7-வது கலத்தையும் கூட்ட 8-வது வரும். 3-வது கலத்தில் — என்ற கழித்தல் குறி இருந்தால், 1 கலத்தில் இருந்து 7-வது கலத்தைக் கழிக்க 8-வது கலம் வ

(சி) 14-மணி 37 நிமிஷம் என்பது 1-வது கலத்திலுள்ள மணி நிமிஷத்திற்கும். 2-ந் தேதி 7-மணி 13 நிமிஷத்திற்கும் இடையிலுள்ள காலம்.

7-வது வாக்கியம்—நட்சத்திரங்கள்.

இந்த வாக்கியத்தில் 27 நட்சத்திரங்களின் பெயர்களைக் கொடுத்திருப்பதால் இதைப்பற்றி இங்கு விவரித்து எழுதவேண்டியது அவசியமில்லை.

8-வது வாக்கியம்—திதிகள்.

இந்த வாக்கியத்தில் திதிகளின் பெயரும் அவைகளின் ஸ்புடமும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. திதி என்பது ஆகாயத்தில் சந்திரனுக்கும் சூரியனுக்கும் இடையிலுள்ள தூரத்தைத் தெரியப்படுத்தும். சந்திரனுக்கும் சூரியனுக்கும் இடையிலுள்ள தூரம் அதாவது சந்திரனுடைய ஸ்புடத்திலிருந்து சூரியனுடைய ஸ்புடத்தைக் கழிக்க வருகின்ற தூரம் பாகை 0 கலை 0 முதல் பாகை 12 கலை 0 வரையிலும் இருந்தால் பிரதமை திதி என்றும், பாகை 12 கலை 0-க்கு மேல் பாகை 24 கலை 0-க்குள் இருந்தால் துதியை என்றும், பாகை 24 கலை 0-க்கு மேல் பாகை 36 கலை 0-க்குள் இருந்தால் திரிதியை என்றும் இவ்வாறே அறிய வேண்டியது.

உதாரணமாகச் சந்திரனுடைய ஸ்புடம் பாகை 118 கலை 10 என்றும் சூரியனுடைய ஸ்புடம் பாகை 167 கலை 2 என்றும் வைத்துக்கொள்வோம். எப்பொழுதும் சந்திரனுடைய ஸ்புடத்திலிருந்து சூரியனுடைய ஸ்புடத்தைக் கழிக்கவேண்டும். சிறிய ஸ்புடத்திலிருந்து பெரிய ஸ்புடத்தைக் கழிக்கவேண்டுமானால் சிறிய ஸ்புடத்துடன் 360 பாகையைக் கூட்ட வருகின்ற மொத்த பாகை கலையிலிருந்து பெரிய ஸ்புடத்தைக் கழிக்கவும். சந்திரனுடைய ஸ்புடமாகிய பாகை 118 கலை 10 சிறியதாயும் சூரியனுடைய ஸ்புடமாகிய பாகை 167 கலை 2 பெரியதாயும் இருக்கின்றது. ஆகையால் பாகை 118 கலை 10 உடன் 360 பாகையைக் கூட்ட மொத்தம் 478 பாகை 10 கலை வரும். இதிலிருந்து சூரியனுடைய பாகை 167 கலை 2 யைக் கழிக்கப் பாகை 311 கலை 8 வரும். இந்த 311 பாகை 8 கலைதான் சந்திரனுக்கும், சூரியனுக்கும் இடையிலுள்ள தூரம். இப்போது வாக்கியத்தில்

பார்ப்போமானால் இந்த பாகை 311 கலை 8 என்பது தேய்பிறை ஏகாதசிக்குக் கொடுத்துள்ள பாகை 300 கலை 0-க்கு மேல்பட்டு 312 கலை 0-க்குள் இருப்பதால் இந்த பாகை 311 கலை 8-க்கு தேய்பிறை ஏகாதசி திதி என்று ஏற்படுகின்றது. அதாவது அப்போது தேய்பிறை ஏகாதசி திதி என்று அறியவும்.

## 9-வது வாக்கியம் (10-வது பாவஸ்புட வாக்கியம்.)

இந்த வாக்கியத்தால் பாவச்சக்கிரம் போடலாம். பாவச்சக்கிரம் என்பது என்னவென்பதைப்பற்றி சற்று கவனிப்போம். ஒரு குறித்த காலத்தில் இராசி மண்டலத்தில் எந்த பாகம் கிழக்கில் உதயமாகுமோ அந்த பாகத்திற்கு லக்கினம் என்று சொல்லப்படும் என்று முன்னமே தெரிவித்திருக்கின்றோம். குறித்த காலத்தில் இராசி மண்டலத்தில் மேற்கே அஸ்தமனமாகும் பாகத்திற்கு அஸ்தமன லக்கினம் அல்லது 7-வது பாவம் என்று பெயர். இராசி மண்டலம் முன்னமே சொல்லியது மேற்குத் திக்கிலிருந்து கிழக்குத் திக்காகச் செல்லுகின்ற பெரிய வட்டம். இந்த வட்டத்தில் நமது உச்சிக்கு அருகிலுள்ள இடத்திற்குத் "தசம மத்திய லக்கினம்" அல்லது 10-வது பாவம் என்று பெயர். இந்த மத்திய லக்கினத்திற்கு இராசி மண்டலம் நமது உச்சியின் மூலமாய்ச் செல்லுகின்ற ரேகாம்சமும் (மெரிடியன்) ஆகாயத்தில் சந்திக்கின்ற இடம் என்று பெயர். மத்திய லக்கினத்திற்கு நேராய் பாதாளத்தில் இராசி மண்டலத்தில் உள்ள இடத்திற்குச் சதுர்த்த மத்திய லக்கினம் அல்லது 4-வது பாவம் என்று பெயர். ஆகையால் இராசி மண்டலத்தில் உதய லக்கினம், தசம மத்திய லக்கினம், அஸ்தமன லக்கினம், சதுர்த்த மத்திய லக்கினம் என்று நான்கு இடங்கள் இருக்கின்றன. இந்த நான்கு இடங்களைக் கணிப்போமானால் பாவச்சக்கிரம் கூடியமட்டும் துல்லிபமாய்க் கணிக்கலாம். பாவச்சக்கிரம் கணிக்கும் விதம்:—முதலில் உதய லக்கினத்தை உதயலக்கினம் கணிக்கும் விதத்தில் கணிக்கவேண்டியது. பிறகு உதய லக்கின ஸ்புடத்துடன் 6 இராசி அல்லது 180 பாகை கூட்ட அஸ்தமன லக்கினம் வரும். பிறகு தசம மத்திய லக்கினம் கணிக்கவேண்டும். இந்த தசம லக்கினத்தை இந்த 10-வது வாக்கியத்தால் கணிக்கவேண்டியது. நமது சி. ஜி. ராஜன் பஞ்சாங்கத்தில் ஒவ்வொரு தினத்திற்கும் பகல் 12 மணிக்கு நட்சத்திர ஹோரை

மணி மினிட் கொடுக்கப்பட்டிருக்கின்றது. இதை அறிந்து கொள்ளவேண்டியது. பிறகு பகல் 12 மணியிலிருந்து ஜெனன மான் மணி நிமிஷம் வரையிலும் உள்ள மொத்த மணி நிமிஷம் அறியவேண்டியது. இந்த மணி நிமிஷத்தை முந்தி வந்த நட்சத்திர ஹோராதி மணி நிமிஷத்துடன் கூட்டி மொத்த மணி நிமிஷம் அறியவும். இப்படி வரும் மணி நிமிஷத்திற்கு ஜெனன காலத்தில் உள்ள நட்சத்திர ஹோராதி மணி நிமிஷம் என்று பெயர். 9-வது வாக்கியத்தில் இந்த நட்சத்திர ஹோராதி மணிக்குக் கொடுத்திருக்கின்ற பாகை கலையே சாயன தசம மத்திம லக்கின ஸ்புடம் ஆகும். இதிலிருந்து நமது சி. ஜி. ராஜன் பஞ்சாங்கத்தில் கிரக பாதசாரங்களுக்குத் தலைப்பில் அல்லது 43-வது வாக்கியத்தில் கொடுத்திருக்கும் அயனும்ச ஸ்புடத்தைக் கழிக்க நிரயன தசம மத்திய லக்கின ஸ்புடம் அல்லது தசம மத்திம லக்கின ஸ்புடம் வரும். இந்த தசம மத்திம லக்கின ஸ்புடத்துடன் 6 இராசி அல்லது 180 பாகை கூட்ட சதுர்த்த மத்திம லக்கின ஸ்புடம் வரும் இவ்வாறு நான்கு விதமான லக்கின ஸ்புடங்களைக் கணித்துக்கொண்டு பிறகு அடியிற்கண்ட உதாரணத்திற் காட்டியபடி பாவச்சக்கிரம் போடவேண்டியது.

உதாரணம் :—1869ஆு அக்டோபர்மீ 2உ காலை 7 மணி 13 நிமிஷத்திற்கு ஜெனனம். அன்று அயனும்சம் பாகை 21 கலை 54. அப்போது உதய லக்கினம் பாகை 184 கலை 48. 1869ஆு அக்டோபர்மீ 1உ பகல் 12 மணிக்கு நட்சத்திர ஹோராதி மணி 12 நிமிஷம் 41 என்று இவைகளைக் கொடுத்திருப்பதாக வைத்துக்கொண்டு 2உ காலை 7 மணி 13 நிமிஷத்திற்கு பாவச்சக்கிரம் கணிப்போம்.

உதய லக்கின ஸ்புடம் பாகை 184 கலை 48. இது கொடுக்கப்பட்டிருக்கின்றது. இத்துடன் 180 பாகை கூட்ட பாகை 364 கலை 48 வரும். இது 360 பாகைக்கு மேற்பட்டிருப்பதால் இதில் இருந்து 360 பாகையைக் கழிக்க 4 பாகை 48 கலை வரும். ஆகையால் 4 பாகை 48 கலைதான் அஸ்தமன லக்கின ஸ்புடமாகும்.

ஜெனன காலம் காலை 7 மணி 13 நிமிஷமானதால் 1உ பகல் 12 மணியிலிருந்து 2உ 7 மணி 13 நிமிஷம் வரையிலும் கண்க்கிட மொத்தம் 19 மணி 13 நிமிஷ நேரம் வரும். முந்தி கொடுத்துள்ள ஓராதி மணியாகிய 12 மணி 44 நிமிஷத்துடன் கூட்ட

மொத்தம் 31 மணி 57 நிமிஷம் வரும். இது 24 மணிக்கு மே பட்டிருப்பதால் இதில் இருந்து 24 மணியைக் கழிக்க 7 மணி 57 நிமிஷம் வரும். இதுதான் ஜெனன காலத்தில் உள்ள நட்ச திர ஹோராதி மணி * என்று அறியவும். இந்த வாக்கியத்தி ஓராதி மணி 7 நிமிஷம் 56-க்கு 116 பாகை 57 கலை என்று ஓராதி மணி 8 நிமிஷம் 0-க்கு 117 பாகை 55 கலை என்று கொடுத்திருப்பதால் நமக்குத் தேவையான ஓராதி மணி 7 நி ஷம் 57-க்கு பாகை கலையைக் கணிப்போம். மணி 8 நிமிஷ 0-ல் இருந்து மணி 7 நிமிஷம் 56-யைக் கழிக்க, 4 நிமிஷம் வரு இந்த 4 நிமிஷத்திற்கு 117 பாகை 55 கலையிலிருந்து 116 பாகை 57 கலையைக் கழிக்க வருகின்ற 58 கலை ஆகும். ஆகையால் மணி 7 நிமிஷம் 57-ல் இருந்து மணி 7 நிமிஷம் 56-யைக் கழிக்க வரு கின்ற 1 நிமிஷத்திற்கு, 4 நிமிஷத்திற்கு 58 கலை விகிதம் கணி போமானால் $14\frac{1}{2}$ கலை வரும். இந்த $14\frac{1}{2}$ கலையை 116 பாகை 5 கலையுடன் கூட்ட பாகை 117 கலை $11\frac{1}{2}$ வரும். ஆகையா 7 மணி 57 நிமிஷத்திற்கு 117 பாகை $11\frac{1}{2}$ கலை ஆகும். இ 117 பாகை $11\frac{1}{2}$ கலையில் இருந்து அயனும்ச ஸ்புடமாகிய பாக 21 கலை 54-யைக் கழிக்கப் பாகை 95 கலை $17\frac{1}{2}$ வரும். இ $\frac{1}{2}$ கலையை ஒரு கலையாகப் பாவிக்க 95 பாகை $17\frac{1}{2}$ கலை என்பு 95 பாகை 18 கலை ஆகும். இந்த 95 பாகை 18 கலைதான் தச மத்திம லக்கின ஸ்புடமாகும். இத்துடன் 6 ராசி அல்லது 18 பாகை கூட்ட வருகின்ற 275 பாகை 18 கலைதான் சதுர்த் மத்திம லக்கின ஸ்புடமாகும்.

இப்பொழுது நாம் கணித்த உதய லக்கின ஸ்புடம் சதுர்த் மத்திம லக்கின ஸ்புடம், அஸ்தமன லக்கின ஸ்புடம், தசம ம திம லக்கின ஸ்புடம் ஆகிய இவைகளிலிருந்து துவாதச பாவ சக்கிரம் அடியிற்கண்டபடி கணிப்போம். உதய லக்கின ஸ்புட பாகை 184 கலை. 48 அஸ்தமன லக்கின ஸ்புடம் பாகை 4 க 48. சதுர்த்த மத்திம லக்கின ஸ்புடம் பாகை 275 கலை 18. தச மத்திம லக்கின ஸ்புடம் பாகை 95 கலை 18.

---

* குறிப்பு :—நட்சத்திர ஹோராதி மணியை, விபவ வருஷ திய சி. ஜி. ராஜன் பஞ்சாங்கத்தில் 47 வது பக்கத்தில் சொல்லி படி இன்னும் துல்லியமாகக் கணிக்கலாம்.

| | பாகை—கலை | |
|---|---|---|
| (1) சதுர்த்த மத்திம லக்கின ஸ்புடம் | 275—18 | |
| உதய லக்கின ஸ்புடம் | 184—48 | |
| வித்தியாசம் | 90—30 | |
| மூன்றில் ஒரு பங்கு (1-வது) | 30—10 | (1) |
| (2) அஸ்தமன லக்கின ஸ்புடம் | 4—48 | |
| சதுர்த்த மத்திம லக்கின ஸ்புடம் | 275—18 | |
| வித்தியாசம் | 89—30 * | |
| மூன்றில் ஒன்று (2-வது) | 29—50 | (2) |
| (3) தசம மத்திம லக்கின ஸ்புடம் | 95—18 | |
| அஸ்தமன லக்கின ஸ்புடம் | 4—48 | |
| வித்தியாசம் | 90—30 | |
| மூன்றில் ஒரு பங்கு (3-வது) | 30—10 | (3) |
| (4) உதய லக்கின ஸ்புடம் | 184—48 | |
| தசம மத்திம லக்கின ஸ்புடம் | 95—18 | |
| வித்தியாசம் | 89—30 | |
| மூன்றில் ஒன்று (4-வது) | 29—50 | (4) |

மேலே வந்த நான்கு வித்தியாசங்களில் வித்தியாசங்கள் (1) (3) ம், (2) ம் (4) ஒன்ருய் இருப்பதைக் கவனிக்கவும். இப்படி ஒன்ருய் இல்லாவிட்டால் நாம் கணித்த கணிதத்தில் பிழை இருக்கின்றதென்று அறிந்து அந்த பிழையைத் திருத்தவேண்டும்.

பிறகு உதயலக்கின ஸ்புடத்துடன் 1-வது வித்தியாசத்தின் 3-ல் ஒருபங்கை அடியிற்கண்டபடி 3 தரம் கூட்டவும். சதுர்த்த மத்திம லக்கின ஸ்புடத்துடன் 2-வது வித்தியாசத்தின் 3-ல் 1 பங்கை 3 தரம் கூட்டவும். அஸ்தமன லக்கின ஸ்புடத்துடன் 3-வது வித்தியாசத்தின் 3-ல் 1 பங்கை 3 தரம் கூட்டவும். தசம லக்கின ஸ்புடத்துடன் 4-வது வித்தியாசத்தின் 3-ல் 1 பங்கை 3 தரம் அடியிற்கண்டபடி கூட்டவும். இப்படிக் கூட்ட வருகின்ற ஸ்புடங்கள் துவாதச பாவ ஸ்புடங்கள் ஆகும்.

---

* இது பாகை 4 கலை 48 உடன் 360 பாகை கூட்டி 275 பாகை 18 கலையைக் கழிக்க வரும்.

| | பாகை—கலை | பாகை— |
|---|---|---|
| (1) உதயலக்கினஸ்புடம் | 184—48 (அதாவது) | (1-வது பாவஸ்புடம் 184— |
| 1-வது 3-ல் ஒரு பங்கு | 30—10 | |
| கூட்ட | 214—58 | (2-வது பாவஸ்புடம் 214— |
| (2) 1-வது 3-ல் ஒருபங்கு | 30—10 | |
| கூட்ட | 245— 8 | (3-வது பாவஸ்புடம் 245— |
| (3) 1-வது 3-ல் ஒருபங்கு | 30—10 | |
| கூட்ட | 275—18 | (4-வது பாவஸ்புடம் 275— |
| (4) சதுர்த்த மத்திம லக்கின ஸ்புடம் | 275—18 | (4-வது பாவஸ்புடம் 275— |
| 2-வது 3-ல் ஒரு பங்கு | 29—50 | |
| கூட்ட | 305— 8 | (5-வது பாவஸ்புடம் 305— |
| (5) 2-வது 3-ல் ஒருபங்கு | 29—50 | |
| கூட்ட | 334—58 | (6-வது பாவஸ்புடம் 334— |
| (6) 2-வது 3-ல் ஒருபங்கு | 29—50 | |
| கூட்ட | 364—48 | |
| அல்லது | 4—48 | (7-வது பாவஸ்புடம் 4— |
| (7) அஸ்தமனலக்கினஸ்புடம் | 4-48 | (7-வது பாவஸ்புடம் 4— |
| 3-வது 3-ல் ஒருபங்கு | 30—10 | |
| கூட்ட | 34—58 | (8-வது பாவஸ்புடம் 34— |
| (8) 3-வது 3-ல் ஒருபங்கு | 30—10 | |
| கூட்ட | 65— 8 | (9-வது பாவஸ்புடம் 65— |
| (9) 3-வது 3-ல் ஒருபங்கு | 30—10 | |
| கூட்ட | 95—18 | (10-வது பாவஸ்புடம் 95— |
| (10) தசமமத்திய லக்கின ஸ்புடம் | 95—18 | (10-வது பாவஸ்புடம் 95— |
| (11) 4-வது 3-ல்ஒருபங்கு | 29—50 | |
| கூட்ட | 125— 8 | (11-வது பாவஸ்புடம் 125— |
| 4-வது 3-ல்ஒருபங்கு | 29—50 | |
| கூட்ட | 154—58 | (12-வதுபாவஸ்புடம் 154— |
| (12) 4-வது 3-ல்ஒருபங்கு | 29—50 | |
| கூட்ட | 184—48 | (1-வது பாவஸ்புடம் 184— |

இவ்விதமாகத்தான் துவாதச பாவஸ்புடங்கள் அல்லது 12 பாவ ஸ்புடங்கள் அல்லது பாவசக்கிரம் கணிக்கவேண்டியது.

10-வது வாக்கியம்—ஜெனன காலதேசை கணிதம்.

இந்த வாக்கியத்தால் ஜெனன காலத்தில் ஜென்மதெசையில் கெற்பச் செல்லுபோய் இருப்பு நின்ற தெசையை சுலபமாகக் கணிக்கலாம். சந்திரனுடைய ஸ்புடத்தை முதலில் கணித்துக் கொள்ள வேண்டியது. பிறகு 11-வது வாக்கியத்தில் சந்திரன் எந்த நட்சத்திரத்திலிருக்கின்றது என்பதை அறியவும். பிறகு அந்நட்சத்திரத்தில், அந்த நட்சத்திரம் முடிய இன்னம் செல்லாக வேண்டிய பாகை கலையை அறியவும் பிறகு சந்திரன் இருக்கும் நட்சத்திரத்திற்குரிய தெசையை 10-வது வாக்கியத்தால் அறியவும். பிறகு அந்த நட்சத்திரத்தில் செல்லாக வேண்டிய பாகை கலைக்கு நேராய் 10-வது வாக்கியத்தில் அந்த தெசை கிரகத்தின் கலத்தில் கொடுத்துள்ள வருஷம் மாதம் நாள் நாழிகையே அந்த தெசையில் இன்னம் செல்லாகவேண்டிய காலம் என்று அறியவும். இந்த வழியை அடியிற்கண்ட உதாரணத்தால் விளக்கிக் காட்டுவோம்.

உதாரணம் :—குழந்தை ஜெனன காலத்தில் சந்திரஸ்புடம் பாகை 118 கலை 10 ஆக இருந்தால் ஜெனன தெசை என்னவென் பதையும் அந்த தெசையில் கெற்பச்செல்லுபோய் நின்ற வருஷம் மாதம் நாள் நாழிகையும் கணிப்போம். 11-வது வாக்கியத்தை உபயோகப்படுத்தும் விதம் பின்னால் சொல்லப்பட்டிருக்கிறது. அதை இங்கு ஒருதரம் முன்னமே படிக்கவேண்டியது அதைப் படித்தால் சந்திரனுடைய ஸ்புடம் பாகை 118 கலை 10 ஆக இருந்தால் சந்திரன் அப்போது ஆயிலிய நட்சத்திரத்தில் இருப்ப தாக ஏற்படும். ஆயிலிய நட்சத்திரம் பாகை 120 கலை 0-த்தில் முடிவுபெருவதால்பாகை 120 கலை 0-த்திலிருந்து சந்திரனுடைய ஸ்புடமாகிய பாகை 118 கலை 10-யைக் கழிக்கப் பாகை 1 கலை 50 வரும். இந்த பாகை 1 கலை 50 தான் ஆயிலிய நட்சத்திரத்தில் இருப்பு. 10-வது வாக்கியத்தில் ஆயிலிய நட்சத்திரத்திற்குப் புதன் தெசை என்று சொல்லி இருப்பதைக் கவனிக்கவும். ஆகை யால் ஜெனனகாலத்தில் புதன் தெசை என்று ஏற்படும். ஆயிலிய நட்சத்திரத்தில் இருப்பு பாகை 1 கலை 50. இதற்குரிய அளவு புதன் தெசையில் எவ்வளவு என்பதை அடியிற்கண்டபடி கணிக்கவும்.

௵ ௴ நாள்

பாகை 1—0 கலைக்கு புதன் என்ற கலத்தில் 1—3—9
பாகை 0—50 கலைக்கு .... .... 1—0—22
கூட்டபாகை 1—50 கலைக்கு மொத்தம் ௵ 2 ௴ 4 நா
நாழிகை 20 வரும். ஆயிலியத்தில் பாகை 1 கலை 50 இருப்பு
படியால் இதற்குறிய ௵ 2 ௴ 4 நாள் 1 நாழிகை 30
ஜெனன காலத்தில் புதன் தெசை இருப்பு என்று அறிய
ஆகையால் ஜெனனகாலத்தில் புதன் தெசையில் கெற்பச்செ
போய் இருப்பு நின்ற ௵ 2 ௴ 4 நாள் 1 நாழிகை 30 ஆகு

11-வது வாக்கியம்-இராசி, நட்சத்திர, நவாம்ச, திரேகாண ஸ்பு

முதலில் 1, 2, 3 என்ற கலங்களைப்பற்றி கவனிப்போ
மேஷ ராசி என்பது அசுவனி 1-வது பாதம் முதல் கிருத்தி
1-வது பாதம் வரையிலும் உள்ளது என்று ஏற்படும். இவ்வி
ரிஷப ராசி என்பது கிருத்திகை 2 முதல் மிருகசீரஷம் 2 வ
லும் உள்ளது என்று ஏற்படும். இவ்விதமே மற்ற எல்லா
களுக்கும் நட்சத்திரபாதம் அறியவும்.

மேலும் ஒரு ராசியினுடைய முடிவு அடுத்த ராசியின் ஆ
பம் என்றும், ஒரு ராசியினுடைய ஆரம்பம் முந்தியுள்ள ரா
னுடைய முடிவு என்னும் எப்பொழுதும் மனதில் வைத்
கொள்ள வேண்டியது. இவ்விதமாகவே ஒரு நட்சத்தி
னுடைய முடிவு அடுத்த நட்சத்திரத்தினுடைய ஆரம்பம் என்
ஒரு நட்சத்திரத்தினுடைய ஆரம்பம் முந்தியுள்ள நட்சத்தி
னுடைய முடிவு என்றும் எப்பொழுதும் அறியவேண்டும். உ
ரணமாக ரிஷப ராசியினுடைய முடிவு மிதுன ராசியினு
ஆரம்பமாகும். ரிஷப ராசியினுடைய ஆரம்பம் மேஷரா
னுடைய முடிவாகும். (12-வது வாக்கியத்தைப் பார்க்க
இவ்விதமே பரணியின் முடிவு கிருத்திகையின் ஆரம்பமா
பரணியின் ஆரம்பம் அசுவனியின் முடிவாகும். மேலும் மே
திற்கு எதிரில் 4, 5 கலங்களில் பாகை 0 கலை 0 என்று போ
டிருக்கிறது. அதாவது மேஷராசி ஆரம்பத்திற்கு ஸ்புடம் பா
0 கலை 0 என்பதாம். ரிஷப ராசிக்கு எதிரில் 4, 5-வது க
களில் பாகை 30 கலை 0 என்று போட்டிருக்கின்றது. அதா
ரிஷபராசி ஆரம்பத்திற்கு ஸ்புடம் பாகை 30 கலை 0 என்ப
ரிஷப ராசியினுடைய ஆரம்பம் அந்த ராசிக்கு முந்தியுள்ள

யாகிய மேஷ ராசியின் முடிவு என்று மேலே சொல்லிய விதியால் ஏற்படுவதால் மேஷ ராசியின் முடிவின் ஸ்புடம் பாகை 30 கலை 0 என்று ஏற்படும். அதாவது மேஷ ராசியின் ஸ்புடம் பாகை 0 கலை 0 முதல் பாகை 30 கலை 0 வரையிலும் என்பதாம். இவ்விதமாகவே ரிஷப ராசியின் ஸ்புடம் பாகை 30 கலை 0 முதல் பாகை 60 கலை 0 வரையிலும் என்பதாம். மிதுன ராசியின் ஸ்புடம் பாகை 60 கலை 0 முதல் பாகை 90 கலை 0 வரையிலும் என்பதாம். இவ்விதமாகவே மற்ற ராசிகளுக்கும் ஸ்புடம் அறியவும்.

(2) மேலும் அசுவனிக்கு எதிரில் 4, 5-வது கலங்களில் பாகை 0 கலை 0 என்று போட்டிருக்கிறது. இதனால் அசுவனி ஆரம்பத்திற்கு ஸ்புடம் பாகை 0 கலை 0 என்பதாம். பரணிக்கு எதிரில் பாகை 13 கலை 20 என்று போட்டிருப்பது பரணி ஆரம்பத்திற்கு ஸ்புடம் பாகை 13 கலை 20 என்பதாம். பரணியின் ஆரம்பம் அசுவனியின் முடிவு என்று முந்தி சொல்லிய விதியால் ஏற்படுவதால் பரணியின் ஆரம்ப ஸ்புடமாகிய பாகை 13 கலை 20 அசுவனியின் முடிவின் ஸ்புடமாகும். அதாவது அசுவனியின் ஆரம்பத்திற்கு ஸ்புடம் பாகை 0 கலை 0 என்றும், அசுவனியின் முடிவிற்கு ஸ்புடம் பாகை 13 கலை 20 என்றும் ஏற்படும். அதாவது அசுவனி நட்சத்திரத்தின் ஸ்புடம் பாகை 0 கலை 0 முதல் பாகை 13-20 வரையிலும் என்று ஏற்படும். இவ்விதமே பரணியின் ஸ்புடம் பாகை 13 கலை 20 முதல் பாகை 26 கலை 40 வரையிலும், கிருத்திகையின் ஸ்புடம் பாகை 26 கலை 40 முதல் பாகை 40 கலை 0 வரையிலும், ரோகணியின் ஸ்புடம் பாகை 40 கலை 0 முதல் பாகை 53 கலை 20 வரையிலும் என்று ஏற்படும். இவ்விதமாகவே மற்ற நட்சத்திரங்களின் ஸ்புடம் அறியவும்.

(3) ஒவ்வொரு நட்சத்திரத்தையும் நான்கு சம பாகமாகப் பங்கிட்டிருக்கின்றார்கள். ஒவ்வொரு பாகத்திற்கும் நட்சத்திரப் பாதம் அல்லது பாதம் என்று பெயர். ஒரு பாதத்தினுடைய முடிவு அடுத்த பாதத்தினுடைய ஆரம்பமாகும். ஒரு பாதத்தினுடைய ஆரம்பம் அதற்கு முந்தியுள்ள பாதத்தின் முடிவாகும். அசுவனியின் 1-ம் பாதத்தின் ஸ்புடம் பாகை 0 கலை 0 முதல் பாகை 3 கலை 20 வரையிலும் என்பதாம். இவ்விதமாகவே அசுவனியின் 2-ம் பாதத்தின் ஸ்புடம் பாகை 3 கலை 20 முதல் பாகை 6 கலை

40 வரையிலும் என்பதாம். இவ்விதமாகவே ரோகணியின் 4 பாதத்தின் ஸ்புடம் பாகை 50 கலை 0 முதல் பாகை 53 கலை என்பதாம். ரேவதியின் 3-ம் பாதத்தின் ஸ்புடம் பாகை 353 20 முதல் பாகை 356 கலை 40 வரையிலும் என்பதாம்.

இந்த வாக்கியத்தின் உபயோகம் அடியிற்கண்ட உதாரணத்தால் அறியலாம்.

(4) ஒரு குழந்தையின் ஜெனன காலத்தில் சூரியனுடைய ஸ்புடம் பாகை 167 கலை 2-ம் குருவினுடைய ஸ்புடம் பாகை கலை 17-ம், சந்திரனுடைய ஸ்புடம் பாகை 118 கலை 10-ம் ஆ இந்த கிரகங்கள் ஜெனன காலத்தில் எந்த ராசியில் எந்த நட்சத்திரத்தில் எந்த நட்சத்திரப் பாதத்தில் இருக்கின்றன என்பது அறிவோம். முதலில் குருவை எடுத்துக்கொள்வோம். குருவினுடைய ஸ்புடம் பாகை 28 கலை 17. இந்த 11-வது வாக்கியத்தில் பார்ப்போமானுல் மேஷ ராசிக்குரிய பாகை 0 கலை 0- மேல் பாகை 30 கலை 0-க்குள் குருவினுடைய ஸ்புடமாகிய பாகை 28 கலை 17 இருப்பதால் குரு மேஷ ராசியில் இருக்கின் என்று ஏற்படுகின்றது. மேலும் கிருத்திகை நட்சத்திரத் 1-வது பாவத்தின் ஸ்புடமாகிய பாகை 26 கலை 40-க்கு பாகை 30 கலை 0-க்குள் குருவினுடைய ஸ்புடமாகிய பாகை கலை 17 இருப்பதால் குரு கிருத்திகை நட்சத்திரத்தின் 1- பாதத்தில் இருக்கின்றதென்று ஏற்படுகின்றது. அதாவது மேஷ ராசியில் கிருத்திகை நட்சத்திரத்தின் 1-ம் பாதத்தில் இருக்கின்றதென்று ஏற்படுகின்றது.

(5) பிறகு சூரியனை எடுத்துக்கொள்வோம். சூரியனுடைய ஸ்புடம் பாகை 167 கலை 2. இந்த 11-வது வாக்கியத்தில் பார்ப்போமானுல் சூரியன் கன்னியா ராசியில் அஸ்த நட்சத்திரத் 3-ம் பாதத்தில் இருக்கின்றதென்று ஏற்படும்.

(6) பிறகு சந்திரனை எடுத்துக்கொள்வோம் சந்திரனுடைய ஸ்புடம் பாகை 118 கலை 10. இந்த 11-வது வாக்கியத்தில் பார்ப்போமானுல் கடக ராசியில் ஆயில்ய நட்சத்திரத்தின் 4- பாதத்தில் சந்திரன் இருப்பதாக ஏற்படும். இவ்விதமாகவே கிரகங்கள் இருக்கும் ராசி, நட்சத்திரப் பாதம் அறியவேண்டி

## 12-வது வாக்கியம் இராசிச் சக்கிரம்.

இந்த வாக்கியத்தில் 12 இராசிகளின் பெயரும், அவைகளின் ஆரம்பத்தின் ஸ்புடமும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மேஷராசியில் ஆரம்பம் பாகை 0 கலை 0. அதன் முடிவு பாகை 30 கலை 0. இவ்விதமாகவே ரிஷப ராசியின் ஆரம்பம் பாகை 30 கலை 0. அதன் முடிவு பாகை 60 கலை 0. இந்த வாக்கியத்தால் இராசி சக்கிரத்தில் நவக் கிரகங்களை வெகு சுலபமாகப் போடலாம். உதாரணமாக ஒரு குழந்தையின் ஜெனன காலத்தில் குரு பாகை 28 கலை 17-ல் இருந்தால் அது ராசிச் சக்கிரத்தில் எந்த ராசியில் இருக்கின்றது என்பதை அறிவோம். குருவினுடைய ஸ்புடம் பாகை 28 கலை 17 ஆனதாலும் இது பாகை 0 கலை 0-க்கு மேற்பட்டு பாகை 30 கலை 0-க்குள் இருப்பதால் குரு மேஷ ராசியில் இருக்கிறது என்று ஏற்படுகின்றது. இந்த விதமாகவே சந்திரனுடைய ஸ்புடம் பாகை 118 கலை 10 ஆனால் சந்திரன் கடக ராசியில் இருக்கின்றதென்று ஏற்படுகின்றது. இவ்விதமாகவே மற்ற கிரகங்கள் இருக்கும் ராசியை அறியவேண்டியது.

## 13-வது வாக்கியம் நவாம்ச சக்கிரம்.

இந்த வாக்கியத்தால் கிரகங்களை நவாம்சை சக்கிரத்தில் வெகு சுலபமாய் போடலாம். நவாம்சை என்பது ஒரு ராசியை ஒன்பது சம பாகங்களாகப் பங்கிட வருகின்ற பாகமாகும். கிரகங்கள் இருக்கின்ற நவாம்சைகளைக் காட்டுகிற சக்கிரத்திற்கு நவாம்சை சக்கிரம் என்று பெயர். இந்த வாக்கியத்தில் நவாம்சைகளின் ஆரம்பத்தின் ஸ்புடமும், முடிவின் ஸ்புடமும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. உதாரணமாக 1-வது வரிசை எண்ணுக்கு நேராய் மேஷ நவாம்சையின் ஆரம்பம் பாகை 0 கலை 0 என்றும், முடிவு பாகை 3 கலை 20 என்றும் போட்டிருக்கின்றது. அதாவது ஒரு கிரகத்தின் ஸ்புடம் பாகை 0 கலை 0-க்கு மேற்பட்டு பாகை 3 கலை 20-க்குள் இருந்தால் அந்த கிரகம் மேஷ நவாம்சையில் இருக்கின்றதென்று ஏற்படும். உதாரணமாக ஒரு குழந்தையின் ஜெனன காலத்தில், சூரியனுடைய ஸ்புடம் பாகை 167 கலை 2, சந்திரனுடைய ஸ்புடம் பாகை 118 கலை 10, குருவினுடைய ஸ்புடம் பாகை 28 கலை 17 என்று வைத்துக்கொண்டு இந்த கிரகங்கள் இருக்கும் நவாம்சை ராசியை அறிவோம். முதலில் குருவை எடுத்துக்கொள்வோம். குருவினுடைய ஸ்புடமாகிய பாகை 28 கலை 17 என்பது 9-வது எண்ணுக்கு நேராயுள்ள பாகை 26 கலை

40-க்கு மேற்பட்டு பாகை 30 கலை 0-க்குள்பட்டு இருப்ப இந்த 9-வது எண்ணுக்கு நேராயுள்ள தனுசு நவாம்சையில் இருக்கின்றதென்று ஏற்படுகின்றது. இவ்விதமாக சூரியனுடை ஸ்புடமாகிய பாகை 167-2 கலையானது 51-வது எண்ணுக்கு உள்ள பாகை 166·40 கலைக்கு மேற்பட்டு பாகை 170-0 குள் இருப்பதால் இந்த 51-வது எண்ணுக்கு நேராயுள்ள மி நவாம்சையில் சூரியன் இருக்கின்றதென்று ஏற்படும். இவ்வித சந்திரனுடைய ஸ்புடம் பாகை 118 கலை 10 ஆனதால் 36- எண்ணுக்கு நேராயுள்ள மீன நவாம்சையில் சந்திரன் இருக் தென்று ஏற்படும். இவ்விதமாகவே மற்ற கிரகங்களின் நவா யையும், லக்கினத்தினுடைய நவாம்சையையும் அறியவும்.

## 14 வது வாக்கியம் திரேகாணச் சக்கிரம்

இந்த வாக்கியத்தால் கிரகங்களைத் திரேகாணச் சக்கிர வெகு சுலபமாகப் போடலாம். திரேகாணம் என்பது ராசியை 3 சம பாகமாகப் பங்கிட வருகின்ற பாகமாகும் கங்கள் இருக்கின்ற திரேகாணத்தைக் காட்டுகிற சக்கிரத்தி திரேகாணச் சக்கிரம் என்று பெயர். இந்த வாக்கியத்தில் காணங்களின் ஆரம்பத்தின் ஸ்புடமும், முடிவின் ஸ்புட கொடுக்கப்பட்டிருக்கின்றன. உதாரணமாக ஒரு குழந்தை ஜெனன காலத்தில் குருவின் ஸ்புடம் பாகை 28 கலை 17 ஆ அதனுடைய திரேகாணம் என்ன என்பதை அறிவோம். கு னுடைய ஸ்புடமாகிய பாகை 28-17 கலை என்பது இந்த வா யத்தில் 3-வது எண்ணுக்கு நேராயுள்ள பாகை 20-0 கலை மேற்பட்டு பாகை 30-0 கலைக்குள் இருப்பதால் இந்த 3- எண்ணுக்கு நேராயுள்ள தனுசு திரேகாணத்தில் குரு இருக் தென்று ஏற்படும். இவ்விதமாகவே மற்ற கிரகங்களின் தி ணம் அறியவும். மேலும் 5-வது கலத்தில் 1, 2, 3 என்று அ கடி போடப்பட்டிருக்கிறதைக் கவனிக்கவும். இதனால் 1-வ 2-வது, 3-வது என்று சொல்லப்பட்ட பாகங்களில் எந்த பா தில் அல்லது திரேகாணத்தில் கிரகங்கள் இருக்கின்றன எ பதை அறியலாம். இந்த வாக்கியத்தில் வரிசை எண் 3-க்கு நே 5-வது கலத்தில் 3 இருப்பதால் குரு 3-வது திரேகாணத் அல்லது கடைசி திரேகாணத்தில் இருக்கின்றது என்று ஏற்ப 1-வது, 2-வது, 3-வது திரேகாணத்தால் அறியவேண்டிய பா 25-வது வாக்கியத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

## 32—(4)-வது வாக்கியம்—ஓராதிபதி வாக்கியம்.

| வரிசை எண் | முதற்கொண்டு நாழிகை | வரையிலும் நாழிகை | ஞாயிற்றுக் கிழமை | திங்கட் கிழமை | செவ்வாய்க் கிழமை | புதன் கிழமை | வியாழக் கிழமை | வெள்ளிக் கிழமை | சனிக் கிழமை |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 0 | 2½ | சூ | சந் | அ | 4 | குரு | சு | சனி |
| 2 | 2½ | 5 | சு | சனி | சூ | சந் | அ | 4 | குரு |
| 3 | 5 | 7½ | 4 | குரு | சு | சனி | சூ | சந் | அ |
| 4 | 7½ | 10 | சந் | அ | 4 | குரு | சு | சனி | சூ |
| 5 | 10 | 12½ | சனி | சூ | சந் | அ | 4 | குரு | சு |
| 6 | 12½ | 15 | குரு | சு | சனி | சூ | சந் | அ | 4 |
| 7 | 15 | 17½ | அ | 4 | குரு | சு | சனி | சூ | சந் |
| 8 | 17½ | 20 | சூ | சந் | அ | 4 | குரு | சு | சனி |
| 9 | 20 | 22½ | சு | சனி | சூ | சந் | அ | 4 | குரு |
| 10 | 22½ | 25 | 4 | குரு | சு | சனி | சூ | சந் | அ |
| 11 | 25 | 27½ | சந் | அ | 4 | குரு | சு | சனி | சூ |
| 12 | 27½ | 30 | சனி | சூ | சந் | அ | 4 | குரு | சு |
| 13 | 30 | 32½ | குரு | சு | சனி | சூ | சந் | அ | 4 |
| 14 | 32½ | 35 | அ | 4 | குரு | சு | சனி | சூ | சந் |
| 15 | 35 | 37½ | சூ | சந் | அ | 4 | குரு | சு | சனி |
| 16 | 37½ | 40 | சு | சனி | சூ | சந் | அ | 4 | குரு |
| 17 | 40 | 42½ | 4 | குரு | சு | சனி | சூ | சந் | அ |
| 18 | 42½ | 45 | சந் | அ | 4 | குரு | சு | சனி | சூ |
| 19 | 45 | 47½ | சனி | சூ | சந் | அ | 4 | குரு | சு |
| 20 | 47½ | 50 | குரு | சு | சனி | சூ | சந் | அ | 4 |
| 21 | 50 | 52½ | அ | 4 | குரு | சு | சனி | சூ | சந் |
| 22 | 52½ | 55 | சூ | சந் | அ | 4 | குரு | சு | சனி |
| 23 | 55 | 57½ | சு | சனி | சூ | சந் | அ | 4 | குரு |
| 24 | 57½ | 60 | 4 | குரு | சு | சனி | சூ | சந் | அ |

## 33-வது வாக்கியம்—சேஷ்டா பலம்.

சேஷ்டாபலமென்பது கிரகங்களின் ஓட்டத்தால் உண்டாகும் பலமென்பதாம். சூரியனுக்கு சேஷ்டாபலத்தின் அளவு சூரியனுடைய அயன பலத்தின் அளவே ஆகும் சந்திரனுக்கு சேஷ்டாபலத்தின் அளவு சந்திரனுடைய பட்சபலத்தின் அளவே ஆகும். மற்ற கிரகங்களின் சேஷ்டாபலம் அறியவேண்டுமானல் அவைகளின் ஜேஷ்டகேந்திரமென்று சொல்லப்பட்ட ஒரு

அளவை முதலில் அறியவேண்டும். ஜேஷ்ட கேந்திரமென்பதற்குச் சீக்கிரகேந்திரமென்ற மற்றொரு பெயருண்டு. ஜேஷ்டகேந்திரம் அல்லது சீக்கிரகேந்திரம் என்பதை அறிந்துகொள்ள வேண்டுமானால் வான சாஸ்திரந் தெரியவேண்டியது அவசியம். பூமியிலிருந்து பார்க்கும்போது சூரியனுடன் ஒரு கிரகஞ் சேர்ந்து இவ்விரண்டும் ஒரே இடத்திலிருந்தால் இவ்விடத்திற்கு சீக்கிரோச்சமென்று பெயர். அந்த கிரகத்தின் மத்திமஸ்புடத்தையுஞ் சுத்த ஸ்புடத்தையும் கூட்ட வருகின்றதை இரண்டால் வகுக்க வருகின்ற ஸ்புடத்திலிருந்து சீக்கிரோச்சத்தைக் கழிக்க வருகின்றதற்குச் சீக்கிரகேந்திரமென்று பெயர். சீக்கிரகேந்திரம் பூஜ்ஜியமானால் அந்த கிரகத்திற்கு சேஷ்டாபலம் பூஜ்ஜியமென்றும், 180 பாகையானால் சேஷ்டாபலம் முழு பலமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. மேலும் சீக்கிரகேந்திரம் பூஜ்ஜியம் முதல் 180 பாகை வரையிலும் அதிகப்பட்டுக்கொண்டு வந்தால் சேஷ்டாபலம் பூஜ்ஜியம் முதல் முழு பலம் வரையிலும் அதிகப்பட்டுக்கொண்டு வருமென்றும், சீக்கிரகேந்திரம் 180 பாகை முதல் 360 பாகை வரையிலும் அதிகப்பட்டுக்கொண்டு வந்தால் சேஷ்டாபலம் முழு பலத்திலிருந்து பூஜ்ஜியபலம் வரையிலுங் குறைந்துகொண்டே வருமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் சேஷ்டாபலம் அறியவேண்டுமானால் சீக்கிரோச்சம், கிரகசுத்த ஸ்புடம், மத்திமஸ்புடமாகிய இவைகளை அறியவேண்டும். இவைகளை அறியவேண்டுமானால் வானசாஸ்திரம் அதிகமாகத் தெரிந்திருக்க வேண்டும். வானசாஸ்திரம் அதிகமாகத் தெரிந்தவர்கள் அதிகமாக இருக்கமாட்டார்களாதலாலும், இப்புத்தகம் வானசாஸ்திரந் தெரியாதவர்களுக்குங்கூட உபயோகப்படும்படியாய் எழுதி இருப்பதாலும், சீக்கிரகேந்திரங் கணித்து அதிலிருந்து சேஷ்டாபலங் கணிப்பது சிரமமானதாலும் அடியிற் கண்டபடி ஒரு சுலபமான வழி கொடுக்கப்பட்டிருக்கின்றது. இந்த வழியால் சேஷ்டாபலத்தை வானசாஸ்திரந் தெரியாதவர்கள்கூட வெகு சுலபமாக நமக்குத் தேவையானவரையில் சரியா இருக்கும்படி கணிக்கலாம்.

ஒரு கிரகம் சூரியனுடன்சேர்ந்து ஸ்புடரீதியாய் ஒரே பாகை கலையில் இருப்பதற்கு "உவாந்தம்" என்றும், சூரியனை விட்டு 180 பாகை பிரிந்து இருப்பதற்கு "உவா" என்றுஞ் சொல்லுவோம். சந்திரன், செவ்வாய், குரு, சனி ஆகிய இந்த 4 கிரகங்களுஞ்

யனை விட்டு 180 பாகை பிரிந்து இருக்கக் கூடுமாதலால் இவைகளுக்கு "உவா" என்பது உண்டு. புதன், சுக்கிரன் ஆகிய இவ்விரண்டு கிரகங்களுஞ் சூரியனை விட்டு 180 பாகை வரையிலும் பிரிந்து இருக்க முடியாதாதலால் இவைகளுக்கு "உவா" என்பது கிடையாது. எல்லா கிரகங்களுஞ் சூரியனுடன் சேர்ந்து இருக்கக் கூடுமாதலால் எல்லா கிரகங்களுக்கும் "உவாந்தம்" என்பது உண்டு. புதன் அல்லது சுக்கிரன் சூரியனுடன் சேர்ந்து இருக்கும்போது ஒருசமயத்தில் பூமிக்கு அருகாமையும் மற்றொரு சமயத்தில் தூரமாயு மிருக்கக் கூடுமாதலால் இந்த இரண்டு கிரகங்களுக்கு மாத்திரம் உவாந்தமென்பது இருவகைப்படும். இவைகளை "சமீப உவாந்தம்" என்றும், "தூர உவாந்தம்" என்றுஞ் சொல்லுவோம் ஒவ்வொரு கிரகத்தின் "உவா"வும், "உவாந்தமும்" இப்புத்தகம் நிமித்தமாக நமது சி. ஜி. ராஜன் பஞ்சாங்கத்தில் கிரகங்களின் சாரத்தில் கொடுக்கப்பட்டு வரும், இப் பஞ்சாங்கத்தில் இவைகள் கொடுக்கப்படாவிட்டால், "நாடிகல் ஆல்மனெக்கு" என்ற புத்தகத்தில் இருந்து தெரிந்துக்கொள்ளலாம். இந்த நாடிகல் ஆல்மனெக்கில் உவா என்பதற்கு "ஆப்போஸிஷன்" என்றும், உவாந்தத்திற்குக் "கஞ்ஜெங்க்ஷன்" என்றும், "சமீப உவாந்த"த்திற்கு "இம்பீரியர் கஞ்ஜெங்க்ஷன்" என்றும், தூர உவாந்தத்திற்கு "ஸுப்பீரியர் கஞ்ஜெங்க்ஷன்" என்றுஞ் சொல்லப்படும்.

சேவ்வாய், குரு, சனி இவர்களின் சேஷ்டாபலம் கணிக்க:—

பகுதி (1) :—ஜெனன காலத்திற்கு முந்தி ஒரு கிரகத்திற்கு உவாவும், ஜெனனகாலத்திற்குப் பிந்தி அதே கிரகத்திற்கு உவாந்தமும் நேரிடும்போது சேஷ்டாபலங் கணிக்க :—உவா நேரிடும் வேளையிலும், உவாந்தம் நேரிடும் வேளையிலும் அந்த கிரகத்தின் ஸ்புடங் கணித்து வைத்துக்கொள்ளவும். சி. ஜி. ராஜன் பஞ்சாங்கத்தில் கிரகங்களின் ஸ்புடங் தினந்தோறுங் கொடுக்கப்பட்டிருப்பதால் நமக்குத் தேவையான காலத்திற்குக் கிரக ஸ்புடங் கணிக்கும் வழியை முன்னமே சொல்லியிருப்பதால் அந்த வழி பிரகாரம் உவா காலத்திலும், உவாந்த காலத்திலும் அந்த கிரகத்தின் ஸ்புடங் கணிக்கவேண்டியது. மேலும் உவா நேரிடுங் காலத்திற்கும், உவாந்தம் நேரிடுங் காலத்திற்கும் இடையில் அந்த கிரகத்திற்கு வக்கிர நிவர்த்தி நேரிடும். அந்த வக்கிர நிவர்த்தி காலம் பஞ்சாங்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கும். அந்த வக்கிர நிவர்த்தி காலத்தை அறிந்து அந்த காலத்தில் அந்த கிரகத்தி

னுடைய ஸ்புடத்தை முன் சொல்லியதுபோல கணிக்கவேண்டி யது. பிறகு உவாநேரிடுங் காலம் முதல் வக்கிர நிவர்த்தி நேரிடுங் காலம் வரையில் அந்த கிரகஞ் செல்லுந் தூரத்தை அறியவேண் டியது. இந்த தூரமானது உவா காலத்திய ஸ்புடத்திலிருந்து வக்கிர நிவர்த்தியாகுங் காலத்திய ஸ்புடத்தைக் கழிக்க வரு கின்ற தூரமாகும். பிறகு வக்கிர நிவர்த்தியாகுங் காலம் முதல் உவாந்தம் நேரிடுங் காலம் வரையில் அந்த கிரகஞ் செல்லுந் தூரத்தை அறியவேண்டியது. இந்த தூரமானது உவாந்த கால ஸ்புடத்திலிருந்து வக்கிர நிவர்த்தியாகுங் காலத்திய ஸ்புடத்தை கழிக்க வருகின்ற தூரமாகும். இந்த இரண்டு தூரங்களையுங் கூட்ட வருகின்ற மொத்த தூரத்தைப் பூர்ண சீக்கிர கேந்திர மென்று சொல்லுவோம். பிறகு உவா நேரிடுங் காலம் முதல் ஜெனனகாலம் வரையிலும் அந்த கிரகஞ் சென்றிருக்கும் மொத்த தூரத்தை முன்போல அறியவேண்டியது. இந்த தூரத்திற்கு "பின்ன சீக்கிரகேந்திரம்" என்று சொல்லுவோம் பூர்ண சீக்கிர கேந்திரத்திற்கும், பின்ன சீக்கிர கேந்திரத்திற்குமுள்ள வித்தியா சத்தைப் பூர்ண சீக்கிர கேந்திரத்தால் வகுக்க அந்த கிரகத்திற்கு சேஷ்டாபலம் வரும் ஜெனன காலத்திற்கு முந்தி உவாவும் ஜெனன காலத்திற்குப் பிந்தி உவாந்தமும் நேரிடும்போது மாத் திரம் இவ்விதமாக சேஷ்டாபலங் கணிக்கவேண்டியது.

1-வது உதாரணம்:—உதாரணமாக ஒரு குழந்தை 1869ளு அக்டோபர்மீ 2உ காலை 7 மணி—13 நிமிஷத்திற்கு ஜெனன மானதென்றும், சனி என்கிற கிரகத்திற்கு 1869ளு ஜூன்மீ 4உ மாலை 5 மணி 8 நிமிஷத்திற்கு உவா நேரிட்டதென்றும் 1869ளு ஆகஸ்டுமீ 14உ இரவு 4 மணி—2 நிமிஷத்திற்கு வக்கிர நிவர்த்தி நேரிட்டதென்றும், 1869ளு டிஸம்பர்மீ 11உ மாலை 5 மணி 44 நிமிஷத்திற்கு உவாந்தமும் நேரிட்டதென்றும் வைத் துக்கொண்டால் சனிக்கு சேஷ்டாபலங் கணிப்போம். இந்த காலங்களில் சனியினுடைய ஸ்புடத்தைக் கணிக்க அடியிற் கண்டபடி ஆகும்.

| | | பாகை—[illegible] |
|---|---|---|
| (1) | 1—6—1869-ல் மாலை 5 மணி 8 நிமிஷத்தில் உவா அப்போது ஸ்புடம் | 231—[illegible] |
| (2) | 14-8-1869-ல் இரவு 4 மணி 2 நிமிஷத்தில் வக்கிர நிவர்த்தி அப்போது ஸ்புடம் | 228—[illegible] |

பாகை—கலை

(3) 2—10—1869-ல் காலை 7 மணி—13 நிமிஷத்தில் ஜெனனம் அப்போது ஸ்புடம் 230—27

(4) 11—12—1869-ல் மாலை 5 மணி—44 நிமிஷத்தில் உவாந்தம் அப்போது ஸ்புடம் 237—42

இவ்விதமாக தேதி வரிசையாக எழுதிக்கொள்ளவேண்டியது. உவாகாலத்திய ஸ்புடமாகிய 231 பாகை 59 கலையிலிருந்து வக்கிர நிவர்த்தியாகுங்காலத்திய ஸ்புடமாகிய 228 பாகை 38 கலையைக் கழிக்க 3 பாகை 21 கலை வரும் இந்த 3 பாகை 21 கலைதான் உவா நேரிடுங்காலம் முதல் வக்கிர நிவர்த்தியாகும் காலம் வரையிலும் சனி செல்லும் தூரமாகும். பிறகு உவாந்தகால ஸ்புடமாகிய 237 பாகை 42 கலையிலிருந்து வக்கிரம் நிவர்த்தியாகுங் காலத்திய ஸ்புடமாகிய 228 பாகை 38 கலையைக் கழிக்க 9 பாகை 4 கலை வரும். இந்த 9 பாகை 4 கலைதான் வக்கிர நிவர்த்தியாகுங் காலம் முதல் உவாந்தம் நேரிடுங்காலம் வரையில் சனி செல்லுந் தூரமாகும். இவ்விரண்டு தூரங்களையும் அதாவது 3 பாகை 21 கலையையும் 9 பாகை 4 கலையையுங் கூட்ட 12 பாகை 25 கலை வரும். இந்த 12 பாகை 25 கலைதான் சனியினுடைய பூர்ண சீக்கிர கேந்திரமாகும்.

பிறகு உவா நேரிடுங்காலம் முதல் ஜெனனகாலம் வரையிலும் சனி செல்லும் மொத்த தூரத்தைக் கணிப்போம். இந்த உதாரணத்தில் ஜெனன காலத்திற்கு முந்தி வக்கிர நிவர்த்தி நேரிடுவதைக் கவனிக்கவும். உவா காலத்திய ஸ்புடமாகிய 231 பாகை 59 கலையிலிருந்து வக்கிர நிவர்த்திகால ஸ்புடமாகிய 228 பாகை 38 கலையைக் கழிக்க 3 பாகை 21 கலை வரும். இந்த உவாகாலமுதல் வக்கிரநிவர்த்திகாலம் வரையில் கிரகம் செல்லுந் தூரமாகும். (ஜெனன காலத்திற்குப் பின்தி வக்கிர நிவர்த்தி நேரிடுமானல் இந்த தூரத்தைக் கணித்து சேர்க்கக்கூடாது.) பிறகு ஜெனனகால ஸ்புடமாகிய 230 பாகை 27 கலையிலிருந்து வக்கிர நிவர்த்திகால ஸ்புடமாகிய 228 பாகை 38 கலையைக் கழிக்க 1 பாகை 49 கலை வரும். இது வக்கிர நிவர்த்திகாலம் முதல் ஜெனனகாலம் வரையில் சனி செல்லுந் தூரமாகும். இவ்விரண்டு தூரங்களையும் * அதாவது 3 பாகை 21 கலையையும் 1 பாகை 49 கலையையுங்கூட்ட 5 பாகை 10 கலை வரும். இந்த 5 பாகை 10 கலைதான் உவாகாலம் முதல் ஜெனனகாலம் வரையில்

சனி செல்லும் மொத்த தூரமாகும். இந்த 5 பாகை 10 கலைதான் சனியினுடைய "பின்ன சீக்கிரகேந்திரம்" ஆகும்.

பிறகு பூர்ண சீக்கிர கேந்திரமாகிய 12 பாகை 25 கலையி லிருந்து பின்ன சீக்கிரகேந்திரமாகிய 5 பாகை 10 கலையைக் கழிக்க 7 பாகை 15 கலை வரும். இந்த 7 பாகை 15 கலையை 12 பாகை 25 கலையால் வகுக்க சனியின் சேஷ்டாபலம் வரும். வகுத்தல் பின்வருமாறு செய்யவேண்டியது. 7 பாகை 15 கலையைக் கலையாக மாற்ற 435 கலைவரும். 12 பாகை 25 கலையைக் கலையாக மாற்ற 745 கலைவரும். 435-யை 100-ஆல் பெருக்க 43,500 வரும். இந்த 43,500-யை 745-ஆல் வகுக்க வருகின்ற ஈவுதான் சேஷ்டாபலம் 100-ல் எத்தனை பங்கு என்பதைத் தெரிவிக்கும். 43,500-யை 745-ஆல் வகுக்க ஈவு 58 வரும். ஆகையால் ஜெனனகாலத்தில் சனியினுடைய சேஷ்டாபலம் 100-ல் 58 பங்கு என்று அறியவேண்டியது.

*குறிப்பு :—ஜெனன காலத்திற்குப் பிந்தி வக்கிரம் நிவர்த்தி நேரிடுமானால் இரண்டுதூரங்கள் நேரிடாது. அதாவது முதலில் சொன்ன தூரம் நேரிடாது. இரண்டாவது சொன்ன ஒரு தூரந் தான் நேரிடும். இந்த இரண்டாவது தூரந்தான் பின்ன சீக்கிர கேந்திரமாகும்.

பகுதி (2):—ஜெனன காலத்திற்குமுந்தி ஒரு கிரகத்திற்கு உவாந்தமும் ஜெனன காலத்திற்குப் பிந்தி அதே கிரகத்திற்கு உவாவும் நேரிடும்போது சேஷ்டாபலம் கணிக்க:—

முந்தி சொல்லிய 1-வது பகுதியில் உவாவிற்கும் உவாந்தத் திற்கும் இடையில் வக்கிர நிவர்த்தி நேரிடும் என்று சொன்னோம். இந்த பகுதியில் கண்ட உவாந்தத்திற்கும் உவாவிற்கும் இடையில் வக்கிர ஆரம்பம் நேரிடும். இதுதான் 1-வது பகுதியின் வழிக்கும் 2-வது பகுதியின் வழிக்கும் முக்கியமான வித்தியாசம். உவாந்த காலம் உவாகாலம், வக்கிர ஆரம்ப காலம், ஜெனனகாலம் ஆகிய இக்காலங்களில் ஒரு கிரகத்தினுடைய ஸ்புடங்களை முன்போல் கணித்துவைக்கவும். பிறகு உவாந்தகால முதல் உவா காலம் வரையிலும் அந்த கிரகம் வக்கிரகதியையுஞ் சேர்த்துக் கணக்கிட்டு மொத்தம் எவ்வளவு தூரம் செல்லுகின்றதென்று பார்க்கவும். இந்த மொத்த தூரந்தான் பூர்ண சீக்கிரகேந்திரமாகும். உவாந்த காலம் முதல் ஜெனனகாலம் வரையில் அந்த கிரகம் செல்லும்

மொத்ததூரத்தைக் கணிக்கவும். இந்த மொத்த தூரந்தான் பின்ன சீக்கிரகேந்திரமாகும். பின்ன சீக்கிரகேந்திரத்தைப் பூர்ண சீக்கிர கேந்திரத்தால் வகுக்க அந்த கிரகத்திற்கு சேஷ்டாபலம் வரும். (குறிப்பு 1-வது பகுதியில் பூர்ண சீக்கிர கேந்திரத்திற்கும் பின்ன சீக்கிர கேந்திரத்திற்கும் உள்ள வித்தியாசத்தைப் பூர்ணசீக்கிர கேந்திரத்தால் வகுக்கவேண்டியது என்று சொன்னோம். உவா விற்கும் உவாந்தத்திற்கும் இடையில் ஜெனனம் நேரிட்டால் இவ் விதமாகச் செய்யவேண்டியது. 1-வது பகுதியின் வழிக்கும் 2-வது பகுதியின் வழிக்கும் உள்ள ஒரு சிறிய வித்தியாசம் இது. இதை நன்றாய் கவனிக்கவும்.) இந்த வழியை அடியிற்கண்ட உதா ரணத்தால் விளக்கிக் காட்டுவோம். (2-வது உதாரணம்) உதா ரணமாக ஒரு குழந்தை 1869ஸு அக்டோபர்மீ 2ங்வ காலை 7-மணி 13 நிமிஷத்திற்கு ஜெனமானதென்றும் குரு என்கிற கிரகத்திற்கு 1869ஸு ஏப்ரல்மீ 17ங்வ காலை 10-மணி 48 நிமிஷத் திற்கு உவாந்தம் நேரிட்டதென்றும் 1869ஸு செப்டம்பர்மீ 9ங்வ இரவு 1-மணி 56 நிமிஷத்திற்கு வக்கிர ஆரம்பம் நேரிட்ட தென்றும், 1869ஸு நவம்பர்மீ 8ங்வ காலை 10-மணி 56 நிமிஷத் திற்கு உவா நேரிட்டதென்றும் வைத்துக்கொள்ளுவோம். இந்த காலங்களில் குருவினுடைய ஸ்புடத்தைக் கணிக்க அடியிற்கண்ட படி ஆகும்.

| | பாகை—கலை. |
|---|---|
| (1) 17—4—1869-ல் காலை 10 மணி 48 நிமிஷத்தில் உவாந்தம் அப்போது ஸ்புடம் | 5—21 |
| (2) 9—9—1869-ல் இரவு 1 மணி 56 நிமிஷத்தில் வக்கிர ஆரம்பம் அப்போது ஸ்புடம் | 29— 6 |
| (3) 2—10—1869-ல் 7 மணி 13 நிமிஷத்தில் ஜெனனம் அப்போது ஸ்புடம | 28—17 |
| (4) 8—11—1869-ல் காலை 10 மணி 56 நிமிஷத்தில் உவா அப்போது ஸ்புடம் | 24— 2 |

இவ்விதமாக முன்போலவே எப்போதும் தேதி வரிசையாக எழுதிக்கொள்ள வேண்டியது. வக்கிர ஆரம்பகால ஸ்புடமாகிய பாகை 29—6 கலையிலிருந்து உவாந்தகால ஸ்புடமாகிய பாகை 5-21 கலையைக் கழிக்க 23 பாகை 45 கலை வரும். இது உவாந்த காலம் முதல் வக்கிரகாலம் ஆரம்பம்வரையில் கிரகம் செல்லும்

தூரமாகும். வக்கிர ஆரம்பகால ஸ்புடமாகிய பாகை 29-6 கலை
யிலிருந்து உவாகால ஸ்புடமாகிய பாகை 24 கலை 2-யைக் கழிக்க
5 பாகை 4 கலை வரும். இது வக்கிர ஆரம்பகாலம் முதல் உவா
வரையிலும் கிரகம்செல்லும் மொத்ததூரம் ஆகும். இவ்விரண்டை
யும் அதாவது பாகை 23—45 கலையையும் பாகை 5—4 கலையை
யுங் கூட்ட வருகின்ற பாகை 28—49 கலைதான் குரு உவாந்தம்
முதல் உவாவரையிலும் செல்லுகின்ற மொத்த தூரம் அல்லது
குருவினுடைய பூர்ண சீக்கிர கேந்திரம் ஆகும்.

மேலும் வக்கிர ஆரம்பகால ஸ்புடமாகிய 29 பாகை 6 கலை
யிலிருந்து உவாந்தகால ஸ்புடமாகிய பாகை 5-21 கலையை கழிக்க
23 பாகை 45 கலைவரும். இது உவாந்தம் முதல் வக்கிர ஆரம்ப
காலம் வரையில் குரு செல்லும் மொத்ததூரம் ஆகும். வக்கிர
ஆரம்பகால ஸ்புடமாகிய பாகை 29—6 கலையிலிருந்து ஜெனன
கால ஸ்புடமாகிய பாகை 28—17 கலையைக் கழிக்க பாகை
0—49 கலைவரும். இது வக்கிரகால ஆரம்பம் முதல் ஜெனன
காலம் வரையில் குரு செல்லும் தூரம் ஆகும். இவ்விரண்டு
தூரங்களாகிய 23 பாகை 45 கலையும் 0 பாகை 49 கலையும் கூட்ட
வருகின்ற 24 பாகை 34 கலைதான் உவாந்தகாலம் முதல் ஜெனன
காலம் வரையில் குரு செல்லும் மொத்ததூரம் ஆகும். இந்த
24 பாகை 34 கலைதான் குருவினுடைய பின்ன சீக்கிரகேந்திரம்
ஆகும். இந்த பின்ன சீக்கிர கேந்திரமாகிய 24 பாகை 34 கலையை
மேலேவந்த பூர்ண சீக்கிரகேந்திரமாகிய 28 பாகை 49 கலையால்
வகுக்க குருவின் சேஷ்டாபலம் வரும். வகுத்தல் பின்வருமாறு
செய்யவும். 24 பாகை 34 கலையைக் கலையாகமாற்ற 1474 கலை
வரும். 28 பாகை 49 கலையைக் கலையாகமாற்ற 1729 கலைவரும்.
1474 கலையை 100-ஆல் பெருக்க 1,47,400 வரும் இந்த
1 47,400-யை 1729-ஆல் வகுக்க வருகின்ற ஈவுதான் சேஷ்டா
பலம் 100-ல் எத்தனை பங்கு என்பதைத் தெரிவிக்கும். 1,47,400-
யை 1729-ஆல் வகுக்க ஈவு 85 வரும். ஆகையால் ஜெனன
காலத்தில் குருவினுடைய சேஷ்டாபலம் 100-ல் 85 பங்குஎன்று
அறியவேண்டியது

புதன், சுக்கிரன் இவைகளின் சேஷ்டாபலம் கணிக்க:—
புதன், சுக்கிரன் ஆகிய இந்த இரண்டு கிரகங்களுக்கு மாத்திரம்
சமீப உவாந்தம், தூர உவாந்தம் என்று இருப்பதால், செவ்வாய்,

குரு, சனி இவைகளுக்குச் சொல்லிய உவாவிற்குப் பதிலாக சமீப உவாந்தத்தையும், உவாந்தத்திற்குப் பதிலாகத் தூர உவாந்தத்தையும் வைத்துச் செவ்வாய், குரு, சனி இவர்களுக்கு 1-வது பகுதி, 2-வது பகுதிகளில் சொல்லிய வழி பிரகாரம் கணிக்க புதன், சுக்கிரன் இவர்களுக்கு ஜேஷ்டா பலம் வரும். அதாவது கீழ் கண்டபடி ஆகும்.

பகுதி (1) :—ஜெனன காலத்திற்கு முந்தி சமீப உவாந்தமும், ஜெனன காலத்திற்கு பிந்தி தூர உவாந்தமும் நேரிட்டால் ஜேஷ்டாபலம் கணிக்க:—சமீப உவாந்தகாலம் முதல் தூர உவாந்தகாலம் வரையில் கிரகம் செல்லும் மொத்த தூரத்தை முன்போலக் கணிக்கவேண்டியது. இந்த தூரம் பூர்ண சீக்கிர கேந்திரம் ஆகும். பிறகு சமீப உவாந்தகாலம் முதல் ஜெனன காலம் வரையில் கிரகம் செல்லும் மொத்த தூரத்தைக் கணிக்க வேண்டியது. இந்த தூரம் பின்ன சீக்கிர கேந்திரம் ஆகும். பூர்ண சீக்கிர கேந்திரத்திலிருந்து பின்ன சீக்கிர கேந்திரத்தைக் கழிக்க வருகின்றதைப் பூர்ண சீக்கிர கேந்திரத்தால் வகுக்க ஜேஷ்டா பலம் வரும்.

(3-வது உதாரணம்) உதாரணமாகப் புதனுக்கு.

| | பாகை—கலை |
|---|---|
| (1) 13-3-1927-ல் இரவு 8 மணி 30 நிமிஷத்தில் சமீப உவாந்தம் அப்போது ஸ்புடம் | 329—18 |
| (2) 27-3-1927-ல் காலை 7 மணி 30 நிமிஷத்தில் வக்கிர நிவர்த்தி அப்போது ஸ்புடம் | 321—11 |
| (3) 1-4-1927-ல் மாலை 5 மணி 30 நிமிஷத்தில் ஜெனனம் அப்போது ஸ்புடம் | 322—32 |
| (4) 20-5-1927-ல் காலை 9 மணி 30 நிமிஷத்தில் தூர உவாந்தம் அப்போது ஸ்புடம் | 35—29 |

சமீப உவாந்தகால ஸ்புடமாகிய பாகை 329—18 கலையிலிருந்து வக்கிர நிவர்த்தி கால ஸ்புடமாகிய பாகை 321—11 கலையை கழிக்க பாகை 8—7 கலை வரும். மேலும் தூர உவாந்த கால ஸ்புடமாகிய பாகை 35—29 கலையிலிருந்து வக்கிர நிவர்த்தி ஸ்புடமாகிய 321 பாகை 11 கலையைக் கழிக்க பாகை 74—18 கலை வரும். (குறிப்பு) 35 பாகை 29 கலை சிறியதாயும், 321 பாகை 11 கலை பெரியதாயும் இருப்பதால் 35 பாகை 29 கலையுடன் ஒரு வட்டமாகிய 360 பாகையைக் கூட்ட வருகின்ற 395 பாகை

29 கலையிலிருந்து 321 பாகை 11 கலையைக் கழிக்க 74 பாகை 18 கலை வரும்) பாகை 8—7 கலையையும், 74 பாகை 18 கலையையும் கூட்ட வருகின்ற 82 பாகை 25 கலைதான் பூர்ண சீக்கிரகேந்திரம் ஆகும். பிறகு சமீப உவாந்தகால ஸ்புடமாகிய பாகை 329—19 கலையிலிருந்து வக்கிர நிவர்த்தி கால ஸ்புடமாகிய பாகை 321-11 கலையைக் கழிக்க 8 பாகை 7 கலை வரும். ஜெனனகால ஸ்புடமாகிய 322 பாகை 32 கலையிலிருந்து வக்கிரநிவர்த்தி கால ஸ்புடமாகிய 321 பாகை 11 கலையைக் கழிக்க 1 பாகை 21 கலை வரும். 8 பாகை 7 கலையையும், 1 பாகை 21 கலையையுங் கூட்ட வருகின்ற 9 பாகை 28 கலைதான் பின்ன சீக்கிர கேந்திரமாகும். பூர்ண சீக்கிர கேந்திரமாகிய 82 பாகை 25 கலையிலிருந்து பின்ன சீக்கிர கேந்திரமாகிய பாகை 9—28 கலையைக் கழிக்க 72 பாகை 57 கலை வரும். இந்த 72 பாகை 57 கலையை 82 பாகை 25 கலையால் வகுக்க ஜேஷ்டா பலம் வரும். பின்வருமாறு வகுக்கவேண்டியது. 72 பாகை 57 கலையைக் கலையாக மாற்ற 4,377 கலை வரும். 82 பாகை 25 கலையைக் கலையாக மாற்ற 4,945 கலை வரும். இந்த 4,377 கலையை 100-ஆல் பெருக்க 4,37,700 வரும். இந்த 4,37,700-யை 4,945-ஆல் வகுக்க ஈவு 89 வரும். ஆகையால் ஜேஷ்டா பலம் 100-ல் 89 பங்கு ஆகும்.

பகுதி (2):—ஜெனன காலத்திற்கு முந்தி தூர உவாந்தமும் ஜெனன காலத்திற்கு பிந்தி சமீப உவாந்தமும் நேரிட்டால் ஜேஷ்டா பலம் கணிக்க:—தூர உவாந்த காலம் முதல் சமீப உவாந்தகாலம் வரையிலும் கிரகம் செல்லும் மொத்த தூரத்தைக் கணிக்கவும். இந்த தூரம் பூர்ண சீக்கிர கேந்திரம் ஆகும். பிறகு தூர உவாந்தகாலம் முதல் ஜெனனகாலம் வரையில் கிரகம் செல்லும் மொத்த தூரத்தைக் கணிக்கவேண்டியது. இந்த மொத்த தூரம் பின்ன சீக்கிர கேந்திரம் ஆகும். பின்ன சீக்கிர கேந்திரத்தைப் பூர்ண சீக்கிர கேந்திரத்தால் வகுக்க ஜேஷ்டா பலம் வரும்.

(4-வது உதாரணம்) உதாரணமாகச் சுக்கிரனுக்கு,

| | பாகை—க |
|---|---|
| 9-5-1869-ல் பகல் 12 மணி 59 நிமிஷத்தில் தூர உவாந்தம்; அப்போது ஸ்புடம் | 26— |
| 2-10-1869-ல் காலை 7 மணி 13 நிமிஷத்தில் ஜெனனம்; அப்போது ஸ்புடம் | 204— |

| | | |
|---|---|---|
| | | பாகை—கலை |
| 31-1-1870-ல் மாலை 4 மணி 42 நிமிஷத்தில் வக்கிர ஆரம்பம்; அப்போது ஸ்புடம் | | 320—56 |
| 23-2-1870-ல் இரவு 8 மணி 0 நிமிஷத்தில் சமீப உவாந்தம்; அப்போது ஸ்புடம் | | 312—58 |

வக்கிர ஆரம்பகால ஸ்புடமாகிய 320 பாகை 56 கலையி லிருந்து தூர உவாந்தகால ஸ்புடமாகிய 26 பாகை 48 கலையைக் கழிக்க 294 பாகை 8 கலை வரும். சமீப உவாந்தகால ஸ்புடமாகிய 312 பாகை 58 கலையை வக்கிர ஆரம்பகால ஸ்புடமாகிய 320 பாகை 56 கலையிலிருந்து கழிக்க 7 பாகை 58 கலை வரும். 294 பாகை 8 கலையையும் 7 பாகை 58 கலையையும் கூட்ட வருகின்ற 302 பாகை 6 கலைதான் பூர்ண சீக்கிர கேந்திரமாகும். ஜெனனகால ஸ்புடமாகிய 204 பாகை 32 கலையிலிருந்து தூர உவாந்தகால ஸ்புடமாகிய 26 பாகை 48 கலையைக் கழிக்க வருகின்ற 177 பாகை 44 கலைதான் பின்ன சீக்கிர கேந்திரமாகும். 177 பாகை 44 கலையை 302 பாகை 6 கலையால் வகுக்க ஜேஷ்டா பலம் வரும். பின் வருமாறு வகுக்கவேண்டியது. 177 பாகை 44 கலையைக் கலையாக மாற்ற 10,664 கலை வரும். 308 பாகை 6 கலையைக் கலையாக மாற்ற 18,126 கலை வரும். 10,664-யை 100-ஆல் பெருக்க 10,66,400 வரும். இந்த 10,66,400-யை 18,126-ஆல் வகுக்க ஈவு 59 வரும். ஆகையால் சுக்கிரனுக்கு ஜேஷ்டாபலம் 100-ல் 59 பங்கு ஆகும்.

இவ்விதமாக 5 கிரகங்களின் ஜேஷ்டாபலம் சுலபமாகக் கணிக்க வேண்டியது. அடியிற்காட்டிய உதாரணங்களையும் படிக்கவும்.

(5-வது உதாரணம்) உதாரணமாகச் செவ்வாய்க்கு,

| | |
|---|---|
| | பாகை—கலை |
| 13-2-1869-ல் இரவு 9 மணி 15 நிமிஷத்தில் உவா அப்போது ஸ்புடம் | 123—11 |
| 27-3-1869-ல் மாலை 3 மணி 48 நிமிஷத்தில் வக்கிர நிவர்த்தி அப்போது ஸ்புடம் | 113—23 |
| 2-10-1869-ல் காலை 7 மணி 13 நிமிஷத்தில் ஜெனனம் அப்போது ஸ்புடம் | 206—30 |
| 12-3-1870-ல் இரவு 11 மணி 6 நிமிஷத்தில் உவாந்தம் அப்போது ஸ்புடம் | 330— 6 |

123 பாகை 11 கலையிலிருந்து 113 பாகை 23 கலையை கழிக்க 9 பாகை 48 கலை வரும். 330 பாகை 6 கலையிலிருந்து 113 பாகை 23 கலையைக் கழிக்க 216 பாகை 43 கலை வரும். 9 பாகை 48 கலையையும், 216 பாகை 43 கலையையுங் கூட்ட 226 பாகை 31 கலை வரும். இந்த 226 பாகை 31 கலைதான் பூர்ண சீக்கிர கேந்திரமாகும். மேலும் 123 பாகை 1 கலையிலிருந்து 113 பாகை 23 கலையை கழிக்க 9 பாகை 48 கலை வரும். 206 பாகை 30 கலையிலிருந்து 113 பாகை 23 கலையைக் கழிக்க 93 பாகை 7 கலை வரும். இந்த 9 பாகை 48 கலையையும், 93 பாகை 7 கலையையுங் கூட்ட வருகின்ற 102 பாகை 55 கலைதான் பின்ன சீக்கிர கேந்திரம் ஆகும். 226 பாகை 31 கலையிலிருந்து 10[illegible] பாகை 55 கலையைக் கழிக்க வருகின்ற 123 பாகை 36 கலை[illegible] 226 பாகை 31 கலையால் முன்னே சொல்லியபடி வருக்க செ[illegible]வாய்க்கு ஜேஷ்டா பலம் 100-ல் 55 பங்கு வரும்.

(6-வது உதாரணம்) :—உதாரணமாகப் புதனுக்கு,

பாகை—

12-8-1869-ல் காலை 9 மணி 17 நிமிஷத்தில் தூர உவாந்தம் அப்போது ஸ்புடம் 117—

2-10-1869-ல் காலை 7 மணி 13 நிமிஷத்தில் ஜெனனம் அப்போது ஸ்புடம் 191—

8-10-1869-ல் இரவு 7 மணி 31 நிமிஷத்தில் வக்கிர ஆரம்பம் அப்போது ஸ்புடம் 193—

20-10-1869-ல் பகல் 1 மணி 32 நிமிஷத்தில் சமீப உவாந்தம் அப்போது ஸ்புடம் 185—

193 பாகை 59 கலையிலிருந்து 117 பாகை 33 கலையை கழிக்க 76 பாகை 26 கலை வரும். 193 பாகை 56 கலையிலிருந்து 185 பாகை 8 கலையைக் கழிக்க 8 பாகை 51 கலை வரும். [illegible] பாகை 26 கலையையும், 8 பாகை 51 கலையையுங் கூட்ட வருகின்ற 85 பாகை 17 கலைதான் பூர்ண சீக்கிர கேந்திரம் ஆகும். [illegible] பாகை 52 கலையிலிருந்து 117 பாகை 33 கலையைக் கழிக்க வருகின்ற 74 பாகை 19 கலைதான் பின்ன சீக்கிர கேந்திரம் ஆகும். இந்த 74 பாகை 19 கலையை 85 பாகை 17 கலையால் முன்னே சொல்லிய பிரகாரம் வருக்க புதனுக்கு ஜேஷ்டா பலம் 100-ல் 87 பங்கு வரும்.

## 34-வது வாக்கியம் பாவ பலம்.

பாவ பலம் என்பது நான்கு அம்சங்களுடையது. அவை (1) பாவாதி அல்லது பாவாதிபதி பலம், (2) பாவ திருக் பலத்தில் 4-ல் 1 பங்கு (3) புத குரு திருக்பலம், (4) பாவ திக்குப் பலம் என்று நான்கு வகைப்படும். இவைகளைக் கணிக்கும் விதம் அடியிற்கண்டபடி ஆகும்.

(1)-வது அயிட்டம்-பாவாதி என்ற பாவாதிபதி பலம் கணிக்க :—முதலில் பாவாதி அறியவும். ஒரு பாவம் எந்த ராசியில் அல்லது இராசிகளில் அடங்குகின்றதோ அந்த ராசிக்குடையவன் அல்லது அந்த இராசிக்குடையவர்கள் பாவாதி அல்லது பாவாதிபதிகள் ஆவார்கள். பாவாதிபதி தெரிந்த பிறகு அந்த பாவாதியின் சட்பலம் அறியவேண்டியது. இது முன்னமே கணித்து வைத்து இருக்கப்பட்டது. அந்த பாவாதியின் இராசியின் அளவாகிய 30 பாகைக்கு அந்த பாவாதிக்கு வந்த சட்பலம் உரியதானால் அந்த ராசியில் எவ்வளவு பாகம் பாவத்தில் அடங்கியிருக்கின்றதோ அவ்வளவு பாகத்திற்குச் சட்பலம் திரைராசிகம் பிரகாரம் கணிக்கவேண்டியது. இப்படிக் கணித்து வருவதுதான் பாவாதிபலம் ஆகும். இந்த அடியிற்கண்ட உதாரணத்தால் விளக்குவோம். உதாரணமாக :—1-வது பாவம் 169 பாகை 53 கலை முதல் 199 பாகை 53 வரையிலும் இருப்பதாக வைத்துக் கொள்வோம். 150 பாகை முதல் 180 பாகை வரையிலும் கன்னியாராசியானதாலும், 180 பாகை முதல் 210 பாகை வரையிலும் துலா ராசியானதாலும், 1-வது பாவம் கன்னியாராசியிலும், துலாராசியிலும் அடங்கி இருக்கின்றது. ஆகையால் இந்த கன்னி, துலா ராசியாதிபதிகளாகிய புதனும், சுக்கிரனும் 1-வது பாவத்திற்குப் பாவாதிபதிகளாவார்கள். முதலில் புதனை எடுத்துக் கொள்வோம். 37-வது கட்டத்தைப் பார்க்கப் புதனுக்கு சட்பலம் 933 பாகம் ஆகும். கன்னியாராசி முடிவாகிய 180 பாகை 0 கலையிலிருந்து 1-வது பாவ ஆரம்பமாகிய 169 பாகை 53 கலையை கழிக்க வருகின்ற 10 பாகை 7 கலைதான் கன்னியாராசியில் அடங்கியுள்ள 1-வது பாவத்தின் அளவு ஆகும். கன்னியாராசியாகிய 30 பாகைக்கு 933 பாகமானால் கன்னியாராசியின் பாகமாகிய 10 பாகை 7 கலைக்கு எவ்வளவு பாகம் என்று அறியவேண்டியது. இதைப் பின்வருமாறு கணிக்கவும். 30 பாகையைக் கலையாக மாற்ற 1,800 கலை ஆகும். 10 பாகை 7 கலையைக் கலையாக மாற்ற 607 கலை ஆகும். ஒரு ராசியின் பாகத்தால்

வருகின்ற கலையாகிய 607-யைச் சட்பலமாகிய 933-ஆல் பெருக்க வருகின்ற 5,66331-யை 1,800-ஆல் வகுக்கவேண்டியது. இப்படி வகுக்க ஈவு 315 வரும். இந்த 315-தான் புதனால் உண்டாகின்ற பாவாதிபலம் ஆகும். இப்போது சுக்கிரனை எடுத்துக்கொள்வோம். 37-வது கட்டத்தைப் பார்க்கச் சுக்கிரனுக்கு சட்பலம் 649 பாகம் ஆகும். துலாராசி ஆரம்பமாகிய 180 பாகையை 1-வது பாவம் முடிவாகிய 199 பாகை 53 கலையிலிருந்து கழிக்க வருகின்ற 19 பாகை 53 கலைதான் துலாராசியில் அடங்கியுள்ள 1-வது பாவத்தின் அளவு ஆகும். துலாராசியாகிய 30 பாகைக்கு 649 பாகமானால் துலாராசியின் பாகமாகிய 19 பாகை 53 கலைக்கு எவ்வளவு பாகம் என்று முன்போல அறியவும். இதைப் பின்வருமாறு கணிக்கவும். 30 பாகையைக் கலையாக மாற்ற 1,800 கலை ஆகும். 19 பாகை 53 கலையைக் கலையாக மாற்ற 1,193 கலை வரும். ஒரு இராசியின் பாகத்தால் வருகின்ற கலையாகிய 1,193-யைச் சட்பலமாகிய 649-ஆல் பெருக்க வருகின்ற 77,4,257-யை 1,800-ஆல் வகுக்கவேண்டியது. இப்படி வகுக்க ஈவு 430 வரும். இந்த 430 பாகந்தான் சுக்கிரனால் உண்டாகின்ற பாவாதிபலம் ஆகும்.

| | | |
|---|---|---|
| ஆகையால் புதனுடைய பாவாதி பலம் | 315 | ஆகும். |
| சுக்கிரனுடைய பாவாதி பலம் | 430 | „ |
| இவ்விரண்டையுங் கூட்ட பாவாதிபதிபலம் | 745 | „ |

மேலே சொல்லிய காரணத்தினால் 1-வது பாவத்திற்குப் புதனும், சுக்கிரனும் பாவாதிபதிகளானதால் இவர்களால் வருகின்ற 745 பாகந்தான் 1-வது பாவத்தின் பாவாதிபலம் ஆகும். இந்த விதமாக ஒவ்வொரு பாவத்திற்கும் பாவாதி பலம் அறியவேண்டியது. ஒரு பாவம் ஒரே இராசியில் அடங்கினால் அந்த ராசிக்குடைய ஒரே கிரகம் பாவாதிபதியாகவும், இரண்டு ராசிகளில் அடங்கினால் அந்த இரண்டு இராசிகளுக்குடைய கிரகங்கள் பாவாதிபதிகளாகவும், மூன்று ராசிகளில் அடங்கினால் அந்த மூன்று ராசிகளுக்குடைய கிரகங்கள பாவாதிபதிகளாகவும் ஆவார்கள். இதை நன்றாய்க் கவனிக்கவும்.

(2)-வது அயிட்டம்—பாவ திருக்பலம் கணிக்க :-- இந்த பாவ திருக்பலத்தைக் கணிக்கும் வழி 19-வது, 20-வது வாக்கியங்களில் உபயோகப்படுத்தும் விதத்தில் முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. அதை வாசிக்கவும். 38-வது கட்டத்தையும் பார்க்கவும்.

(3)-வது அயிட்டம்—புத, குரு பாவபலம்:—புத, குரு பாவ பலம் என்பது புதனும், குருவும் ஒவ்வொரு பாவத்தையும் பார்க்கும் பார்வையின் அளவைக் கூட்ட வருவது. உதாரணமாக 38-வது கட்டத்தைப் பார்க்க 4-வது பாவத்தைக் குரு 82 பங்குடனும், புதன் 63 பங்குடனும் பார்ப்பதால் இந்த 82யையும், 63யையுங் கூட்ட வருகின்ற 145 பங்குதான் 4-வது பாவத்தின் புத குரு பாவபலம் ஆகும். இவ்விதமாகவே ஒவ்வொரு பாவத்திற்கும் அறியவும்.

(4)-வது அயிட்டம்—பாவ திக்குப்பலம் கணிக்க:—பாவ திக்குப் பலம் கணிப்பதற்கு முதலில் 12 பாவஸ்புடங்களும் இருக்கும் இராசிகள் இரு கால் ராசியா, அல்லது நாற்கால் ராசியா, அல்லது ஜல ராசியா, அல்லது பல கால் ராசியா என்று பார்க்க வேண்டியது. பிறகு ஒரு பாவஸ்புடம் இருக்கும் ராசி.

(1) இரு கால் ராசியானால் அந்த பாவஸ்புடத்திலிருந்து 1வது பாவஸ்புடத்தைக் கழிக்கவும்.

(2) நாற்கால் ராசியானால் அந்த பாவஸ்புடத்திலிருந்து 10வது பாவஸ்புடத்தைக் கழிக்கவும்.

(3) ஜல ராசியானால் அந்த பாவஸ்புடத்திலிருந்து 4வது பாவஸ்புடத்தைக் கழிக்கவும்.

(4) பல கால் ராசியானால் அந்த பாவஸ்புடத்திலிருந்து 7வது பாவஸ்புடத்தைக் கழிக்கவும்

கழிக்கப்படும் ஸ்புடம் கழிக்கும் ஸ்புடத்தைவிட சிறியதானால் கழிக்கப்படும் ஸ்புடத்துடன் 360 பாகையைக் கூட்ட வருகின்றதிலிருந்து கழிக்கும் ஸ்புடத்தைக் கழிக்கவேண்டியது. இப்படிக் கழிக்க வரும் பாகை கலையை முழு பாகையாக மாற்ற வேண்டியது. இப்படி முழு பாகையாக மாற்ற வந்த பாகைக்கு எதிரில் 26வது வாக்கியத்தில் கொடுத்துள்ள அளவே அந்த பாவத்தின் திக்குப் பலம் ஆகும்.

இராசிகள் அடியிற்கண்டபடி இரு கால் ராசி, நாற்கால் ராசி, ஜலராசி, பல கால் ராசி ஆகும்.

| | |
|---|---|
| மேஷம்-நாற்கால் ராசி. | மிதுனம்-இரு கால் ராசி. |
| ரிஷபம்-நாற்கால் ராசி. | கடகம்-ஜலராசி.* |

* கடகத்தைச் சிலர் பல கால் இராசி என்பர். இந்த புத்தகத்தில் ஜலராசியாகக் கருதப்பட்டிருக்கின்றது.

சிம்மம்—நாற்கால் ராசி.
கன்னி—இரு கால் ராசி.
துலாம்—இரு கால் ராசி.
விருச்சிகம்—பல கால் ராசி.
தனுசு முன் அரை—இருகால் ராசி.
" பின் அரை—நாற்கால் ராசி.
மகரம் முன் அரை—நாற்கால் ராசி.
" பின் அரை—ஜலராசி.
கும்பம்—இரு கால் ராசி.
மீனம்—ஜல ராசி.

1-வது உதாரணம்:-உதாரணமாக ஜெனன காலத்தில் 1-வது பாவஸ்புடம் 184 பாகை 48 கலையானால் இந்த 1-வது பாவத்தின் திக்குப் பலம் கணிப்போம். இந்த 184 பாகை 48 கலை என்ற ஸ்புடம் 12-வது வாக்கியத்தைப் பார்க்கத் துலா ராசியில் இருக்கின்றது என்று ஏற்படும். இந்த துலாராசி மேலே சொல்லியபடி இரு கால் ராசியாகும். ஆகையால் 1-வது பாவஸ்புடம் இருக்கும் ராசி இரு கால் ராசியாகும். 1-வது பாவஸ்புடம் இருப்பது இரு கால் ராசியானதால் மேலே சொல்லியபடி அந்த 1-வது பாவஸ்புடத்திலிருந்து 1-வது பாவஸ்புடத்தையே கழிக்கவும். அதாவது 1-வது பாவ ஸ்புடமாகிய 184 பாகை 48 கலையிலிருந்து 1-வது பாவஸ்புடமாகிய 184 பாகை 48 கலையைக் கழிக்க பாகை 0 கலை 0 வரும். அதாவது பாகை பூஜ்ஜியமாகும். ஆகையால் 26-வது வாக்கியத்தில் 0 பாகைக்கு எதிரில் 100 என்று இருப்பதால் 1-வது பாவத்தின் திக்குப் பலம் 100 பங்கு ஆகும்.

2-வது உதாரணம்:—உதாரணமாக ஜெனன காலத்தில் 2-வது பாவஸ்புடம் 214 பாகை 58 கலையும் 7-வது பாவத்தின் ஸ்புடம் 4 பாகை 48 கலையுமானால் இந்த 2-வது பாவத்தின் திக்குப் பலத்தை கணிப்போம். இந்த 214 பாகை 58 கலை என்ற ஸ்புடம் 12-வது வாக்கியத்தைப்பார்க்க விருச்சிக ராசியில் இருக்கின்றது என்று ஏற்படும். இந்த விருச்சிக ராசி மேலே சொல்லியபடி பல கால் இராசியாகும். ஆகையால் 2-வது பாவஸ்புடம் இருக்கும் ராசி பலகால் ராசியானதால் மேலே சொல்லியபடி அந்த 2-வது பாவஸ்புடத்திலிருந்து 7-வது பாவஸ்புடத்தை கழிக்கவேண்டியது அதாவது 2-வது பாவஸ்புடமாகிய 214 பாகை 58 கலையிலிருந்து 7-வது பாவஸ்புடமாகிய 4 பாகை 48 கலையைக் கழிக்க 210 பாகை 10 கலை வரும். இதை முழு பாகையாக மாற்ற 210 பாகை வரும். ஆகையால் 26-வது வாக்கியத்தில் 210 பாகைக்கு எதிரில் 17 என்ற எண் இருப்பதால் 2-வது பாவத்தின் திக்குப் பலம் 17 பங்கு ஆகும்.

3-வது உதாரணம்:-உதாரணமாக ஜெனன காலத்தில் 3-வது பாவஸ்புடம் 245 பாகை 8 கலையும், 1-வது பாவஸ்புடம் 184 பாகை 48 கலையுமானுல் இந்த 3-வது பாவத்தின் திக்குப்பலம் கணிப்போம். இந்த 245 பாகை 8 கலை என்ற ஸ்புடம் 12-வது வாக்கியத்தைப் பார்க்கத் தனுசு இராசியில் முன் அரைபாகத்தில் இருக்கின்றது என்று ஏற்படும். இந்த தனுசு ராசியின் முன் பாகம் மேலே சொல்லியபடி இருகால் ராசியாகும். ஆகையால் 3-வது பாவஸ்புடம் இருக்கும் ராசி இருகால் ராசியாகும். 3-வது பாவஸ்புடம் இருக்கும் ராசி இருகால் ராசியானதால் மேலே சொல்லியபடி அந்த 3-வது பாவஸ்புடத்திலிருந்து 1-வது பாவஸ்புடத்தைக் கழிக்க வேண்டியது. அதாவது 3-வது பாவஸ்புடமாகிய 245 பாகை 8 கலையிலிருந்து 1-வது பாவஸ்புடமாகிய 184 பாகை 48 கலையைக் கழிக்க 60 பாகை 20 கலை வரும். இதை முழு பாகையாக மாற்ற 60 பாகை வரும். ஆகையால் 26-வது வாக்கியத்தில் 60 பாகைக்கு எதிரில் 67 என்ற எண் இருப்பதால் 3-வது பாவத்தின் திக்குப் பலம் 67 பங்கு ஆகும்.

## 35-வது வாக்கியம்—இஷ்ட கஷ்ட கணிதம்.

எண் என்று சொல்லப்படுவதற்கும், இலக்கம் என்று சொல்லப்படுவதற்கும், உள்ள வித்தியாசத்தை முதலில் இங்கு அறிய வேண்டியதாயிருக்கின்றது. 7 என்பது ஒரு எண் ஆகும். 78 என்பது ஒரு எண் ஆகும். 789 என்பது ஒரு எண் ஆகும். மேலும் 78 என்ற எண் 7-ம், 8-ம் சேர்ந்து உண்டாக்கப்பட்டது. இந்த 78-ல் உள்ள 8-க்கு முதல் இலக்கம் என்றும் 7-க்கு இரண்டாவது இலக்கம் என்றும் சொல்லப்படும். ஆகையால் 78 என்ற எண்ணில் இரண்டு இலக்கங்கள் இருக்கின்றன. ஆகையால் 78 என்ற எண் இரண்டு இலக்கங்களால் ஏற்பட்டது. இவ்விதமாகவே 789 என்ற எண் மூன்று இலக்கங்களால் ஏற்பட்டது. மேலே கொடுத்துள்ள 7 என்ற எண் ஒரே இலக்கத்தால் உண்டாக்கப்பட்டது ஆகும் ஆகையால் எண் என்பது இலக்கங்களால் உண்டாக்கப்பட்டது என்பதாகும் இலக்கம் என்பது எண்களை உண்டாக்கும் மூலகருவி ஆகும். ஒரு எண்ணை அதே எண்ணுல் பெருக்க வரும் தொகைக்கு வர்க்கம் என்று பெயர். உதாரணமாக 8-யை 8-ஆல் பெருக்க வருகின்ற 64-யை வர்க்கம் என்று சொல்ல வேண்டும். அதாவது 64 என்பது 8 என்பதின் வர்க்கம் என்று சொல்லப்படும். மேலும் 8 என்பது 64-ன் மூலம் என்று சொல்லப்படும். அதாவது எந்த எண்ணை அதே எண்ணுல் பெருக்க

வர்க்கம் வருமோ அந்த எண்ணிற்கு மூலம் என்று பெயர். உதாரணமாக 10-யை 10-ஆல் பெருக்க 100 வரும். ஆகையால் 10-க்கு வர்க்கம் 100-ம், 100-க்கு மூலம் 10-ம் ஆகும். மேலும் 25-யை 25-ஆல் பெருக்க 625 வரும். ஆகையால் 25-க்கு வர்க்கம் 625 ம் 625-க்கு மூலம் 25-ம் ஆகும் இவ்விதமாக 2-க்கு வர்க்கம் 4-ம், 4-க்கு வர்க்கம் 16-ம், 6-க்கு வர்க்கம் 36-ம் ஆகும். 9-க்கு மூலம் 3-ம், 25-க்கு மூலம் 5-ம், 49-க்கு மூலம் 7-ம், 81-க்கு மூலம் 9-ம் ஆகும். இவைகள் சிறிய எண்களாயிருப்பதால் இவைகளைக் கஷ்டப்பட்டு கணிக்காமலே மனக்கணக்கினாலேயே போட்டுவிடலாம். எண்கள் பெரிய எண்களாயிருக்கும்போது கணிக்கவேண்டியது அவசியமாக நேரிடும்.

உதாரணம் (1) :—345-க்கு வர்க்கம் கணிக்க :—ஒரு எண்ணிற்கு அந்த எண்ணை அதே எண்ணால் பெருக்க வருந் தொகைதான் வர்க்கம் என்று முன்னமே சொல்லியிருக்கின்றது. ஆகையால் 345-யை 345-ஆல் பெருக்க 1,19,025 வரும். ஆகையால் 1,19,025 என்பது 345-க்கு வர்க்கமாகும்.

உதாரணம் (2) 706-க்கு வர்க்கம் கணிக்க :—மேலே சொல்லிய பிரகாரம் 706-யை 706-ஆல் பெருக்க வருகின்ற 4,98,436 என்பது 706-க்கு வர்க்கமாகும்.

இவ்விதமாக நமக்குத் தேவையான எண்களுக்கு வர்க்கம் கணிக்கவேண்டியது.

உதாரணம் (3) :—5,19,841-க்கு மூலம் கணிக்க:—அதாவது எந்த எண்ணை அதே எண்ணால் பெருக்க 5,19,841 வரும் என்பதை அறியவேண்டியது. இதை அறிவதற்கு முதல் முதல் வர்க்கமாகிய 5,19,841-யை வலது பக்கமாகவிருந்து இடதுகை பக்கமாக இரண்டு இரண்டு இலக்கங்களையுடைய அணி அணியாகப் பிரித்து அப்படிப் பிரித்ததற்கு அடையாளமாக அணிகளுக்கு இடையில் எழுதவேண்டியது. இப்படி அணி அணியாகப் பிரித்து எழுத கீழே கண்டபடி 3 அணிகள் வரும்.

இடதுகைபக்கம் 51, 98, 41 வலதுகைபக்கம்
(3) (2) (1)

41 என்பது ஒராவது அணி, 98 என்பது இரண்டாவது அணி 51 என்பது 3-வது அல்லது கடைசி அணியாகும்.

குறிப்பு:—கடைசி அணி தவிர மற்ற அணிகளில் இரண்டு இலக்கங்கள் எப்போதும் இருக்கவேண்டும். கடைசி அணியில் மாத்திரம் இரண்டு இலக்கங்களும் அல்லது ஒரு இலக்கமும் இருக்கலாம். இங்கு கொடுத்த உதாரணத்தில் கடைசி அணியாகிய 3-வது அணியில் அதாவது 51 என்றதில் இரண்டு இலக்கங்களாகிய 5, 1, என்ற இலக்கங்கள் இருக்கின்றன. பிறகு வகுத்தல் செய்யும்போது எழுதிக்கொள்வதுபோல அடியிற்கண்டபடி எழுதி வகுத்தல் செய்யவும்.

| | | |
|---|---|---|
| 1-வது வகுக்கும் எண் ஸ்தானம் | 1-வது வகுக்கப்படும் எண் ஸ்தானம்<br>51, 98, 41<br>49<br>——— | 7 (1)-வது ஈவு ஸ்தானம். |
| 2-வது வகுக்கும் எண் ஸ்தானம்<br>14, 2 | 2-வது வகுக்கப்படும் எண் ஸ்தானம்.<br>2,98<br>2,84<br>——— | 2 (2)-வது ஈவு ஸ்தானம், |
| 3-வது வகுக்கும் எண் ஸ்தானம்<br>1,441 | 3-வது வகுக்கப்படும் எண் ஸ்தானம்<br>14,41<br>14 41<br>———<br>0 | 1 (3)-வது ஈவு ஸ்தானம்: |

(N. B.) இந்த வழிக்கு இங்கிலீஷில் Square root கண்டு பிடிக்கும் Method என்று பெயர்.

பிறகு வகுத்தல் செய்யும் விதம் :—கடைசி அணியாகிய 51 என்பது எந்த முழுமூல எண்ணிற்கு வர்க்கமாகும் என்பதை மனதில் மனக்கணக்காகப் பார்க்கவேண்டியது. 7 என்ற மூல எண்ணிற்கு வர்க்கம் 49-ம், 8 என்ற மூல எண்ணிற்கு வர்க்கம் 64-ம் ஆவதாலும், 51 என்பது 49-க்கும், 64-க்கும் இடையில் இருப்பதால் 51 என்ற வர்க்கத்திற்குச் சரியான முழுமூல எண் கிடையாது. ஆகையால் 51-க்கு உடனே தாழ்ந்தவர்க்கமாகிய 49-க்கு உரிய மூலமாகிய 7-யை 1-வது ஈவுஸ்தானத்தில் எழுத வேண்டியது. பிறகு இந்த 7-க்கு வர்க்கமாகிய 49 யை 51-ன்

கீழ் எழுதி 51-ல் இருந்து 49-யைக் கழிக்கவேண்டியது. இப்படிக் கழிக்க மிச்சம் 2 வரும். இந்த 2-க்கு அடுத்தாற்போல் 51-க்கு அடுத்த அணியாகிய 98 என்ற அணியை எடுத்து எழுதவும். இப்படி எடுத்து எழுத மிச்சஸ்தானத்தில் 2,98 வரும். பிறகு இந்த 298-யை மறுபடியும் வகுக்கவேண்டும். வகுப்பதற்கு வகுக்கும் எண் தேவையானதால் இந்த வகுக்கும் எண்ணைப் பின்வருமாறு கணிக்கவும். 1-வது ஈவுஸ்தானத்தில் வந்த 7-யை 2-ஆல் பெருக்க வருகின்ற 14-யை 2-வது வகுக்கும் எண் ஸ்தானத்தில் எழுதவும். பிறகு 2,98-ல் முதல் லக்கமாகிய 8-யை விட்டுவிட நிற்கின்ற 29-யை 2-வது வகுக்கும் எண் ஸ்தானத்தில் வந்த எண்ணாகிய 14-ஆல் மனதில் வகுக்க ஈவு எவ்வளவு வரும் என்பதை மனக்கணக்காகப் பார்க்கவேண்டியது. இப்படி மனக்கணக்காக 29-யை 14-ஆல் வகுக்க ஈவு 2 வரும். இந்த ஈவாகிய 2-யை 2-வது ஈவு ஸ்தானத்தில் எழுதவேண்டியது. மறுபடியும் அதே 2-யை 2-வது வகுக்கும் எண் ஸ்தானத்தில் 14-க்கு அருகில் எழுதவும். இப்படி எழுத 2-வது வகுக்கும் எண் ஸ்தானத்தில் வருகின்ற 142 தான் வகுக்கும் எண் ஆகும். பிறகு 142-யை 2-வது ஈவு ஸ்தானத்தில் எழுதிவைத்த 2-ஆல்பெருக்க வருகின்ற 284-யை 298-ன் கீழ் எழுதி 298-ல் இருந்து 284-யைக் கழிக்கவேண்டியது. இப்படிக் கழிக்க மிச்சம் 14 வரும், இந்த 14 இரண்டாவது மிச்சமாகும்.

(குறிப்பு:—2-வது ஈவு ஸ்தானத்தில் கணித்து எழுதப்பட்ட எண்ணால் 2-வது வகுக்கும் எண் ஸ்தானத்திலுள்ள எண்ணைப் பெருக்க வருகின்ற எண், 2-வது வகுக்கப்படும் எண் ஸ்தானத்திலுள்ள எண்ணைவிட பெரியதானால் 2-வது ஈவு ஸ்தானத்தில் வந்த எண்ணில் 1 குறைக்க வருகின்ற எண்ணை 2-வது ஈவாக 2-வது ஈவு ஸ்தானத்திலும் 2-வது வகுக்கப்படும் எண் ஸ்தானத்தில் 14-க்கு அடுத்தாற்போல் எழுதவேண்டும்.)

பிறகு 2-வது மிச்சமாகிய 14-க்கு அருகில் அடுத்த அணியாகிய 41 என்ற அணியை எடுத்து எழுதவும். இப்படி எடுத்து எழுத மிச்ச ஸ்தானத்தில் 14, 41 வரும். பிறகு இந்த 1,441-யை வகுக்கவேண்டும். வகுப்பதற்கு முன்னே 298-யை வகுப்பதற்குச் செய்தது போலவே செய்யவேண்டியது. அதாவது, இதுவரையிலும் வந்த இரண்டு ஈவுகளாகிய 7-யையும் 2-யையும் ஒன்றன் பின் ஒன்றாய் வரிசையாக ஒரே வரிசையில் எழுத 72 வரும்.

இந்த 72-யை முன்போலவே 2-ஆல் பெருக்க வருகின்ற 144-யை 3-வது வகுக்கும் எண் ஸ்தானத்தில் எழுதவும் பிறகு 1,441-ல் முதல் இலக்கமாகிய 1-யை விட்டுவிட நிற்கின்ற 144-யை மேலே வந்த 144-ஆல் மனதில் வகுக்க ஈவு எவ்வளவு வரும் என்பதை மனக்கணக்காகப் பார்க்கவேண்டியது. இப்படி மனக்கணக்காக 144-யை 144-ல் வகுக்க ஈவு 1 வரும் இந்த ஈவாகிய 1-யை 3-வது ஈவு ஸ்தானத்தில் எழுதவேண்டியது. மறுபடியும் அதே 1-யை 3-வது வகுக்கும் எண் ஸ்தானத்தில் 144-க்கு 1 அருகில் எழுத 3-வது வகுக்கும் எண் ஸ்தானத்தில் வருகின்ற 1,441 தான் வகுக்கும் எண் ஆகும். பிறகு 1441-யை 3-வது ஈவு ஸ்தானத்தில் எழுதிவைத்த 1-ஆல் பெருக்க வருகின்ற 1,441-யை 3-வது வகுக்கப்படும் ஸ்தானத்திலுள்ள வகுக்கப்படும் எண்ணுகிய 1,441-ல் இருந்து கழிக்கவும். இப்படிக் கழிக்க மிச்சம் பூஜ்ஜியமாகும். * நாம் எடுத்துக்கொண்ட எண்ணுகிய 5,19,841-ல் உள்ள எல்லா அணிகளேயும் உபயோகப்படுத்தி விட்டபடியால் இனிமேல் வகுத்தல் செய்யவேண்டிய அவசியமில்லை. அதாவது கடைசி அணியைச்சேர்த்து எப்போது வகுத்தல் செய்கிறுமோ அந்த வகுத்தலே கடைசி வகுத்தல் என்றும் அதற்குமேல் இன்னம் வகுத்தல் செய்யவேண்டிய அவசியமில்லை என்று அறியவும். பிறகு மூன்று தடவை வகுத்தல் செய்வதால் வந்த மூன்று ஈவுகளாகிய 7, 2, 1 என்ற எண்களை ஒன்லன்பின் ஒன்ருக வரிசையாக ஒரே வரியில் எழுதவேண்டியது. இப்படி எழுத 721 வரும். இந்த 721 தான் நாம் எடுத்துக்கொண்ட வர்க்கமாகிய 5,19,841-க்குமூலம் ஆகும். இவ்விதமாக நமக்குத்தேவையானதொகைக்கு மூலம் கணிக்கவேண்டியது.

குறிப்பு :—ஒரு எண்ணில் 1-வது, 2-வது, 3-வது, 4-வது இலக்கம் அறியவேண்டுமாளுல் வலது கை பக்கமாகயிருந்து இடதுகை பக்கமாக இலக்கங்களை எண்ணவேண்டியது. உதாரணமாக 5,678-ல் 8 என்பது முதல் அல்லது 1-வது இலக்கமாகும். 7 என்பது 2-வது லக்கமாகும். 6 என்பது 3-வது லக்கமாகும். 5 என்பது 4-வது அல்லது கடைசி லக்கமாகும்.

* கடைசியாக வருகின்ற மிச்சம் பூஜ்ஜியமாக இல்லாமல் ஏதோ ஒரு எண்ணுக வந்தால், அந்த எண் கடைசி வகுக்கும் எண்ணினுடைய பாதிக்கு மேற்பட்டால் கடைசியாக வந்த

ஈவுடன் ஒன்று கூட்டவும். பாதிக்குக் குறைந்து இருந்தால் கடைசியாக வந்த ஈவுடன் ஒன்று கூட்டவேண்டியதில்லை.

உதாரணம் (4):—69964-க்கு மூலம் கணிக்க:—

69964-யை அணி அணியாகப் பிரித்து எழுத மூன்று அணிகள் பின்வருமாறு வரும்.

6, 99, 64
(2) (2) (1)

இங்கு 3-வது அணி ஒரு இலக்கம் உடையது என்பதை கவனிக்கவும். பிறகு பின்வருமாறு வகுக்கவேண்டியது.

)6, 99, 64, (2
4
46) 2, 99 (6
2.76
524) 23, 64 (4
20 96
268

கடைசி மிச்சமாகிய 268 என்பது கடைசி வகுக்கும் எண்ணாகிய 524-ன் பாதிக்கு மேற்பட்டிருப்பதால் கடைசியாக வந்த ஈவாகிய 4 உடன் 1 சேர்க்க 5 வரும். ஆகையால் கடைசி ஈவு 5 என்று வைத்துக்கொள்ளவும். இப்படியாக வைத்துக்கொண்டு மூன்று ஈவுகளாகிய 2, 6, 5-யை வரிசையாக எழுத வருகின்ற 265 என்ற எண் தான் 69964-க்கு மூலம் ஆகும்.

உதாரணம் (5) :—502682-க்கு மூலம் கணிக்க:—

) 50, 26, 81 (7
49
140 ) 1, 26 ( 0
0 00
1409 ) 126, 81 (9
126 81

இங்கு இரண்டாவது வகுக்கப்படும் எண் ஸ்தானத்திலுள்ள 126-ன் முதல் இலக்கமாகிய 6-யை விட்டுவிட 12 வரும். இந்த 12யை 14-ஆல் வகுக்க முடியாது. ஆதலால் பூஜ்ஜியம் இரண்டாவது ஈவு ஸ்தானத்தில் போடப்பட்டது. அதாவது 12-யை

14 என்ற எண் பூஜ்ஜியம் தடவை வகுக்கும் என்பதாம். எந்த எண்ணையும் பூஜ்ஜியத்தால் பெருக்க எப்போதும் பூஜ்ஜியம் வருமாதலால் 140யை 0த்தால் பெருக்க பூஜ்ஜியம் வரும். மூன்று ஈவுகளாகிய 7, 0. 9யை வரிசையாக எழுத வருகின்ற 709 தான் 502681-க்கு மூலம் ஆகும்.

குறிப்பு :—மேலே சொல்லி வந்த வர்க்கம், மூலம் இவைகளைக் கணிக்கும் கணிதத்திற்கு வர்க்க மூலகணிதம் என்று பெயர். இந்த கணிதத்தைப் பள்ளிக்கூடங்களில் பிள்ளைகளுக்கு 6-வது 7-வது வகுப்புகளிலேயே கற்றுக்கொடுப்பதால் இந்த கணிதத்தை கையாளும்போது ஏதாகிலும் சந்தேகம் நேரிட்டால் மேலே சொல்லிய வகுப்புகளிலும் அதற்குமேற்பட்ட வகுப்புகளிலும் வாசித்தவர்களின் உதவியால் அந்த சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொள்ள வேண்டியது. மேலும் அநேக வர்க்க எண்களுக்கு மூலம் கணிக்கவேண்டியது அவசியமாய் இருக்கும்போது மேலே சொல்லிய விதத்தால் ஒவ்வொரு தடவையும் வர்க்கம் கணிப்பது மிகவும் சிரமமாய் இருக்கும். இந்த சிரமத்தை நீக்கும்பொருட்டு வர்க்க மூலங்கள் அடங்கிய ஒரு வர்க்க மூல புத்தகம் போடப்பட்டிருக்கின்றது. இந்த புத்தகத்தில் 1 முதல் 2475 வரையிலுமுள்ள எல்லா எண்களுக்கு வர்க்கமும், 1 முதல் 6,125,625 வரையிலுமுள்ள எண்களுக்கு மூலமும், கணித்து போடப்பட்டிருக்கின்றது. இந்த புஸ்தகத்தின் பெயர் தமிழில் போடாமல் இங்கிலீஷில் போடப்பட்டிருக்கின்றது. இங்கிலீஷில் அதன் பெயர் "Extracts of the Pocket Book on Chain Survey Tables and Formulae" அதாவது "எக்ஸ்ட்ராக்ட்ஸ் ஆப் தி பாக்கெட் புக் ஆன் செயின் சர்வே டேபில்ஸ் அண்டு பார்முலி" என்பதாம். இந்த புத்தகத்தின் பெயர்மாத்திரம் இங்கிலீஷில் இருந்தபோதிலும் அதில் அடங்கியுள்ள சங்கதிகள் யாவும் தமிழில் போட்டிருப்பதால் இங்கிலீஷ் கொஞ்சங்கூட தெரியாதவர்கள் கூட இந்த புத்தகத்தை வெகு சுலபமாக உபயோகப்படுத்தலாம். இந்த புத்தகத்தின் விலை ஒரு அணு தான். இது ஒவ்வொரு தாலுக்கா ஆபீசிலும் விற்கப்படும். அது கிராம உத்தியோகஸ்தராகிய கிராம சர்க்கார் கணக்கப்பிள்ளையிடத்திலு மிருக்கும். மற்றவிடத்தில் கிடைப்பது அரிது. இதன் விலை சுவல்பத் தொகையாகிய ஒரு அணு வாதலாலும் இது மிகவும் உபயோகமான புத்தகமானதாலும் ஒரு அணு செலவுசெய்து இந்த புத்தகத்தை வாங்குவதால் அதிக சிரமம் நீங்கும் என்று அறியவேண்

டியது. இந்த புத்தகத்தை வாங்காதவர்கள் மேலே சொல்லிய வழியால்தான் மூலம் கணிக்கவேண்டுமே தவிர வேறொருவழியும் இடையாது என்று அறியவும். இந்த வர்க்கமூல புத்தகத்தில் 7-வது பக்கத்தில் மூலம் என்ற கலத்தில் 301-க்கு எதிரில் வர்க்கம் என்ற கலத்தில் 90601 போட்டிருக்கின்றது. அதாவது 301-க்கு வர்க்கம் 90601 என்றும், 90601-க்கு மூலம் 301 என்றும் ஏற்படும். இவ்விதமாகவே இந்த புத்தகத்தில் கொடுத்துள்ள மற்றவைகளையும் அறியவும்.

நாம் இனிமேல் இஷ்டபலம் என்ற சுபபலத்தையும் கஷ்டபலம் என்கிற அசுபபலத்தையுங் கணிக்கவேண்டியது அவசியமானதாலும், இவைகளைக் கணிப்பதற்கு மூலம் கணிக்கவேண்டிய வழியைத் தெரிந்துகொண்டிருக்க வேண்டியது அவசியமானதாலும் மேலே மூலம் கணிக்கும் வழியைச் சொல்லியிருக்கிறோம்.

இஷ்டபலம் கணிக்க :—ஒவ்வொரு கிரகத்தினுடைய உச்சபலத்தை அதே கிரகத்தினுடைய ஜேஷ்டாபலத்தினால் பெருக்க வருகின்ற எண்ணினுடைய மூலம் அந்த கிரகத்தின் இஷ்டபலம் ஆகும். உதாரணமாகச் சூரியனுக்கு உச்சபலம் 13 என்றும் சூரியனுக்கு ஜேஷ்டாபலம் 42 என்றும் வைத்துக்கொண்டால் சூரியனுடைய இஷ்டபலத்தைக் கணிப்போம். உச்சபலமாகிய 13-யை ஜேஷ்டாபலமாகிய 42-ஆல் பெருக்க 546 வரும். இந்த 546-க்கு மேலே சொல்லிய மூலம் என்பதைக் கணிக்கும் வழி பிரகாரம் கணிக்க மூலம் 23 வரும் (அல்லது மேலே சொல்லிய புத்தகத்தில் வர்க்கம் என்ற கலத்திலுள்ள எண்களில் எந்த எண் 546-க்கு நெருங்கி யிருக்கின்றதோ அந்த எண்ணிற்கு எதிரில் மூலம் என்ற கலத்திலுள்ள எண்ணே 546-க்கு வர்க்கம் ஆகும். இப்படிப் பார்க்க மூலம் 23வரும்.) இந்த 23 தான் சூரியனுடைய இஷ்டபலம் ஆகும். இவ்விதமாகவே ஒவ்வொரு கிரகத்தினுடைய இஷ்டபலத்தைக் கணிக்கவேண்டியது.

கஷ்டபலம் கணிக்க:—ஒவ்வொரு கிரகத்தினுடைய உச்சபலத்தை 100-ல் இருந்து கழிக்க வருகின்ற எண்ணை அதேகிரகத்தினுடைய ஜேஷடாபலத்தை 100-ல் இருந்து கழிக்க வருகின்ற எண்ணால் பெருக்க வருகின்ற எண்ணினுடைய மூலம் அந்த கிரகத்தின் கஷடபலம் ஆகும். உதாரணமாகச் சூரியனுக்கு உச்சபலம் 13 என்றும், சூரியனுக்கு சேஷ்டா பலம் 42 என்றும்

வைத்துக்கொண்டு சூரியனுடைய கஷ்டபலத்தைக் கணிப்போம். 100-ல் இருந்து உச்சபலமாகிய 13-யைக் கழிக்க 87 வரும். சேஷ்டாபலமாகிய 42-யை 100-ல் இருந்து கழிக்க 58 வரும். இந்த 87-யை 58-ஆல் பெருக்க 5046 வரும். இந்த 5046-க்கு மூலம் கணிக்க 71 வரும். இந்த மூலமாகிய 71 தான் சூரியனுடைய கஷ்டபலம் ஆகும். இவ்விதமாகவே ஒவ்வொரு கிரகத்தினுடைய கஷ்டபலத்தைக் கணிக்கவேண்டியது.

## 36-வது வாக்கியம்—இஷ்ட கஷ்ட சட்பலம்.

(1)-வது அயிட்டம்—இஷ்ட சட்பலம் கணிக்க:—ஒரு கிரகத்திற்கு வந்த சட்பலத்தை அதே கிரகத்திற்கு வந்த இஷ்டபலத்தால் பெருக்க வருகின்ற எண்ணிலுள்ள இலக்கங்களில் முதல் இரண்டு இலக்கங்களைத் தள்ளிவிட நிற்கின்றது இஷ்ட சட்பலமாகும்

* குறிப்பு :—(1) ஒரு எண்ணிலுள்ள இலக்கங்களை எண்ண வேண்டுமானால் முன்னே 35-வது வாக்கியத்தில் குறிப்பில் சொன்ன பிரகாரம் வலதுகை பக்கமிருந்து இடதுகை பக்கமாக எண்ணவேண்டும்.

குறிப்பு :—(2) சட்பலத்தையும் இஷ்ட பலத்தையும் பெருக்கி வந்த தொகையில் இரண்டிற்கு மேற்பட்ட இலக்கங்கள் இருந்தால் தள்ளிவிடப்பட்ட இரண்டு இலக்கங்களின் தொகை 50-ம் 50-க்கு மேற்பட்டால் மூன்றுவது இலக்கத்துடன் 1 கூட்டவும். உதாரணமாக பெருக்கிவந்த தொகை 76854 ஆக வந்தால், முதல் இரண்டு இலக்கங்களாகிய 4-யையும், 5-யையும் தள்ளிவிடவும். இப்படித் தள்ளிவிடப்பட்ட முதல் இரண்டு இலக்கங்களின் தொகையாகிய 54 என்பது 50-க்கு மேற்பட்டதால் மூன்றுவது இலக்கமாகிய 8 உடன் ஒன்று சேர்க்க மூன்றுவது இலக்கம் 9 ஆக மாறும். ஆகையால் பிறகு நின்ற இலக்கங்களின் தொகையாகிய 769 தான் இஷ்ட சட்பலமாகும்.

குறிப்பு :—(3) சட்பலத்தையும் இஷ்டபலத்தையும் பெருக்க வந்த எண்ணில் ஒரே ஒரு இலக்கம் இருந்தால் இஷ்டசட்பலம் பூஜ்ஜியம் என்று வைத்துக்கொள்ளவும்.

குறிப்பு :—(4) சட்பலத்தையும் இஷ்டபலத்தையும் பெருக்க வந்த எண்ணில் இரண்டு இலக்கங்கள் மாத்திரம் இருந்து பெருக்கி

வந்த எண் 50-ம் 50-க்கு மேற்பட்டால் இஷ்டசட்பலம் ஒன்று என்றும் 50-க்குக் குறைந்தால் இஷ்டசட்பலம் பூஜ்ஜியம் என்றும் வைத்துக்கொள்ளவும்.

உதாரணம் :—சூரியனுக்குச் சட்பலம் 615 என்றும், சூரியனுக்கு இஷ்டபலம் 23 என்றும் வைத்துக்கொள்வோம். சட்பலமாகிய 615-யை இஷ்டபலமாகிய 23 ஆல் பெருக்க 14145 வரும். முதல் இரண்டு இலக்கங்களாகிய 5-யையும், 4-யையும் தள்ளிவிட 141 நிற்கும். தள்ளிவிடப்பட்ட முதல் இரண்டு இலக்கங்களின் தொகையாகிய 45 என்பது 50-க்குட்பட்டதால் மூன்றுவது இலக்கத்துடன் ஒன்றும் சேர்க்கவேண்டியதில்லை. ஆகையால் இந்த 141-தான் சூரியனுடைய இஷ்ட சட்பலமாகும்.

(2)-வது அயிட்டம்—கஷ்ட சட்பலம் கணிக்க:—ஒரு கிரகத்திற்கு வந்த சட்பலத்தை அதே கிரகத்திற்கு வந்த கஷ்டபலத்தால் பெருக்க வருகின்ற எண்ணிலுள்ள இலக்கங்களில் முதல் இரண்டு இலக்கங்களைத் தள்ளிவிட நிற்கின்றது கஷ்ட சட்பலமாகும்.

* குறிப்பு:—இந்த வாக்கியத்தில் 1-வது அயிட்டத்தின் 1, 2-வன, 3-வது, 4-வது குறிப்புக்களில் இஷ்டபலம் என்பது எவ்விடத்தில் வந்தபோதிலும் அதற்குப் பதிலாகக் கஷ்டபலம் என்பதை வைத்து வாசித்து இந்த குறிப்புகளின் பிரகாரம் கிரிகை செய்யவும். 1-வது குறிப்பும் கஷ்ட சட்பல கணிதத்திற்குப் பொருந்தும்.

உதாரணம்:—சூரியனுக்குச் சட்பலம் 615 என்றும், சூரியனுக்கு கஷ்டபலம் 71 என்றும் வைத்துக்கொள்வோம். சட்பலமாகிய 615-யைக் கஷ்டபலமாகிய 71-ஆல் பெருக்க 43,665 வரும். முதல் இரண்டு இலக்கங்களாகிய 5-யையும் 6-யையும் தள்ளிவிட 436 நிற்கும். தள்ளிவிடப்பட்ட முதல் இரண்டு இலக்கங்களின் தொகையாகிய 65 என்பது 50-க்கு மேற்பட்டதால் மூன்றுவது இலக்கத்துடன் ஒன்று சேர்க்க வேண்டியது. அப்படிச் சேர்ப்பதால் முன்னே நின்ற 433 என்பது 434 ஆகும். ஆகையால் இந்த 434 தான் சூரியனுடைய கஷ்ட சட்பலமாகும்.

37-வது வாக்கியம்—இஷ்ட கஷ்ட கிரக திருக்பலம்.

1-வது அயிட்டம்:—இஷ்ட திருக்பலம் கணிக்க:--ஒரு கிரகம் மற்ற கிரகங்களைப் பார்க்கும் பார்வையின் அளவுகளை அ

கிரகத்தின் இஷ்டபலத்தால் பெருக்க * அந்த கிரகம் மற்ற கிரகங்களைப் பார்க்கும் இஷ்ட திருக்பலம் என்ற சுபபலம் வரும்.

* குறிப்பு :—பெருக்க வரும் எண்ணிலுள்ள இலக்கங்களில் முதல் இரண்டு இலக்கங்களை 36-வது வாக்கியத்தில் 1-வது அயிட்டத்தின் கீழ் குறிப்புகளில் சொல்லிய பிரகாரம் தள்ளிவிட நின்றது இஷ்ட கிரக திருக்பலம் ஆகும்.

உதாரணம்:—சூரியன், குருவை 66 பங்கு பார்வையுடனும், சுக்கிரனை 7 பங்கு பார்வையுடனும், செவ்வாயை 7 பங்கு பார்வையுடனும், சனியை 30 பங்கு பார்வையுடனும் பார்ப்பதாக வைத்துக்கொள்வோம். (8-வது கட்டம் பார்க்கவும்.) சூரியனுடைய இஷ்டபலம் 23 என்று வைத்துக்கொள்வோம். (1) 66-யை 23-ஆல் பெருக்க 1,518 வரும். இந்த 1,518-ல் முதல் இரண்டு இலக்கங்களைத் தள்ளிவிட 15 நிற்கும். தள்ளிவிட்ட இலக்கங்களின் தொகையாகிய 18 என்பது 50-க்குட்பட்டதால் நின்ற எண்ணாகிய 15 உடன் ஒன்று கூட்டவேண்டிய அவசியமில்லை. ஆகையால் 15 தான் சூரியன் குருவைப் பார்க்கும் பார்வையின் சுபபலம் என்ற இஷ்ட திருக்பலமாகும். (2) 7-யை 23-ஆல் பெருக்க 161 வரும். இந்த 161-ல் இரண்டு இலக்கம் தள்ளிவிட 1 நிற்கும். தள்ளிவிட்ட இலக்கங்களின் தொகையாகிய 61 என்பது 50-க்கு மேற்பட்டதால் நின்ற எண்ணாகிய 1 உடன் 1 கூட்ட 2 வரும். இந்த 2 தான் சூரியன் சுக்கிரனைப் பார்க்கும் இஷ்ட திருக்பலம், (3) இவ்விதமாகவே கணிக்க சூரியன் செவ்வாயை இஷ்ட திருக்பலம் 2 பங்குடன் பார்க்கும். (4) இவ்விதமாகவே கணிக்க சூரியன் சனியை இஷ்ட திருக்பலம் 7 பங்குடன் பார்க்கும். சூரியனுக்குச் சொல்லியது போலவே மற்ற கிரகங்கள் பார்க்கும் இஷ்ட திருக்பலம் கணிக்கவும்.

2-வது அயிட்டம்:—கஷ்ட திருக்பலம் கணிக்க:--ஒரு கிரகம் மற்ற கிரகங்களைப் பார்க்கும் பார்வையின் அளவுகளை அந்த கிரகத்தின் கஷ்ட பலத்தால் பெருக்க * அந்த கிரகம் மற்ற கிரகங்களைப் பார்க்கும் கஷ்ட திருக்பலம் என்ற அசுப பலம் வரும்.

* குறிப்பு:—பெருக்க வரும் எண்ணிலுள்ள இலக்கங்களில் முதல் இரண்டு இலக்கங்களை 36-வது வாக்கியத்தில் 1-வது அயிட்டத்தின் கீழ் குறிப்புகளில் சொல்லிய பிரகாரம் தள்ளிவிட நின்றது கஷ்ட திருக்பலம் ஆகும்.

உதாரணம்:—சூரியன் குருவை 66 பங்கு பார்வையுடனும் சுக்கிரனை 7 பங்கு பார்வையுடனும், செவ்வாயை 7 பங்கு பார்வையுடனும், சனியை 30 பங்கு பார்வையுடனும் பார்ப்பதாக வைத்துக்கொள்வோம். சூரியனுடைய கஷ்டபலம் 71 என்று வைத்துக்கொள்வோம். (1) 66-யை 71-ஆல் பெருக்க 4,686 வரும். இந்த 4,4686-ல் முதல் இரண்டு இலக்கங்களைத் தள்ளிவிட 46 நிற்கும். தள்ளிவிட்ட இலக்கங்களின் தொகையாகிய 86 என்பது 50-க்கு மேற்பட்டதால் நின்ற எண்ணாகிய 46 உடன் 1 கூட்ட நின்ற எண் 47 ஆக மாறும். ஆகையால் 47 தான் சூரியன் குருவைப் பார்க்கும் பார்வையின் அசுபபலம் என்ற கஷ்ட திருக்பலமாகும். (2) 7-யை 71-ஆல் பெருக்க 497 வரும். இந்த 497-ல் இரண்டு இலக்கம் தள்ளிவிட 4 நிற்கும். தள்ளிவிட்ட இலக்கங்களின் தொகையாகிய 97 என்பது 50-க்கு மேற்பட்டதால் நின்ற எண்ணாகிய 4 உடன் 1 கூட்ட 5 வரும். இந்த 5 தான் சூரியன் சுக்கிரனைப் பார்க்கும் கஷ்ட திருக்பலமாகும். (3) இவ்விதமாகவே கணிக்க சூரியன் செவ்வாயைக் கஷ்ட திருக்பலம் 5 பங்குடன் பார்க்கும். (4) இவ்விதமாகவே சூரியன் சனியை கஷ்ட திருக்பலம் 21 பங்குடன் பார்க்கும். சூரியனுக்குச் சொல்லியது போலவே மற்ற கிரகங்கள் பார்க்கும் கஷ்ட திருக்பலம் கணிக்கவும்.

## 38-வதுவாக்கியம்—இஷ்ட கஷ்ட சப்த்தவர்கஜ பலம்.

சப்த்தவர்கஜ பலம் கணிக்கும் முறை 22-வது வாக்கியத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. சப்த்தவர்க்கஜ பலம் என்பது முன்னமே சொல்லிய பிரகாரம் 7 வித வர்க்க பலம் என்பது அவை (1) இராசி என்ற இராசிச் சக்கிர வர்க்கம், (2) நவாம்ச வர்க்கம், (3) திரேகாண வர்க்கம், (4) துவாதசாம்ச வர்க்கம், (5) ஹோரா வர்க்கம், (6) திரிம்சாம்ச வர்க்கம், (7) சப்த்தமாம்ச வர்க்கம் என ஏழுவகைப்படும். ஒவ்வொரு வர்க்கத்திற்கும் சுப பலம் என்ற இஷ்ட பலமும் அசுபபலம் என்ற கஷ்ட பலமும் உண்டு. இராசிச் சக்கிர வர்க்கத்துக்கு மாத்திரம் இஷ்டபலமும் கஷ்ட பலமும் ஒன்றாய்ச் சேர்க்க பலம் ஒரு ரூபம் அல்லது 100 பங்கு வரும். மற்ற ஆறு வர்க்கங்களுக்கும் தனித்தனியாய் இஷ்ட பலமும் கஷ்ட பலமும் ஒன்றாய்ச் சேர்க்க பலம் ½ ரூபம் அல்லது 50 பங்கு ஆகும். இதை நன்றாய்க் கவனிக்கவும்.

(1) இஷ்ட கஷ்ட இராசிவர்க்கம் கணிக்க:—முந்தி 22-வது வாக்கியத்தில் சொல்லிய விதி பிரகாரம் இராசிவர்க்கத்தைக் கணிக்க வருகின்ற பலமே இஷ்ட இராசி வர்க்க பலமாகும். இந்த இஷ்ட ராசி வர்க்கப் பலத்தை 100-ல் இருந்து கழிக்க வருவது கஷ்ட ராசி வர்க்க பலமாகும்.

உதாரணம் :—முந்தி 22-வது வாக்கியத்தில் சொல்லிய விதி பிரகாரம் இராசி வர்க்கம் கணிக்க இராசி வர்க்கப் பலம் சூரியனுக்கு 25-ம்; சந்திரனுக்கு 50-ம், செவ்வாயிற்கு 6-ம், புதனுக்கு 13-ம், குருவுக்கு 13-ம், சுக்கிரனுக்கு 50-ம், சனிக்கு 13-ம் வந்ததென்று வைத்துக்கொள்வோம். சூரியனுக்கு ராசிவர்க்கம் 25 ஆகையால் சூரியனுக்கு இஷ்ட ராசிவர்க்கம் 25 ஆகும். இந்த 25-யை 100-ல் இருந்து கழிக்க வருகின்ற 75 சூரியனுக்குக் கஷ்ட ராசிவர்க்கம் ஆகும். குருவுக்கு இராசி வர்க்கம் 13 ஆகையால், குருவுக்கு இஷ்ட ராசி வர்க்கம் 13 ஆகும். இந்த 13-யை 100-ல் இருந்து கழிக்க வருகின்ற 87 குருவுக்கு கஷ்ட ராசி வர்க்கம் ஆகும். இவ்விதமாகவே கணிக்க சந்திரனுக்கு இஷ்ட ராசி வர்க்கம் 50-ம் கஷ்டராசி வர்க்கம் 50-ம், செவ்வாயிற்கு இஷ்டராசி வர்க்கம் 6-ம், கஷ்டராசி வர்க்கம் 94-ம், புதனுக்கு இஷ்ட ராசிவர்க்கம் 13-ம், கஷ்டராசி வர்க்கம் 87-ம், சுக்கிரனுக்கு இஷ்டராசி வர்க்கம் 50-ம், கஷ்டராசி வர்க்கம் 50-ம், சனிக்கு இஷ்டராசி வர்க்கம் 13ம் கஷ்டராசி வர்க்கம் 87ம் ஆகும்.

(2) இஷ்ட கஷ்ட நவாம்ச வர்க்கம் முதலிய இதர ஆறுவித வர்க்கங்கள் கணிக்க :—முந்தி 22-வது வாக்கியத்தில் சொல்லிய பிரகாரம் நவாம்ச வர்க்கம், திரேகாண வர்க்கம் முதலிய (இராசி வர்க்கம் நீங்கலாயுள்ள) 6 வித வர்க்கங்களைக் கணிக்கவும். இப்படிக் கணித்துவரும் பலத்தில் பாதி பலந்தான் இஷ்ட வர்க்க பலம் ஆகும். இந்த இஷ்ட வர்க்க பலத்தை 50-ல் இருந்து கழிக்க வருவது கஷ்டவர்க்க பலமாகும்.

உதாரணம் :—முந்தி 22-வது வாக்கியத்தில் சொல்லிய விதி பிரகாரம் (இராசிவர்க்கம் நீங்கலாயுள்ள) நவாம்சை முதலிய ஆறு வர்க்கங் கணிக்கும்போது நவாம்சை வர்க்கத்தில் பலம் சூரியனுக்கு 25-ம், சந்திரனுக்கு 25-ம், செவ்வாயிற்கு 6-ம், புதனுக்கு

25-ம், குருவிற்கு 50-ம், சுக்கிரனுக்கு 50-ம், சனிக்கு 50-ம், வந்தது என்று வைத்துக்கொள்வோம். சூரியனுக்கு நவாம்ச வர்க்கம் 25. இந்த 25-ல் பாதியாகிய 12½ அல்லது 13 தான் சூரியனுக்கு இஷ்ட நவாம்ச வர்க்கம் ஆகும். இந்த 13-யை 50-ல் இருந்து கழிக்க வருகின்ற 37 தான் சூரியனுக்கு கஷ்ட நவாம்ச வர்க்கம் ஆகும். சந்திரனுக்கு நவாம்சை வர்க்கம் 25. இந்த 25-யைப் பாதியாக்க 12½ வரும். இந்த புத்தகம் முழுவதிலும் பாதியையும் பாதிக்கு மேற்பட்டதையும் ஒன்ருகப் பாவிப்பதால் அதே மாதிரி 12½யையும் பாவிக்க 12½ என்பது 13 ஆகும். இந்த 13 தான் அதாவது 25-ல் பாதியாகிய 13 தான் சந்திரனுக்கு இஷ்ட நவாம்ச வர்க்கம் ஆகும். இந்த 13-யை 50-ல் இருந்து கழிக்க வருகின்ற 37 தான் சந்திரனுக்கு கஷ்ட நவாம்ச வர்க்கம் ஆகும். இவ்விதமாகவே கணிக்க செவ்வாயிற்கு இஷ்ட நவாம்ச வர்க்கம் 3-ம், கஷ்ட நவாம்ச வர்க்கம் 47-ம், குரு, சுக்கிரன், சனி இவர்களுக்குத் தனித்தனியாய் இஷ்ட நவாம்ச வர்க்கம் 25-ம், கஷ்ட நவாம்சம் 25-ம் வரும். புதனுக்கு இஷ்ட நவாம்ச வர்க்கம் 13-ம் கஷ்ட நவாம்ச வர்க்கம் 37 வரும்.

மேலும் நவாம்சை வர்க்கத்திற்குக் கணித்துக் காட்டியது போலவே (இராசி வர்க்கம் நீங்கலாயுள்ள) மற்ற இதர 5 வர்க்கங்களுக்கும் அவைகளின் வர்க்க பலத்திலிருந்து அவைகளின் இஷ்ட கஷ்ட வர்க்கப்பலம் கணிக்க வேண்டியது.

### 39-வது வாக்கியம்—சுப அசுப பங்க்தீ கணிதம்.

சுப அசுப பங்க்தீ கணிக்க:—51-வது, 52-வது கட்டங்களைப் போல இரண்டு கட்டங்களைப் போட்டுக் கொள்ளவும். பிறகு ஒவ்வொரு கிரகத்திற்கும் கணித்து வந்த மொத்த இஷ்ட சப்த வர்க்க பலத்தை 4-ஆல் வகுக்க வருகின்றதை அந்தந்த கிரகத்தின் கீழ் இராசி வர்க்கத்திற்கு எதிரில் போடவேண்டியது. பிறகு மற்ற 6 வர்க்கங்களுக்கு எதிரில் இராசி வர்க்கத்திற்கு இங்கு சொல்லியபடி கணித்து வந்ததில் பாதியைப் போடவேண்டியது. இப்படிச் செய்ய சுப பங்க்தீ வரும்.

மறுபடியும் ஒவ்வொரு கிரகத்திற்கும் கணித்துவந்த மொத்த கஷ்ட சப்த வர்க்க பலத்தை 4-ஆல் வகுக்க வருகின்றதை அந்தந்த கிரகத்தின் கீழ் இராசி வர்க்கத்திற்கு எதிரில் போட

வேண்டியது. பிறகு மற்ற 5 வர்க்கங்களுக்கு எதிரில் இராசி வர்க்கத்திற்கு இங்கு சொல்லியபடி கணித்து வந்ததில் பாதியைப் போடவேண்டியது. இப்படிச் செய்ய அசுப பங்க்தீ வரும்.

உதாரணம் :—(1) உதாரணமாக ஒவ்வொரு கிரகத்திற்கும் கணித்து வந்த மொத்த இஷ்ட சப்த்த வர்கஜபலம் அடியிற் கண்டபடி என்று வைத்துக்கொள்வோம்.

| கிரகம் | சூ | சந் | செ | பு | குரு | சு | சனி. | |
|---|---|---|---|---|---|---|---|---|
| மொத்த இஷ்டசப்த்த வர்கஜ பலம் | 97 | 152 | 83 | 77 | 111 | 106 | 93 | (1) |
| இதை 4-ல் வகுக்க | 24 | 38 | 21 | 19 | 28 | 27 | 23 | வரும்(2) |
| ஆகையால் இராசி வர்க்க சுப பங்க்தீ | 24 | 38 | 21 | 19 | 28 | 27 | 23 | ஆகும்(3) |
| நவாம்சவர்க்க சுப பங்க்தீ | 12 | 19 | 11 | 10 | 14 | 14 | 12 | ஆகும்(4) |
| திரேகாண வர்க்க சுபபங்க்தீ | 12 | 19 | 11 | 10 | 14 | 14 | 12 | ஆகும்(5) |
| துவாதசாம்ச வர்க்க சுப பங்க்தீ | 12 | 19 | 11 | 10 | 14 | 14 | 12 | ஆகும்(6) |
| சப்தமாம்ச வர்க்க சுப பங்க்தி | 12 | 19 | 11 | 10 | 14 | 14 | 12 | ஆகும்(7) |
| ஓரா வர்க்க சுப பங்க்தீ | 12 | 19 | 11 | 10 | 14 | 14 | 12 | ஆகும்(8) |
| திரிம்சாம்ச வர்க்க சுப பங்க்தீ | 12 | 19 | 11 | 10 | 14 | 14 | 12 | ஆகும்(9) |

ஆகையால் சுபபங்க்தீ என்பது மேலே (2) முதல் (9) வரையிலும் கொடுத்துள்ளது போல ஆகும்.

குறிப்பு :—4-லும், 2-லும் வகுக்கும்போது ஈவு ½யும், ½க்கு மேற்பட்டும் வந்தால் ஒன்ருக பாவிக்கப்பட்டுள்ளது. (4) முதல் (9) வரையிலுமுள்ள எண்கள் (3) க்கு எதிரிலுள்ள எண்களின் பாதியாகும்.

உதாரணம் :—(2) உதாரணமாக ஒவ்வொரு கிரகத்திற்கும் கணித்து வந்த மொத்த கஷ்ட சப்த்த வர்க்கஜபலம் அடியிற் கண்டபடி என்று வைத்துக்கொள்வோம்.

| கிரகம் | சூ | சந் | செ | பு | குரு | சு | சனி | |
|---|---|---|---|---|---|---|---|---|
| மொத்தகஷ்ட சப்த வர்கஜ பலம் | 303 | 248 | 317 | 323 | 289 | 294 | 307 | ஆகும்(1) |
| இதை 4-ல் வகுக்க | 76 | 62 | 79 | 81 | 72 | 74 | 77 | ஆகும்(2) |
| ஆகையால் ராசிவர்க்க அசுபபங்கதீ | 76 | 62 | 79 | 81 | 72 | 74 | 77 | ஆகும்(3) |
| நவாம்ச வர்க்க அசுபபங்க்தீ | 38 | 31 | 40 | 41 | 36 | 37 | 39 | ஆகும்(4) |
| திரேகாண வர்க்க அசுபபங்க்தீ | 38 | 31 | 40 | 41 | 36 | 37 | 39 | ஆகும்(5) |
| துவாதசாம்ச வர்க்க அசுபபங்க்தீ | 38 | 31 | 40 | 41 | 36 | 37 | 39 | ஆகும்(6) |
| சப்த்தமாம்ச வர்க்க அசுபபங்க்தீ | 38 | 31 | 40 | 41 | 36 | 37 | 39 | ஆகும்(7) |
| ஓரா வர்க்க அசுபபங்க்தீ | 38 | 31 | 40 | 41 | 36 | 37 | 39 | ஆகும்(8) |
| திரிம்சாம்ச வர்க்க அசுபபங்க்தீ | 38 | 31 | 40 | 41 | 36 | 37 | 39 | ஆகும்(9) |

ஆகையால் அசுப பங்க்தீ என்பது மேலே (3) முதல் (9) வரையிலுங் கொடுத்துள்ளது போல ஆகும்.

குறிப்பு :—4-லும், 2-லும் வகுக்கும்போது ஈவு ½-யும் ½-க்கு மேற்பட்டு வந்தால் ஒன்ருகப் பாவிக்கப்பட்டுள்ளது. (4) முதல் (9) வரையிலுமுள்ள எண்கள் (3)-க்கு எதிரிலுள்ள எண்களின் பாதியாகும்.

மொத்த இஷ்ட அல்லது கஷ்ட சப்தவர்க்கஜ பலத்தை முதலில் 4-ஆல் வகுத்து நவாம்சை முதலிய 6 வர்க்கங்களை அடைவதைவிட மொத்த இஷ்ட அல்லது கஷ்ட சப்தவர்க்கஜ பலத்தை ஒரே தடவையில் (4-யை 2-ஆல் பெருக்க வருகின்ற) 8-ஆல் வகுத்து அடைவது சுலபமாகும்.

## 40-வது வாக்கியம் சுப அசுப மத்தியபலம் கணிதம்

சுப மத்தியபலம் கணிக்க :—ஒரு கிரகத்திற்கு வந்த இராசி வர்க்க சுப பங்க்தீ என்பதை அந்த கிரகம் இராசிச் சக்கிரத்தில் எந்த ராசியிலிருக்கின்றதோ அந்த இராசிக்குடைய கிரகத்திற்கு வந்த மொத்த இஷ்ட சப்தவர்க்கஜ பலத்தால் பெருக்க வருகின்ற தொகையிலுள்ள இலக்கங்களில் முதல் இரண்டு லக்கங்களை முன்னே சொல்லிய பிரகாரம் தள்ளிவிட வருவது இராசி வர்க்கத்தில் அந்த கிரகத்திற்கு வரும் சுப மத்திய பலம் ஆகும். இவ்விதமாகவே ஒரு கிரகத்திற்கு வந்த நவாம்ச வர்க்க சுப பங்க்தீ என்பதை அந்த கிரகம் நவாம்ச சக்கிரத்தில் எந்த ராசியிலிருக்கின்றதோ அந்த ராசிக்குடைய கிரகத்திற்கு வந்த மொத்த இஷ்ட சப்தவர்க்கஜ பலத்தால் பெருக்க வருகின்ற தொகைக்கு அடியில் குறிப்பில் சொல்லியபடி கிரிகை செய்ய வருவது * நவாம்சை வர்க்கத்தில் அந்த கிரகத்திற்கு வரும் சுப மத்தியபலம் ஆகும். இவ்விதமாகவே ஒரு கிரகத்திற்கு திரேகாண வர்க்கம், துவாதசாம்ச வர்க்கம், சப்தமாம்ச வர்க்கம் இவைகளில் வரும் சுப மத்திய பலத்தைக் கணிக்கவேண்டியது. மேலும் ஒரு கிரகத்திற்கு வந்த ஓரா வர்க்க சுப பங்க்தீ என்பதை அந்த கிரகம் இருக்கும் ஓராதிபதியினுடைய மொத்த இஷ்ட சப்த வர்க்கஜ பலத்தால் பெருக்க வருகின்ற தொகைக்கு அடியில் குறிப்பில் சொல்லியபடி கிரிகை செய்ய வருவது * ஓரா வர்க்கத்தில் அந்த கிரகத்திற்கு வரும் சுப மத்திய பலமாகும். ஒரு கிரகத்திற்கு வந்த திரிம்சாம்ச வர்க்க சுப பங்க்தீ என்பதை அந்த கிரகம் இருக்கும் திரிம்சாம்சாதிபதியினுடைய மொத்த இஷ்ட சப்த வர்க்கஜ பலத்தால் பெருக்க வருகின்ற தொகைக்கு அடியில்

குறிப்பில் சொல்லியபடி கிரிகை செய்ய வருவது * திரிம்சாம்ச வர்க்கத்தில் அந்த கிரகத்திற்கு வரும் சுப மத்திய பலமாகும்.

* குறிப்பு :—பெருக்கி வந்த தொகைக்கு 36-வது வாக்கியத் தின் கீழ் 1-வது முதல் 4-வது வரையிலுமுள்ள குறிப்புகளில் சொல்லியபடி கிரிகை செய்யவேண்டியது அவசியம்.

உதாரணம் :—சூரியனுக்கு இராசி வர்க்க சுப பங்க்தி 24 என்றும் சூரியன் இராசிச் சக்கிரத்தில் கன்னியில் இருப்பதாக வும் அந்த கன்னியா ராசிக்குடைய கிரகமாகிய புதனுக்கு மொத்த இஷ்ட சப்தவர்க்கஜ பலம் 77 என்றும் வைத்துக்கொள் வோம். இந்த 24-யை 77-ஆல் பெருக்க 1,848 வரும். இந்த 1,848-ல் உள்ள முதல் இரண்டு வர்க்கங்களைத் தள்ளிவிட 18 நிற் கும் தள்ளிவிடப்பட்ட லக்கங்களின் தொகையாகிய 48 என்பது 50-க்குள்பட்டதால் மூன்றுவது லக்கமாகிய 4-க்கு 1 சேர்க்க வேண்டிய அவசியமில்லை. ஆகையால் தள்ளிவிடப்பட்டபிறகு நின்ற 18-தான் சூரியனுக்கு இராசி வர்க்கத்தில் வந்த சுப மத்திய பலமாகும்.

உதாரணம் :—புதனுக்கு ஓராவர்க்கத்தில் சுப பங்க்தி 10 என்றும் புதன் சூரியனுடைய ஓரையிலிருப்பதாக வைத்துக் கொண்டு அந்த சூரியனுக்கு மொத்த இஷ்ட சப்த வர்க்கஜபலம் 97 என்றும் வைத்துக்கொள்வோம். இந்த 10-யை 97-ஆல் பெருக்க 970 வரும். இந்த 970-ல் முதல் இரண்டு இலக்கங்களைத் தள்ளிவிட 9 நிற்கின்றது. தள்ளிவிடப்பட்ட இலக்கங்களின் தொகையாகிய 70 என்பது 50-க்கு மேற்பட்டதால் மூன்றுவது இலக்கமாகிய 9-க்கு 1 சேர்க்க வேண்டியதவசியம். அப்படி சேர்க்க 10 வரும். ஆகையால் 10-தான் புதனுக்கு ஓராவர்க்கத் தில் வந்த சுப மத்திய பலமாகும்.

அசுப மத்திய பலம் கணிக்க :—சுப மத்திய பலம் கணிக்கச் சொல்லிய வழியில் சுப பங்க்தி என்பதற்குப் பதிலாக அசுப பங்க்தி என்பதையும், மொத்த இஷ்ட சப்த வர்க்கஜ பலத்திற்குப் பதிலாக மொத்த கஷ்ட சப்த்த வர்க்கஜ பலத்தையும் உபயோ கப்படுத்திக் கணிக்க அசுப மத்திய பலம் வரும்.

உதாரணம் :—சூரியனுக்கு இராசி வர்க்க அசுப பங்க்தி 76 என்றும், சூரியன் இராசிச் சக்கிரத்தில் கன்னியிலிருப்பதாகவும் அந்த கன்னியா ராசிக்குடைய கிரகமாகிய புதனுக்கு மொத்த கஷ்ட சப்த்த வர்க்கஜபலம் 323 என்றும் வைத்துக்கொள்வோம்.

இந்த 76-யை 323-ஆல் பெருக்க 24,548 வரும். இந்த 24,548-ல் உள்ள முதல் இரண்டு இலக்கங்களைத் தள்ளிவிட 245 நிற்கும். தள்ளிவிடப்பட்ட இலக்கங்களின் தொகையாகிய 48 என்பது 50-க்குள் பட்டதால் மூன்றுவது லக்கமாகிய 5-க்கு 1 சேர்க்க வேண்டியதவசியமில்லை. ஆகையால் தள்ளிவிடப்பட்ட பிறகு நின்ற 245-தான் சூரியனுக்கு இராசி வர்க்கத்தில் வந்த அசுப மத்திய பலமாகும்.

உதாரணம் :—புதனுக்கு ஓராவர்க்கத்தில் அசுப பங்க்தி 41 என்றும் புதன் சூரியனுடைய ஓரையிலிருப்பதாக வைத்துக் கொண்டு அந்த சூரியனுக்கு மொத்த கஷ்ட சப்த வர்க்கஜ பலம் 303 என்று வைத்துக்கொள்வோம். இந்த 41-யை 303-ஆல் பெருக்க 12,423 வரும். இந்த 12,423-ல் முதல் இரண்டு இலக்கங்களை தள்ளிவிட 124 நிற்கும். தள்ளிவிடப்பட்ட இலக்கங்களின் தொகையாகிய 23 என்பது 50-க்கு உள்பட்டிருப்பதால் மூன்றுவது இலக்கமாகிய 4-க்கு 1 சேர்க்கவேண்டியது அவசியமில்லை. ஆகையால் தள்ளிவிடப்பட்ட பிறகு நின்றதாகிய 124 என்பதுதான் புதனுக்கு ஓராவர்க்கத்தில் வந்த அசுப மத்திய பலமாகும்.

## 41-வது வாக்கியம்—ஸ்பஷ்ட சுப அசுப பலம்

ஸ்பஷ்ட சுப பலம் கணிக்க :—ஒரு கிரகத்திற்கு வந்த இஷ்ட சட்பலத்தை அந்த கிரகம் இராசிச் சக்கிரத்திலிருக்கின்ற ராசியாதிபதியினுடைய இஷ்ட சட்பலத்தால் பெருக்க வருகின்ற தொகையினுடைய மூலத்தை அந்த கிரகத்தினுடைய இராசி வர்க்க சுப மத்திய பலத்தால் பெருக்கவேண்டியது. பெருக்கி வந்த தொகையிலுள்ள இலக்கங்களில் முதல் இரண்டு இலக்கங்களை முன்னே சொல்லிய பிரகாரம் * தள்ளிவிட்டு கிரிகை செய்ய நின்றது அந்த கிரகத்திற்கு இராசி வர்க்கத்தில் ஸ்பஷ்ட சுப பலம் ஆகும்.

இவ்விதமாகவே ஒரு கிரகத்திற்கு வந்த இஷ்ட சட்பலத்தை அந்த கிரகம் நவாம்ச சக்கிரத்திலிருக்கின்ற ராசியாதிபதியினுடைய இஷ்ட சட்பலத்தால் பெருக்க வருகின்ற தொகையினுடைய மூலத்தை அந்த கிரகத்தினுடைய நவாம்ச வர்க்க சுப மத்திய பலத்தால் பெருக்கவேண்டியது. பெருக்கி வந்த தொகையிலுள்ள இலக்கங்களில் முதல் இரண்டு இலக்கங்களை முன்னே சொல்லிய பிரகாரம் * தள்ளிவிட்டு கிரிகை செய்ய நின்றது அந்த

கிரகத்திற்கு நவாம்சை வர்க்கத்தில் ஸ்பஷ்ட சுப பலம் ஆகும். இவ்விதமாகவே ஒரு கிரகத்திற்குத் திரேகாண வர்க்கம், அவ... சாம்ச வர்க்கம், திரிம்சாம்ச வர்க்கம் இவைகளில் வரும் ஸ்பஷ்... சுப பலத்தை அந்தந்த வர்க்கத்தை அனுசரித்துக் கணிக்க அந்த... கிரகத்திற்கு அந்தந்த வர்க்கத்தினுடைய ஸ்பஷ்ட சுபபலம் வரும்.

மேலும் ஒரு கிரகத்திற்கு வந்த இஷ்ட சட்பலத்தை அந்த கிரகம் இருக்கும் ஓராதிபதியினுடைய இஷ்ட சட்பலத்தால் பெருக்க வருகின்ற தொகையினுடைய மூலத்தை அந்த கிரகத்தினுடைய ஓராவர்க்க சுப மத்திய பலத்தால் பெருக்கவேண்டியது. பெருக்கி வந்த தொகையிலுள்ள இலக்கங்களில் முதல் இரண்டு இலக்கங்களை முன்னே சொல்லிய பிரகாரம் * தள்ளிவிட்டு கிரிகை செய்ய நின்றது அந்த கிரகத்திற்கு ஓராவர்க்கத்தில் ஸ்பஷ்ட சுப பலமாகும்.

இவ்விதமாகவே ஒரு கிரகத்திற்கு வந்த இஷ்டபலத்தை அந்த கிரகம் இருக்கும் திரிம்சாம்சாதிபதியினுடைய இஷ்ட சட்பலத்தால் பெருக்க வருகின்ற தொகையினுடைய மூலத்தை அந்த கிரகத்தினுடைய திரிம்சாம்ச வர்க்க சுப மத்திய பலத்தால் பெருக்கவேண்டியது. பெருக்கி வந்த தொகையிலுள்ள இலக்கங்களில் முதல் இரண்டு இலக்கங்களை முன்னே சொல்லிய பிரகாரம் * தள்ளிவிட்டு கிரிகை செய்ய நின்றது அந்த கிரகத்திற்கு திரிம்சாம்ச வர்க்கத்தில் ஸ்பஷ்ட சுப பலம் ஆகும்.

உதாரணம் :—சூரியன் இராசிச் சக்கிரத்தில் கன்னியில் இருப்பதாகவும், சூரியனுக்கு இஷ்ட சட்பலம் 141 என்றும், சூரியன் இருக்கும்படியான ராசியாதிபதியாகிய புதனுக்கு இஷ்ட சட்பலம் 802 என்றும், சூரியனுக்கு இராசி வர்க்கத்தில் சுப மத்திய பலம் 18 என்றும் வைத்துக்கொண்டு, சூரியனுக்கு இராசி வர்க்கத்தில் ஸ்பஷ்ட சுப பலம் கணிப்போம். 141-யை 802-ல் பெருக்க 1,13,082 வரும். இந்த 1,13,082 க்கு 35-வது வாக்கியத்தில் சொல்லிய பிரகாரம் மூலம் கணிக்க மூலம் 336 வரும். இந்த 336-யை சுப மத்திய பலமாகிய 18-ஆல் பெருக்க 6,048 வரும். இதில் இரண்டு இலக்கங்களைத் தள்ளிவிட 60 நிற்கும்.

* குறிப்பு :—பெருக்கி வந்த தொகைக்கு 36-வது வாக்கியத்தின் கீழ் 1-வது முதல் 4-வது வரையிலுள்ள குறிப்புகளில் சொல்லிய பிரகாரம் கிரிகை செய்யவேண்டியது.

தள்ளிவிடப்பட்ட இலக்கங்களின் தொகையாகிய 48 என்பது 50-க்கு உட்பட்டதால் மூன்றுவது இலக்கத்துடன் 1 கூட்ட வேண்டியதில்லை. ஆகையால் தள்ளிவிடப்பட்ட பிறகு நின்றதாகிய 60 என்பதுதான் சூரியனுக்கு இராசி வர்க்கத்தில் வந்த ஸ்பஷ்ட சுப பலம் ஆகும்

உதாரணம் :—சந்திரன் சூரியனுடைய ஓரையிலிருப்பதாகவும் சந்திரனுக்கு இஷ்ட சட்பலம் 266 என்றும், சந்திரன் இருக்கும்படியான ஓராதிபதியாகிய சூரியனுக்கு இஷ்ட சட்பலம் 141 என்றும் சந்திரனுக்கு ஓராவர்க்கத்தில் சுப மத்தியபலம் 18 என்று வைத்துக்கொண்டு, சந்திரனுக்கு ஓராவர்க்கத்தில் ஸ்பஷ்ட சுப பலம் கணிப்போம். 266-யை 141-ஆல் பெருக்க 37,506 வரும். இந்த 37,506-க்கு 35-வது வாக்கியத்தில் சொல்லிய பிரகாரம் மூலம் கணிக்க, மூலம் 193 வரும். இந்த 193-யை சுப மத்தியபலமாகிய 18-ஆல் பெருக்க 3,492 வரும். இதில் முதல் இரண்டு இலக்கங்களைத் தள்ளிவிட 34 நிற்கும். தள்ளிவிடப்பட்ட இலக்கங்களின் தொகையாகிய 92 என்பது 50-க்கு மேற்பட்டதால் மூன்றுவது இலக்கத்துடன் 1 கூட்ட மூன்றுவது இலக்கமாகிய 4 என்பது 5-ஆக மாறும் ஆகையால் தள்ளிவிடப்பட்ட பிறகு நின்றதாகிய 34 என்பது 35-ஆக மாறும் ஆகையால் இந்த 35-தான் சந்திரனுக்கு ஓராவர்க்கத்தில் வந்த ஸ்பஷ்ட சுப பலம் ஆகும்.

ஸ்பஷ்ட அசுப பலம் கணிக்க :—ஸ்பஷ்ட சுப பலத்தைக் கணிக்க மேலே சொல்லிய வழிகளில் இஷ்ட சட்பலத்திற்குப் பதிலாகக் கஷ்ட சட்பலத்தையும், சுப மத்தியபலத்திற்குப் பதிலாக அசுப மத்தியபலத்தையும் உபயோகித்து கணிக்க ஸ்பஷ்ட அசுப பலம் வரும்.

உதாரணம் :—சூரியன் இராசிச் சக்கிரத்தில் கன்னியாராசியிலிருப்பதாகவும், சூரியனுக்குக் கஷ்ட சட்பலம் 437 என்றும், சூரியனிருக்கும்படியான இராசியாதிபதியாகிய புதனுக்குக் கஷ்ட சட்பலம் 383 என்றும், சூரியனுக்கு இராசி வர்க்கத்தில் அசுப மத்திய பலம் 245 என்றும் வைத்துக்கொண்டு, சூரியனுக்கு இராசி வர்க்கத்தில் ஸ்பஷ்ட அசுப பலம் கணிப்போம். 437-யை 383-ஆல் பெருக்க 1,67,371 வரும். இந்த 1,67,371-க்கு 35-வது வாக்கியத்தில் சொல்லிய பிரகாரம் மூலம் கணிக்க, மூலம் 409 வரும். இந்த 409-யை அசுப மத்திய பலமாகிய 245-ஆல் பெருக்க 1,00,205 வரும். இதில் முதல் இரண்டு இலக்

31

கங்களைத் தள்ளிவிட 1,002 நிற்கும். தள்ளிவிடப்பட்ட இலக்கங்களின் தொகையாகிய 05 என்பது 50-க்கு உள்பட்டதால் மூன்றுவது இலக்கத்துடன் 1 கூட்டவேண்டியது அவசியமில்லை. ஆகையால் தள்ளிவிடப்பட்ட பிறகு நின்றதாகிய 1,002-தான் சூரியனுக்கு இராசி வர்க்கத்தில் வந்த ஸ்பஷ்ட அசுப பலம் ஆகும்.

உதாரணம் :—சந்திரன், சூரியனுடைய ஓரையிலிருப்பதாகவும், சந்திரனுக்குக் கஷ்ட சட்பலம் 414 என்றும், சந்திரனிருக்கும்படியான ஓராதிபதியாகிய சூரியனுக்குக் கஷ்ட சட்பலம் 437 என்றும், சந்திரனுக்கு ஓராவர்க்கத்தில் அசுப மத்திய பலம் 94 என்றும் வைத்துக்கொண்டு சந்திரனுக்கு ஓராவர்க்கத்தில் ஸ்பஷ்ட அசுப பலம் கணிப்போம். 414-யை 437-ஆல் பெருக்க 1,80,918 வரும். இந்த 1,80,918-க்கு 35-வது வாக்கியத்தில் சொல்லிய பிரகாரம் மூலம் கணிக்க, மூலம் 425 வரும். இந்த 425-யை அசுப மத்திய பலமாகிய 94-ஆல் பெருக்க 39,950 வரும். இதில் முதல் இரண்டு இலக்கங்களைத் தள்ளிவிட 399 நிற்கும். தள்ளிவிடப்பட்ட இலக்கங்களின் தொகை 50 ஆனதால் மூன்றுவது இலக்கத்துடன் 1 கூட்டவேண்டியதவசியம். ஆகையால் தள்ளிவிடப்பட்ட பிறகு நின்றதாகிய 399 என்பது 400 ஆகும். இந்த 400-தான் சந்திரனுக்கு ஓராவர்க்கத்தில் வந்த ஸ்பஷ்ட அசுப பலம் ஆகும்.

இந்த புத்தகத்தில் 2-வது அத்தியாயத்தில் 19-வது, 20-வது வாக்கியங்களை உபயோகப்படுத்தும் விதத்தில் கிரகங்களின் பார்வை முதலிய எவ்வித பலங்களையும் ரூபம் என்று சொல்லப்பட்ட ஒரு அளவைக் கொண்டு அளப்பது வழக்கமென்று முன்னமே சொல்லி யிருக்கின்றோம். எல்லா கிரகங்களின் முழு பலம் இத்தனை ரூபம் என்று சொல்லப்படும். ஒரு ரூபத்தை 60 சம பாகங்களாகப் பங்கிட வருகின்ற ஒரு பாகத்திற்கு விரூபம் என்று பெயர். ஆகையால் 1 ரூபத்தில் 60 விரூபங்களுண்டு. 1 ரூபத்தை 60-ஆல் வகுப்பதைவிட 100-ஆல் வகுப்பது கணிதத்தில் சுலபமானதால் இந்த புத்தகத்தில் 1 ரூபத்தை 100 சம பாகமாக பங்கிட்டு கிரகங்களின் எவ்வித பலமும் 100-ல் இத்தனை பங்கு என்று கொடுக்கப்பட் டிருக்கின்றது. ஆகையால் இந்த புத்தகத்தில் கொடுத்துள்ள பங்குகளில் 100 பங்கு கொண்டது 1 ரூபமாகும். உதாரணமாக 55-வது கட்டத்தில் சூரியனுக்கு மொத்த ஸ்பஷ்ட சுப பலம் 252 என்று கணித்து போட்டிருக்கின்றது. அதாவது சூரியனுடைய மொத்த ஸ்பஷ்ட சுப பலம்

என்பது 1 ரூபத்தை 100 சம பாகமாகப் பங்கிட வருகின்ற பாகத்தைப்போன்ற 252 பாகங்கள் உடையது என்பதாம். ஆகையால் 252 என்பது எத்தனை ரூபம் என்று பார்ப்போமானால் 2 ரூபமும், 100-ல் 52 பங்கு ரூபமும் ஆகும். இவ்விதமாகவே இந்த 55-வது கட்டத்தில் சந்திரனுக்கு மொத்த ஸ்பஷ்ட சுப பலம் 565 என்று போட்டிருப்பதால் சந்திரனுக்கு மொத்த ஸ்பஷ்ட சுப பலம் 5 ரூபமும், 100-ல் 65 பங்கு ரூபமும் ஆகும். மேலும் 37-வது கட்டத்தில் சூரியனுக்குச் சட்பலம் 615 என்று கணித்து போட்டிருப்பதால் சூரியனுக்குச் சட்பலம் எத்தனை ரூபம் என்று பார்ப்போமானால் 6 ரூபமும், 100-ல் 15 பங்கு ரூபமும் ஆகும். இவ்விதமாகவே சுக்கிரனுக்கு சட்பலம் 649 அல்லது 6 ரூபமும், 100-ல் 49 பங்கு ஆகும். 100 பங்கு கொண்டது 1 ரூபமானதால், 75 என்பது முக்கால் ரூபமும், 50 என்பது அரை ரூபமும் 25 என்பது கால் ரூபமும், 12½ என்பது அரிக்கால் ரூபமும், 6¼ என்பது 1 வீசம் ரூபமும் ஆகும். ஆகையால் மேலே சுக்கிரனுக்குச் சொல்லிய சட்பலமாகிய 649 பங்கு என்பது 6½ ரூபத்திற்கு கொஞ்சம் குறைவு என்று ஏற்படும். இவ்விதமாகவே ரூப கணக்கு அறியவேண்டியது.

கிரகங்களின் சுப அசுப பலத்தை இந்த புத்தகத்தில் சொல்லிய பிரகாரம் கணிதஞ்செய்து அறிவது மகரிஷிகளால் சொல்லப்பட்டது என்று அறியவேண்டியது.

## கிரகயுத்தபலம்.

சூரியன், சந்திரன் ஆகிய இவ்விரண்டு கிரகங்களுக்கு "யுத்த பலம்" என்பது கிடையாது. இவை நீங்கலாக மற்ற குஜாதி பஞ்ச கிரகங்களுக்கும் கிரகயுத்தம் உண்டு. கிரகங்களின் யுத்த கணிதத்தைப்பற்றி நம் முன்னோர்கள் பலவித அபிப்பிராயமாகச்சொல்லியிருக்கின்றார்கள். குஜாதி பஞ்ச கிரகங்களில் இரண்டு கிரகங்கள் ஸ்புட ரீதியாய் ஒரே ஸ்புடத்திலிருந்து (அதாவது இரண்டு கிரகங்களின் ஸ்புடங்கள் பாகை, கலை வரையிலும் ஒன்றாயிருந்து) இரண்டு கிரகங்களின் "விக்ஷேபம்" (Latitude) ஒரே திசையிலிருந்தால் இந்த இரண்டு கிரகங்களுக்கும் யுத்தம் உண்டென்றும், ஸ்புடங்களில் ஒரு கலையாகிலும் வித்தியாசமிருந்தால் கிரகங்களுக்கு யுத்தம் கிடையாது என்றும் சொல்வர் சிலர். இன்னும் சிலர் ஸ்புடங்களில் ஒரு கலைகூட வித்தியாசமில்லாமலிருந்து ஒரு கிரக பிம்பத்திற்கும் மற்றொரு கிரக பிம்பத்திற்கும் இடையிலுள்ள

தூரம் ஒரு பாகைக்குள் இருந்தால்தான் அந்த இரண்டு கிரகங்களுக்கும் யுத்தம் உண்டென்பர். முன் சொன்ன வகுப்பார் கொள்கைபடி யுத்தங்கள் ஜாதகங்களில் நேரிடுவது அருமையாயிருக்கும். பின் சொன்ன வகுப்பார் கொள்கைபடி ஜாதகங்களில் கிரக யுத்தம் நேரிடுவது மிகவும் அருமையாக விருக்கும். (நாம் எடுத்துக்கொண்ட உதாரண ஜாதகத்தில் கிரக யுத்தம் நேரிடவில்லை என்பதைக் கவனிக்கவும்.) யுத்தத்தில் வடக்கிலுள்ள கிரகம் ஜெயிக்கின்றதென்றும் தெற்கிலுள்ள கிரகம் தோல்வியடைகிறதென்றும் சிலர் சொல்லுவார். பிம்பம் பெரியதாயும் பிரகாசம் அதிகமாயுமுள்ள கிரகம் தெற்கில் இருந்த போதிலும் ஜெயிக்கின்றது என்றும் சிலர் சொல்லுகிறார்கள். ஆனால் அயனபல ரீதியாய் வடக்கிலுள்ள கிரகம், தெற்கிலுள்ள கிரகத்தைவிட வலிவுள்ளதால், வடக்கிலுள்ள கிரகம் பிம்பம் சிறியதாயுடையதாயினும் ஜெயிக்கின்றது என்பதைப் பலர் அங்கீகரிக்கின்றனர்.

யுத்த பலம் கணிக்க வேண்டுமானால் முதலில் யுத்த கிரகங்களின் பலத்தை அறியவேண்டியது "பலம்" என்பது (1) ஸ்தான பலம், (2) காலபலம், (3) திக்குப்பலம், (4) அயனபலம் ஆகிய இந்த நான்கு பலத்தையுங் கூட்ட வருகின்ற மொத்த பலம் ஆகும். யுத்தத்திலுள்ள இரண்டு கிரகங்களின் பலங்களுக்குமுள்ள வித்தியாசத்தை ஒரு சார்பார் இரண்டு கிரகங்களுக்கும் இடையிலுள்ள தூரத்தால் (அதாவது விக்ஷேப வித்தியாசத்தால்) வகுக்கவேண்டு மென்றும், மற்றொரு சார்பார் இரண்டு கிரகங்களின் பிம்பங்களுக்குமுள்ள வித்தியாசத்தால் வகுக்கவேண்டும் என்று சொல்வர். இப்படி வகுக்க வருகின்ற பலத்தை ஜெயிக்கின்ற கிரகமாகிய வடக்கிலிருக்கின்ற கிரகத்தின் பலத்துடன் கூட்டவேண்டும்; தெற்கிலிருக்கின்ற கிரகத்தின் பலத்திலிருந்து கழிக்கவேண்டும்.

கிரகங்களின் விக்ஷேபம் அறிதல் :—இராசி மண்டலமாகிய கிராந்தி மண்டலத்தை விட்டு அதற்கு வடக்கு அல்லது தெற்கில் கிரகங்கள் ஒதுங்கியிருக்குந் தூரத்திற்கு விக்ஷேபம் என்று பெயர். வடக்கே ஒதுங்கி இருந்தால் "வடக்கு விக்ஷேபம்" என்றும் தெற்கே ஒதுங்கியிருந்தால் "தெற்கு விக்ஷேபம்" என்றும் சொல்லப்படும். யுத்த நிர்ணய விதியில் கிரகங்களின் விக்ஷேபம் ஒரே திசையில் இருக்கவேண்டும் என்று சொல்லியிருக்கின்றது. அதாவது யுத்தத்திலிருக்கின்ற இரண்டு கிரகங்களின் விக்ஷேபம்

வடக்கு விக்ஷேபம் அல்லது தெற்கு விக்ஷேபமாக இருக்க வேண்டுமே தவிர ஒன்று வடக்கு விக்ஷேபமாகவும் மற்றொன்று தெற்கு விக்ஷேபமாகவும் இருக்கக்கூடாது என்பதாம். விக்ஷேபம் கணிக்க வேண்டுமானால் வானசாஸ்திரந் தெரியவேண்டும். வானசாஸ்திரந் தெரிந்தவர்கள் வான சாஸ்திரங்களில் சொல்லிய பிரகாரம் விக்ஷேபங்களைக் கணித்துக்கொள்ள வேண்டியது. வான சாஸ்திரந் தெரியாதவர்கள் இந்த புத்தகத்தில் 47-வது பக்கத்தில் சொல்லியுள்ள "நாடிகல் ஆல்மனெக்'' அல்லது எனது சித்தாந்த இராஜ சிரோன்மணி என்ற "இராஜஜோதிட கணிதம்'' என்ற புத்தகத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

கிரகங்களின் பிம்ப அளவு அடியிற்கண்டபடி ஆகும் :—

| கிரகங்கள். | பிம்பத்தின் அளவு. | | | |
|---|---|---|---|---|
| செவ்வாய் | 9·36 விகலை | அல்லது | 9 விகலை | |
| புதன் | 6 68 ,, | ,, | 7 | ,, |
| குரு | 194·72 ,, | ,, | 195 | ,, |
| சுக்கிரன் | 16·80 ,, | ,, | 17 | ,, |
| சனி | 169·50 ,, | ,, | 170 | ,, ஆகும். |

உதாரணம் :—1925ஹு டிசம்பர்மீ 15உ இரவு 3 மணி 47 நிமிஷத்தில் செவ்வாய், சனி இவர்களின் ஸ்புடமும், விக்ஷேபமும், பலமும் அடியிற்கண்டபடி இருப்பதாக பாவித்துக்கொண்டு யுத்த பலம் கணிப்போம்.

| கிரகங்கள். | ஸ்புடம். | விக்ஷேபம். | பலம். |
|---|---|---|---|
| | பாகை—கலை. | பாகை—கலை. | |
| செவ்வாய் | 209—24 | 0—21 வடக்கு | 708 பாகம் |
| சனி | 209—24 | 2— 5 ,, | 500 ,, |
| வித்தியாசம் | 0— 0 | 1—44 ,, | 208 ,, |

(1) விக்ஷேப வித்தியாச தூரத்தால் வகுக்கவேண்டியது என்று சொல்பவர்களின் கொள்கைபடி கணிக்க :—இரண்டு கிரகங்களின் பலத்தின் வித்தியாசம் 208 இந்த 208-யை விக்ஷேப வித்தியாசமாகிய 1 பாகை 44 கலையால் வகுக்கவேண்டியது. 1 பாகை 44 கலை என்பதைக் கலையாக மாற்ற 104 கலை வரும். கிரகபல வித்தியாசமாகிய 208-யை 104-ஆல் வகுக்க ஈவு 2 வரும். செவ்வாய், சனி இவர்களில் சனி என்பது செவ்வாயிக்கு வடக்கில்

இருப்பதால் யுத்தத்தில் சனி ஜெயித்த கிரகம். ஆகையால் மேலே வந்த 2-யைச் சனியின் பலமாகிய 500 உடன் கூட்ட வேண்டியது. இப்படிச் செய்ய சனியின் பலம் 502 ஆகும். செவ்வாய் தோல்வியடைந்த கிரகமாதலால் செவ்வாயின் பலமாகிய 708-ல் இருந்து மேலே வந்த 2-யைக் கழிக்க 706 வரும். ஆகையால் யுத்தபல கிரியையைச் செய்தபிறகு சனிக்குப் பலம் 502-ம் செவ்வாயிற்குப் பலம் 706-ம் ஆகும்.

குறிப்பு :—(1) யுத்த கிரியை செய்வதற்கு முந்தியுள்ள செவ்வாய், சனி பலத்தைக் கூட்ட அதாவது 708-யையும் 500-யையுங் கூட்ட 1,208 வரும். யுத்தபல கிரியை செய்தபிறகு இவர்களுக்கு வரும் பலங்களாகிய 706-யையும் 502-யையுங் கூட்ட 1,208 வரும். ஆகையால் யுத்தபல கிரியை செய்தலுக்கு முந்தியும் பிந்தியும் இவர்களின் பலத்தைக் கூட்ட வருந்தொகை ஒன்றாய் இருக்கவேண்டும் என்று அறியவும்.

குறிப்பு :—(2) ஈவு, கிரகபல வித்தியாச எண்ணிற்குமேல் அதிகமாக வருமானால் ஈவிற்குப் பதிலாக கிரகபல வித்தியாச எண்ணையே ஈவாக பாவிக்கவேண்டியது. அதாவது கிரகபல வித்தியாசத்தையே ஜெயித்த கிரகபலத்துடன் கூட்டவேண்டியது; தோற்ற கிரகத்திலிருந்து கழிக்க வேண்டியது.

(2) பிம்ப வித்தியாசத்தால் வகுக்கவேண்டியது என்று சொல்பவர்களின் கொள்கைபடி கணிக்க:—மேலே எடுத்துக் கொண்ட உதாரணத்தில் இரண்டு கிரகங்களின் பலத்தின் வித்தியாசம் 208 ஆகும். சனியினுடைய பிம்ப அளவு 170 விகலை. செவ்வாயின் பிம்ப அளவு 9 விகலை. 170-க்கும் 9-க்கும் உள்ள வித்தியாசம் 161 விகலை ஆகும். பலத்தின் வித்தியாசமாகிய 208-யை பிம்ப வித்தியாசமாகிய 161-ஆல் வகுக்க ஈவு 1 வரும். இந்த 1-யை ஜெயித்த கிரகபலமாகிய 500 உடன் கூட்ட சனிக்கு 501 வரும். இந்த 1-யைத் தோல்வி அடைந்த கிரகமாகிய 708-லிருந்து கழிக்க செவ்வாயிற்கு 707 வரும். ஆகையால் யுத்தபல கிரியை செய்த பிறகு செவ்வாயிற்குப் பலம் 707-ம், சனிக்குப் பலம் 501-ம் ஆகும்.

குறிப்பு :—ஈவு, கிரகபல வித்தியாச எண்ணிற்குமேல் அதிகமாய் வருமானால் கிரகபல வித்தியாச எண்ணையே முன்போல ஈவிற்குப் பதிலாக வைத்துக் கொள்ளவேண்டும்.

யுத்தபல கிரியை செய்தபிறகு மேலே வந்த ஈவை 37-வது கட்டத்தில் வரிசை எண் 8-ற்கு நேராய் ஜெயித்த கிரகத்தின் கீழ் கொடுத்துள்ள எண்ணுடன் கூட்ட வருவது ஜெயித்த கிரகத்தின் சட்பலமாகும். இந்த ஈவை 37-வது கட்டத்தில் 8-வது வரிசை எண்ணிற்கு நேராய் தோல்வியடைந்த கிரகத்தின் கீழ் கொடுத்துள்ள எண்ணிலிருந்து கழிக்க வருவது தோல்வியடைந்த கிரகத்தின் சட்பலமாகும். நாம் எடுத்துக்கொண்ட உதாரண ஜாதகத்தில் கிரக யுத்தம் கிடையாது.

## 42-வது வாக்கியம்—ஆயுள் நிர்ணய கணிதம்.

இங்கு இனிமேல் சொல்லப்படும்படியான ஆயுள் நிர்ணய கணிதம். "வராஹ மிகிராச்சாரியர்" அருளிச்செய்த "பிருஹத் ஜாதகத்தின்" 7-வது அத்தியாயத்திலும்; "கல்யாணவர்மா" அருளிச் செய்த "ஜாதக பாரிஜாதத்தின்" 5-வது அத்தியாயத்திலும் சொல்லியதாகும். ஆயுள் நிர்ணய கணிதத்திற்கு கிரகங்களின் பலம் தெரியவேண்டியது அவசியமானதால் ஆயுள் கணிதம் என்பது கிரகங்களின் சட்பல கணிதத்தை முதற் கருவியாக உடையது என்று சொல்லாமலே விளங்கும்.

ஆயுள் மிகவும் முக்கியமானபடியால் ஜோதிட சாஸ்திரத்தில் வல்லவர்கள் அனேகர் ஆயுளைக் கணித ரீதியாய் நிர்ணயஞ் செய்யும் வழியைப்பற்றி தங்கள் புத்திக்கு எட்டின வரையிலும் ஆராய்ச்சி செய்து தங்களுடைய அபிப்பிராயங்களைத் தெரிவித்திருக்கின்றார்கள். ஆகையால் ஆயுள் நிர்ணய கணிதங்களில் பலவித அபிப்பிராயங்களும், பலவிதமான வழிகளும், பலவிதச் சந்தேகங்களுடனு மிருக்கின்றன. இதனாலேதான் "பிருஹத் ஜாதகத்தில்" ஆயுள் நிர்ணய அத்தியாயம் மிகவும் கஷ்டமான அத்தியாயம் என்று பலர் அபிப்பிராயப்படுகின்றார்கள். ஆயுள் நிர்ணயத்தைப்பற்றி "பராசரர்" தன்னுடைய "ஹோரா சாஸ்திரத்தில்" 32 விதமான வழிகளைக் கொடுத்திருக்கின்றார். லக்கினம் ஒன்றும், சாயையையுடைய கிரகங்கள் ஏழும் ஆக 8 அம்சங்கள் ஒரு ஜாதகத்திலிருப்பதால் சிலர் 8 விதமான "ஆயுள் கணித வழிகளைக்" கொடுத்திருக்கின்றார்கள். அவைகள் அடியிற்கண்டபடி ஆகும்.

1 பிண்டஜ ஆயுர்தாயம்—சூரியன் வலிவாயிருக்கும்போது,
2 நைசர்கஜ ஆயுர்தாயம்—சந்திரன் " "
3 பிண்டாஷ்டக வர்கஜ ஆயுர்தாயம்—செவ்வாய் " "
4 ரசிமஜ ஆயுர்தாயம்—புதன் " "
5 நக்ஷத்திர ஆயுர்தாயம்—குரு " "
6 காலச்சக்கிர ஆயுர்தாயம்—சுக்கிரன் " "
7 சாமுதாய ஆயுர்தாயம்—சனி " "
8 அம்சஜ ஆயுர்தாயம்—லக்கினம் " "

உபயோகப்படுத்த வேண்டும். இந்த 8 வித ஆயுர்தாய வழிகளில் "வராஹ மிஹிராச்சாரியார்" பிண்டாயுர்தாயம் (என்ற பிண்டஜ ஆயுர்தாயம்) அம்சாயுர்தாயம் (என்ற அம்சஜ ஆயுர்தாயம்) ஆகிய இவ்விரண்டு ஆயுர்தாயங்களைப் "பிருஹத் ஜாதகம்" 7-வது அத்தியாயத்திலும், நைசர்க்கிக ஆயுர்தாயம் (என்ற நைசர்கஜ ஆயுர்தாய)த்தை "பிருஹத் ஜாதகம்" 8-வது அத்தியாயம், 1-வது சுலோகத்திலுஞ் சொல்லி இருக்கின்றார்.

பிண்டாயுர்தாயம், அம்சாயுர்தாயம், நைசர்க்கிக ஆயுர்தாயம் ஆகிய விசேஷமான இம்மூன்றுவித ஆயுர்தாய கணிதங்களில் சூரியன், சந்திரன், லக்கினம் இம்மூன்றில் சூரியன் வலிவாயிருக்கும்போது பிண்டாயுர்தாய வழியையும், சந்திரன் வலிவாயிருக்கும்போது நைசர்க்கிக ஆயுர்தாய வழியையும், லக்கினம் வலிவாயிருக்கும்போது அல்லது லக்கினாதிபதி வலிவாயிருந்து சுபரால் பார்க்கப்படும்போது அம்சாயுர்தாய வழியையும் உபயோகப்படுத்தவேண்டும் என்று சிலர் சொல்லுகின்றார்கள். லக்கினம் வலிவு என்பதை சிலர் லக்கினாதிபதி மற்ற கிரகங்களைவிட வலிவாயிருத்தல் என்றும், சிலர் லக்கினபாவம் கிரகங்களைவிட வலிவாயிருத்தல் என்றுஞ் சொல்லுகிறார்கள் (லக்கினபாவம் பெரும்பாலும் எப்போதும் கிரகங்களைவிட வலிவாயிருக்குமாதலால், லக்கினம் என்றால் லக்கினாதிபதி என்றே அர்த்தங் கொள்வது உத்தமமாயிருக்குமேதவிர லக்கினபாவம் என்று அர்த்தங்கொள்வதுஉத்தமமாகஇராது.) இன்னஞ்சிலர் அம்சாயுர்தாயவழியை எப்போதும் உபயோகப்படுத்த வேண்டும் என்றும், இன்னஞ்சிலர் எப்போதும் பிண்டாயுர்தாய வழியையும் அம்சாயுர்தாய வழியையும் ஆக இவ்விரண்டு வழிகளையும் ஏககாலத்தில் உபயோகப்படுத்தி இவ்விரண்டு வழியாகவும் ஆயுள் முதலிய பலாபலன்களைச் சொல்லவேண்டும் என்றும், இன்னஞ் சிலர் பிண்டாயுர்தாயம்,

அம்சாயுர்தாயம், நைசர்க்கிக ஆயுர்தாயம் ஆகிய இம்மூன்று ஆயுர்தாயங்கள் ரீதியாய் ஒவ்வொரு கிரகங்களுக்கும் வருகின்ற வருஷங்களை ஒன்ருய்க் கூட்ட வருகின்றதை மூன்ருல் வகுக்க வருகின்றதுதான் அந்த கிரகம் கொடுக்கின்ற ஆயுள் என்றும் சொல்லுகின்ருர்கள். ஆகையால் பின்வருமாறு ஆயுள் கணிதம் செய்வது உத்தமம் என்று தோன்றுகின்றது. ஆயுள் கணிதம் செய்து பார்க்கும்போது தாம் கணித்த கணிதத்தினுல் வருகின்ற ஆயுள் தவறுதலாயிருந்தால் இது ஆயுள் கணிக்கக் கொடுத்துள்ள பலவித மதபேதங்களாலும் அபிப்பிராய பேதங்களாலும் உண்டானது என்று கருதவேண்டுமே தவிர கிரக சட்பல கணிதத்தால் உண்டானதென்றும், கிரக சட்பல கணித வழி தவறுதலாயிருக்கும் என்றும் ஒருபோதும் கருதவே கூடாது. மேலும் நல்ல வழியிலிருந்து சன்மார்க்கக் காரியங்களில் ஈடுபட்டு கடவுளையும் பிரம்மக் கியானமுடையவர்களையும் தொழுது தேகத்திற்கு ஆரோக்கியத்தை உண்டுபண்ணக்கூடிய நல்ல போஜனம் உண்டு, தங்களுடைய பஞ்சேந்திரியங்களையும் அதிகமாய் உபயோகப்படுத்தாமல் சரிவர உபயோகப்படுத்தி தங்களுடைய குலாச்சாரத்திற்குத் தக்கவாறு நடந்துகொள்ளப்பட்டவர்களுக்குத்தான் "பராசரர்" முதலிய பலரும் சொல்லியுள்ள பலவித ஆயுர்தாய கணித முறைகளால் ஆயுள் நிர்ணயஞ் செய்ய முடியும் என்று "வராஹமிகிராச்சாரியார்" முதலிய பெரியோர்கள் சொல்லியிருக்கின்ருர்கள். பாவத்தொழிலில் எப்போதும் ஈடுபட்டும், அல்லது பேராசையாலும், களவாலும் பிறருடைய சொத்தை அபகரிக்கும் எண்ணமுடையவராய் துர்கர்மங்களைச் செய்தும் அல்லது தெய்வ துவேஷம், பிரம்ம துவேஷமுடையவர்களாய்க் குலாச்சாரங்களை நழுவவிட்டும் அல்லது பெருந்திண்டி தின்றும் அல்லது எல்லோரும் கண்டால் அஞ்சும்படியாய்த் துன்மார்க்கச் செயல்களைச் செய்தும் வாழ்பவர்களுக்கு அகால மரணம் நேரிடும். ஆதலால் இதில் சொல்லிய ஆயுர்தாய கணித வழி பிரகாரம் அவர்களுக்கு ஆயுள் கணிக்கக் கூடாதென்றும் கணித்தால் அது தவறிப்போகும் என்றுஞ் சொல்லுகின்ருர்கள்.

இனிமேல் (1) பிண்டாயுர்தாயம் (2) அம்சாயுர்தாயம் (3) நைசர்க்கிக ஆயுர்தாயம் ஆகிய இந்த மூன்று ஆயுர்தாயங்களைக் கணிக்கும் வழிகளைப்பற்றிக் கவனிப்போம்.

1-வது அயிட்டம்:—முதலில் கீழ் கண்ட உதாரணத்தில் காட்டிய பிரகாரம் ஒவ்வொரு கிரகத்திற்கும் ஆயுள் கணிக்க வேண்டியது.

32

2-வது அயிட்டம்:—பிறகு கீழ் கண்ட அரணங்களை 1-வது அயிட்டத்தில் கணித்து வந்த ஆயுளுக்குச் செய்யவேண்டியது.

(1) சத்துரு க்ஷேத்திர அரணம் :—ஒரு கிரகம் சத்துரு க்ஷேத்திரத்தில் இருந்தால் 1-வது அயிட்டத்தில் அந்த கிரகத்திற்குக் கணித்து வந்த ஆயுளில் மூன்றில் ஒரு பங்கு கழித்துவிடவும். அந்த கிரகம் வக்கிர கெதியிலிருந்தால் சத்துரு க்ஷேத்திர அரணம் அந்த கிரகத்திற்குச் செய்யக்கூடாது. (குறிப்பு:—சிலர் சத்துரு க்ஷேத்திரத்தில் இருக்கும் கிரகம் செவ்வாயானல் மாத்திரம்தான் இந்த அரணம் செவ்வாய்க்கு மாத்திரம் செய்யக்கூடா தென்றும் கிரகங்கள் வக்கிர கெதியில் இருந்தால் அந்த கிரகங்களுக்குக்கூட அரணம் செய்யவேண்டுமென்று அபிப்பிராயப்படுகின்றார்கள். இது அநேகரால் அங்கீகரிக்கப்படவில்லை) சத்துரு க்ஷேத்திரத்தில் இருக்கும் கிரகம் வக்கிர கெதியில் இருந்தால் இந்த அரணம் அந்த கிரகத்திற்குச் செய்யவேண்டியதில்லை என்பது அநேகருடைய கொள்கையாதலால் அதை இங்கு அங்கீகரிக்கப்பட்டுளது.

(2) அஸ்தங்கத அரணம்:—அஸ்தங்கதமாய் இருக்கின்ற ஒரு கிரகத்திற்கு 1-வது அயிட்டத்தில் அந்த கிரகத்திற்கு வந்த ஆயுளில் பாதி கழித்துவிடவேண்டியது. சுக்கிரனுக்கும் சனிக்கும் மாத்திரம் இந்த அரணம் செய்யக்கூடாது. (குறிப்பு.—ஒரே கிரகத்திற்குச் சத்துருக்ஷேத்திர அரணமும் அஸ்தங்கத அரணமும் ஆகிய இவ்விரண்டு அரணங்களும் செய்யும்படி நேரிடும்போது மாத்திரம் பெரிய அரணமாகிய அஸ்தங்கத அரணம் செய்யவேண்டுமே தவிர சத்துருக்ஷேத்திர அரணமும் செய்யக்கூடாது.)

(3) சக்கிரபாத அரணம் செய்ய :—1-வது அயிட்டத்தில் சொல்லியபடி ஒரு பாபக் கிரகத்திற்குக் கணித்து வந்த ஆயுளில் அந்த கிரகம் லக்கினத்திற்கு,

(1) 12-வது பாவத்தில் இருந்தால் முழுதும் கழித்துவிடவும்.
(2) 11-வது „ பாதி கழித்துவிடவும்.
(3) 10-வது „ மூன்றில் ஒரு பங்கு கழித்துவிடவும்.
(4) 9-வது „ நான்கில் „ „
(5) 8-வது „ ஐந்தில் „ „
(6) 7-வது „ ஆறில் „ „

இங்கு பாபக் கிரகம் என்பது சூரியன், செவ்வாய், சனி என்பனவாம்.

1-வது அயிட்டத்தில் சொல்லியபடி ஒரு சுப கிரகத்திற்குக் கணித்து வந்த ஆயுளில் அந்த கிரகம் லக்கினத்திற்கு,

(1) 12-வது பாவத்தில் இருந்தால் பாதி கழிந்துவிடவும்.
(2) 11-வது ,, நான்கில் ஒரு பங்கு கழித்துவிடவும்.
(3) 10-வது ,, ஆறில் ,, ,,
(4) 9-வது ,, எட்டில் ,, ,,
(5) 8-வது ,, பத்தில் ,, ,,
(6) 7-வது ,, பன்னிரண்டில் ,, ,,

இங்கு சுப கிரகம் என்பது குரு, சுக்கிரன், புதன், சந்திரன் என்பனவாம். இந்த சக்கிரபாத அரணம் பாவசக்கிரத்தைக் கொண்டு செய்யவேண்டுமே தவிர இராசிச் சக்கிரத்தைக்கொண்டு செய்யக்கூடாது அதாவது லக்கினத்திற்கு 12-வது பாவம் என்றால் பாவச் சக்கிரத்தில் லக்கினத்திற்கு 12-வது பாவம் என்பதாம். இப்படியே மற்ற பாவங்களையும் அறியவும் மேலும் ஒரே பாவத்தில் ஒன்றுக்கு மேல்பட்ட பல கிரகங்கள் கூட்டமாயிருந்தால் அந்த பல கிரகங்களில் மிகவும் வலிவாயுள்ள ஒரு கிரகத்திற்கு மாத்திரம் சக்கிரபாத அரணம் செய்யவேண்டுமே தவிர கூட்டக் கிரகங்களில் இதர கிரகங்களுக்குச் செய்யவேண்டியது அவசியமில்லை. கிரக சட்பலத்தை பார்த்து மிகவும் வலிவான கிரகம் எது என்பதை அறியவும்.

குறிப்பு:—இதுவரையிலுஞ் சொல்லிவந்த சத்துரு க்ஷேத்திர அரணம், அஸ்தங்கத அரணம், சக்கிரபாத அரணம் ஆகிய இம்மூன்று அரணங்களும், பிண்டாயுர்தாயம், அம்சாயுர்தாயம், நைசர்க்கிக ஆயுர்தாயம் ஆகிய இம்மூன்று ஆயுர்தாய வழிகளுக்கும் பொதுவானது.

குரூரோதய அரணம்:—(இது பிண்டாயுர்தாயம், நைசர்க்கிக ஆயுர்தாயம் ஆகிய இவ்விரண்டிற்கு மாத்திரம் செய்யவேண்டுமே தவிர அம்சாயுர்தாயத்திற்கு செய்யக்கூடாது.) லக்கினத்தில் பாபக்கிரக மிருந்தால் இந்த அரணம் செய்யவேண்டும். சுபக்கிரகம் இருந்தால் இந்த அரணம் செய்யவேண்டியதில்லை. சுபக்கிரகமும் பாபக்கிரகமும் லக்கினத்தில் இருந்தால் லக்கினத்திற்கு

அருகில் எது இருக்கின்றதோ அதை அனுசரித்துச் செய்யவேண்டியது. அதாவது சுபக் கிரகத்தைவிட பாபக் கிரகம் லக்கினத்திற்கு அருகில் இருந்தால் அரணஞ் செய்யவேண்டும். பாபக்கிரகத்தைவிட சுபக்கிரகம் லக்கினத்திற்கு அருகில் இருந்தால் அரணஞ் செய்யவேண்டியதில்லை. அரணம் கீழ் கண்டபடி செய்யவும்.

லக்கின ஸ்புடத்தில் வந்த மூழு ராசிகளைத் தள்ளிவிடவேண்டியது. தள்ளிவிட்ட பிறகு நின்ற பாகை கலையைக் கலையாக மாற்றவேண்டியது.. இப்படிக் கலையாக மாற்ற வந்த எண்ணை ஒவ்வொரு கிரகத்திற்கும் 1-வது அயிட்டத்தில் சொல்லிய பிரகாரம் கணித்து வந்த ஆயுளைப் பெருக்கி 21,600 ஆல் வகுக்க வருகின்ற ஈவு வருஷமாகும். மிச்சத்தை 12-ஆல் பெருக்கி 21,6 0-ஆல்வகுக்க வருகின்ற ஈவு மாதமாகும். 12-ஆல் பெருக்கி வகுத்த பிறகு வந்த மிச்சத்தை 30-ஆல் பெருக்கி 21,600-ஆல் வகுக்க வருகின்ற ஈவு நாள்களாகும். 30-ஆல் பெருக்கி வகுத்த வந்த மிச்சத்தை 60-ஆல் பெருக்கி 21,600-ஆல் வகுக்கவருகின்ற ஈவு நாழிகையாகும். 60-ஆல் பெருக்கி வகுத்து வந்த மிச்சம் 10,800-ம், 10,800-க்கு மேற்பட்டு மிருந்தால் அர்த்தாதிகமானதால் கணித்து வந்த நாழிகையுடன் ஒரு நாழிகை சேர்க்கவும். இப்படிச் செய்ய வந்த வருஷம், மாதம், நாள், நாழிகையைக் குரூரோதய அரணத்திற்காக 1-வது அயிட்டம் பிரகாரம் கணித்து வந்த ஆயுளிலிருந்து கழித்துவிட வேண்டியது. லக்கினத்தில் இருக்கும் பாபக் கிரகத்தை ஒரு சுபக் கிரகம் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட சுபக் கிரகங்கள் பார்த்தால் மேலே சொல்லியபடி 21,600-ஆல் வகுத்து வந்த வருஷம், மாதம், நாள், நாழிகையில் பாதிதான் கழித்துவிடவேண்டியது. (இங்கு சுபக் கிரகங்கள் பார்ப்பது என்பதை புதன், சுக்கிரன், சந்திரன் இவர்களுக்கு 7-வது பார்வையும், குருவிற்கு 5, 7, 9-வது பார்வையும் கவனிக்க வேண்டுமே தவிர மற்றபடி கிரகத் திருக்பலம் கணிக்கும்போது கிரகங்கள் பொதுவாய் 12, 1, 2-ஆம் வீடுகள் தவிர மற்ற வீடுகளைப் பார்க்கின்றன என்ற கொள்கையை எடுத்துக் கொள்ளக் கூடாது) கிரகங்களுக்குக் குரூரோதயம் செய்வது போலவே லக்கினுயுர்தாயத்திற்கும் குரூரோதய அரணம் செய்ய வேண்டியது.

லக்கினுயுர்தாயம் கணிக்க:—லக்கினுயுர்தாயத்தைக் கணிக்கும் வழியைப்பற்றி பல அபிப்பிராயங்கள் இருக்கின்றன. ஆசி

னும் சூரியன் வலிவாயிருக்கும்போது பிண்டாயுர்தாயம் ரீதியாய் (அதாவது கிரகங்கள் ராசியிலிருக்கும் நிலையை அனுசரித்து) கணிக்கவேண்டும் என்றும், லக்கினம் வலிவாயிருக்கும்போது அம்சாயுர்தாய ரீதியாய்க் கணிக்கவேண்டுமென்றும் முன்னமே சொல்லியிருப்பதால் அதற்கு இணங்க பிண்டாயுர்தாயத்தில் லக்கினஸ்புடத்தில் மேஷம்முதல் செல்லான ராசிகளைக்கொண்டு லக்கினுயுர்தாயமும், அம்சாயுர்தாயத்தில் லக்கின ஸ்புடத்தில் மேஷம் முதல் செல்லான நவாம்சை எத்தனை (அதாவது நவாம்சை சக்கிரத்தில் நவாம்சை லக்கினமிருக்கும் ராசி மேஷம் முதல் எத்தனையாவது ராசி) என்பதையும் அனுசரித்து லக்கினு யுர்தாயமும் கணிக்கவேண்டும். அதாவது பின்வருமாறு கணிக்க வேண்டியது.

(1) பிண்டாயுர்தாயத்தில் லக்கினுயுர்தாயம் கணிக்க :—லக்கினஸ்புடத்திலுள்ள ராசி, பாகை, கலைகளுக்கு ராசி ஒன்றுக்கு ஒரு வருஷமாகக் கணக்கிட்டு உதாரணத்தில் கண்டபடி கணிக்கவும்.

(2) அம்சாயுர்தாயத்தில் லக்கினுயுர்தாயம் கணிக்க :-அம்சாயுர்தாயத்தில் கிரகங்களுக்கு 1-வது அயிட்டத்தில் சொல்லியபடி ஆயுள் கணித்தது போலவே லக்கினுயுர்தாயம் கணிக்கவேண்டியது; உதாரணம் பார்க்கவும்.

(3) நைசர்க்கிக ஆயுர்தாயத்தில் லக்கினுயுர்தாயம் கணிக்க:-பிண்டாயுர்தாயத்தில் லக்கினுயுர்தாயம் கணித்தது போலவே கணிக்கவேண்டியது. உதாரணம் பார்க்கவும்.

பிண்டாயுர்தாயமும், நைசர்க்கிக ஆயுர்தாயமும்:—பிறகு (1) சத்துரு க்ஷேத்திர அரணம் செய்யவேண்டியதா யிருந்து அஸ்தங்கத அரணம் செய்யவேண்டியது. அவசியமில்லாதபோது சத்துரு க்ஷேத்திர அரணமும், அல்லது சத்துரு க்ஷேத்திர அரணம்செய்ய வேண்டியது அவசியமில்லாமலிருந்து அஸ்தங்கத அரணம் செய்யவேண்டியதா யிருக்கும்போதும், சத்துரு க்ஷேத்திர அரணமும், அஸ்தங்கத அரணமும் ஆகிய இவ்விரண்டு அரணங்களும் செய்யவேண்டியதா யிருக்கும்போதும் அஸ்தங்கத அரணமும், (2) சக்கிரபாத அரணமும், (3) குரூரோதய அரணமும் ஆகிய இம்மூன்று அரணங்களில் ஒவ்வொரு கிரகத்திற்கும் கழிக்கவேண்டியதாய் வந்த மூன்று தொகைகளையும் கூட்டவேண்டியது. இப்

படிக் கூட்ட வந்த தொகையை அந்தந்த கிரகத்திற்கு 1-வது அயிட்டத்தில் சொல்லியபடி கணித்து வந்த ஆயுளில் கழிக்க வேண்டியது. இப்படிக் கழித்து வந்ததுதான் அந்த கிரகம் கொடுக்கும் நிகர ஆயுளாகும். இவ்விதமாக 7 கிரகங்களும் லக்கினமும் கொடுக்கும் நிகர ஆயுளை ஒன்றாய்க் கூட்ட வருகின்ற தொகைதான் ஜாதகனுடைய நிகர பரம ஆயுளாகும்.

அம்சாயுர் தாயம் :—பிறகு (1) சத்துரு க்ஷேத்திர அரணம் செய்யவேண்டியதாயிருந்து அஸ்தங்கத அரணம் செய்யவேண்டிய அவசியமில்லாதபோது சத்துரு க்ஷேத்திர அரணமும், அல்லது சத்துரு க்ஷேத்திர அரணம் செய்யவேண்டியது அவசியமில்லாமலிருந்து அஸ்தங்கத அரணம் செய்யவேண்டியதா யிருக்கும் போதும், சத்துரு க்ஷேத்திர அரணமும், அஸ்தங்கத அரணமும் ஆகிய இவ்விரண்டு அரணங்களும் செய்யவேண்டியதா யிருக்கும் போதும் அஸ்தங்கத அரணமும், (2) சக்கிரபாத அரணமும் எடுத்துக்கொள்ளவும். இவ்விரண்டு அரணங்களில் ஒவ்வொரு கிரகத்திற்கும் கழிக்கவேண்டியதாய் வந்த இரண்டு தொகைகளையும் கூட்டவேண்டியது. இப்படிக் கூட்டி வந்த தொகையை அந்த கிரகத்திற்கு 1-வது அயிட்டத்தில் சொல்லியபடி கணித்து வந்த ஆயுளில் கழிக்கவேண்டியது. இப்படிக் கழித்து வந்த தொகையை அந்த கிரகம்,

(1) உச்சராசியிலிருந்தால் 3-ஆல் பெருக்கவேண்டியது.

(2) வக்கிரமாயிருந்தால் 3-ஆல் பெருக்கவேண்டியது.

(3) சுயக்ஷேத்திரத்தில் அல்லது சுய நவாம்சையில் அல்லது சுய திரேகாணத்தில் அல்லது தன்னுடைய வர்க்கோத்தமாம்சத்தில் இருந்தால் 2-ஆல் பெருக்கவேண்டியது.

(குறிப்பு):—தன்னுடைய வர்க்கோத்தமம் என்பது இராசிச் சக்கிரத்தில் ஒரு கிரகம் எந்த ராசியில் இருக்கின்றதோ அதே ராசியில் நவாம்சை சக்கிரத்தில் இருப்பது என்பதாம்.

ஒரு கிரகத்திற்கு முதலில் மூன்றிலும், பிறகு இரண்டிலும் பெருக்க வேண்டியதாய் நேரிட்டால் பெரிய எண்ணால் அதாவது மூன்றால் மாத்திரம் பெருக்க வேண்டுமேதவிர இரண்டிலுங்கூட பெருக்கவேண்டிய அவசியமில்லை. இதை முக்கியமாய்க் கவனிக்க வேண்டியது.

சத்துரு க்ஷேத்திர அரணம் அல்லது அஸ்தங்கத அரணம், சக்கிரபாத அரணம் இவைகளைச் செய்த பிறகு வருகின்ற

தொகையை இரண்டிலோ அல்லது மூன்றிலோ மேற்சொல்லிய பிரகாரம் பெருக்கவேண்டியதா யிருந்தால் பெருக்கின பிறகு ஒவ்வொரு கிரகத்திற்கும் வந்த தொகையை ஒன்றாய்க் கூட்ட வேண்டியது இப்படிக் கூட்ட வருந் தொகையுடன் லக்கினாயுர் தாயத்திற்கு வந்த தொகையைக் கூட்ட வருகின்ற தொகைதான் ஜாதகனுக்கு நிகர பரம ஆயுளாகும்.

மேலும் பிண்டாயுர்தாயம், அம்சாயுர்தாயம், நைசர்க்கிக ஆயுர்தாயம் ஆகிய இம்மூன்று வழிகளால் ஆயுளைச் சுலபமாய்க் கணிப்பதற்காக அடியில் வாக்கியங்கள் கொடுக்கப்பட்டிருக்கின் றன. அவைகளை உபயோகப்படுத்தும் விதம் உதாரணத்தில் சொல்லப்பட் டிருக்கின்றது.

பிண்டாயுர்தாயம் (எ)—(சூரியன் வலிவாயிருக்கும்போது)

| [illegible] | சூரியன் 19 ஞூ | | | சந்திரன் 25 ஞூ | | | செவ்வாய் 15 ஞூ குரு 15 ஞூ | | | புதன் 12 ஞூ | | | சுக்கிரன் 21 ஞூ | | | சனி 20 ஞூ | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஞூ | மீ | நா | ஞூ | மீ | நா | ஞூ | மீ | நா | ஞூ | மீ | நா | ஞூ | மீ | நா | ஞூ | மீ | நா |
| 1 | 0 | 0 | 19 | 0 | 0 | 25 | 0 | 0 | 15 | 0 | 0 | 12 | 0 | 0 | 21 | 0 | 1 | 20 |
| 2 | 0 | 1 | 8 | 0 | 1 | 20 | 0 | 1 | 0 | 0 | 0 | 24 | 0 | 1 | 12 | 0 | 0 | 10 |
| 3 | 0 | 1 | 27 | 0 | 2 | 15 | 0 | 1 | 15 | 0 | 1 | 6 | 0 | 2 | 3 | 0 | 2 | 0 |
| 4 | 0 | 2 | 16 | 0 | 3 | 10 | 0 | 2 | 0 | 0 | 1 | 18 | 0 | 2 | 24 | 0 | 2 | 20 |
| 5 | 0 | 3 | 5 | 0 | 4 | 5 | 0 | 2 | 15 | 0 | 2 | 0 | 0 | 3 | 15 | 0 | 3 | 10 |
| 6 | 0 | 3 | 24 | 0 | 5 | 0 | 0 | 3 | 0 | 0 | 2 | 12 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 |
| 7 | 0 | 4 | 13 | 0 | 5 | 25 | 0 | 3 | 15 | 0 | 2 | 24 | 0 | 4 | 27 | 0 | 4 | 20 |
| 8 | 0 | 5 | 2 | 0 | 6 | 20 | 0 | 4 | 0 | 0 | 3 | 6 | 0 | 5 | 18 | 0 | 5 | 10 |
| 9 | 0 | 5 | 21 | 0 | 7 | 15 | 0 | 4 | 15 | 0 | 3 | 18 | 0 | 6 | 9 | 0 | 6 | 0 |
| 10 | 0 | 6 | 10 | 0 | 8 | 10 | 0 | 5 | 0 | 0 | 4 | 0 | 0 | 7 | 0 | 0 | 6 | 20 |
| 20 | 1 | 0 | 20 | 1 | 4 | 20 | 0 | 10 | 0 | 0 | 8 | 0 | 1 | 2 | 0 | 1 | 1 | 10 |
| 30 | 1 | 7 | 0 | 2 | 1 | 0 | 1 | 3 | 0 | 1 | 0 | 0 | 1 | 9 | 0 | 1 | 8 | 0 |
| 40 | 2 | 1 | 10 | 2 | 9 | 10 | 1 | 8 | 0 | 1 | 4 | 0 | 2 | 4 | 0 | 2 | 2 | 20 |
| 50 | 2 | 7 | 20 | 3 | 5 | 20 | 2 | 1 | 0 | 1 | 8 | 0 | 2 | 11 | 0 | 2 | 9 | 10 |
| 60 | 3 | 2 | 0 | 4 | 2 | 0 | 2 | 6 | 0 | 2 | 0 | 0 | 3 | 6 | 0 | 3 | 4 | 0 |
| 70 | 3 | 8 | 10 | 4 | 10 | 10 | 2 | 11 | 0 | 2 | 4 | 0 | 4 | 1 | 0 | 3 | 10 | 20 |
| 80 | 4 | 2 | 20 | 5 | 6 | 20 | 3 | 4 | 0 | 2 | 8 | 0 | 4 | 8 | 0 | 4 | 5 | 10 |
| 90 | 4 | 9 | 0 | 6 | 3 | 0 | 3 | 9 | 0 | 3 | 0 | 0 | 5 | 3 | 0 | 5 | 0 | 0 |
| 100 | 5 | 3 | 10 | 6 | 11 | 11 | 4 | 2 | 0 | 3 | 4 | 0 | 5 | 10 | 0 | 5 | 6 | 20 |
| 200 | 10 | 6 | 20 | 13 | 10 | 20 | 8 | 4 | 0 | 6 | 8 | 0 | 11 | 8 | 0 | 11 | 1 | 10 |
| 300 | 15 | 10 | 0 | 20 | 10 | 0 | 12 | 6 | 0 | 10 | 0 | 0 | 17 | 6 | 0 | 16 | 8 | 0 |

## பிண்டாயுர்தாயம் (பி)—(சூரியன் வலிவாயிருக்கும்போது)

| கலை | சூரியன். | சந்திரன் | செவ்வாய், குரு. | புதன். | சுக்கிரன். | சனி. |
|---|---|---|---|---|---|---|
| | நாள் நாழி | நாள் நாழி | நாள் நாழி | நாள் நாழி | நாள் நாழி | நாள் நாழி |
| 1 | 0—19 | 0—25 | 0—15 | 0—12 | 0—21 | 0—20 |
| 2 | 0—38 | 0—50 | 0—30 | 0—24 | 0—42 | 0—40 |
| 3 | 0—57 | 1—15 | 0—45 | 0—36 | 1— 3 | 1— 0 |
| 4 | 1—16 | 1—40 | 1— 0 | 0—48 | 1—24 | 1—20 |
| 5 | 1—35 | 2— 5 | 1—15 | 1— 0 | 1—45 | 1—40 |
| 6 | 1—54 | 2—30 | 1—30 | 1—12 | 2— 6 | 2— 0 |
| 7 | 2—13 | 2—55 | 1—45 | 1—24 | 2—27 | 2—20 |
| 8 | 2—32 | 3—20 | 2— 0 | 1—36 | 2—48 | 2—40 |
| 9 | 2—51 | 3—45 | 2—15 | 1—48 | 3— 9 | 3— 0 |
| 10 | 3—10 | 4—10 | 2—30 | 2— 0 | 3—30 | 3—20 |
| 20 | 6—20 | 8—20 | 5— 0 | 4— 0 | 7— 0 | 6—40 |
| 30 | 9—30 | 12—30 | 7—30 | 6— 0 | 10—30 | 10— 0 |
| 40 | 12—40 | 16—40 | 10— 0 | 8— 0 | 14— 0 | 13—20 |
| 50 | 15—50 | 20—50 | 12—30 | 10— 0 | 17—30 | 16—40 |

## அம்சாயுர்தாயம் (எ)—(லக்கினாதிபதி வலிவாயிருக்கும்போது)

| பாகை-கலை | ஹு | பாகை-கலை | ஹு | பாகை-கலை | ஹு | பாகை-கலை | ெ |
|---|---|---|---|---|---|---|---|
| 3—20 | 1 | 53—20 | 4 | 103—20 | 7 | 153—20 | 10 |
| 6—40 | 2 | 56—40 | 5 | 106—40 | 8 | 156—40 | 11 |
| 10— 0 | 3 | 60— 0 | 6 | 110— 0 | 9 | 160— 0 | 12 |
| 13—20 | 4 | 63—20 | 7 | 113—20 | 10 | 163—20 | 1 |
| 16—40 | 5 | 66—40 | 8 | 116—40 | 11 | 166—40 | 2 |
| 20— 0 | 6 | 70— 0 | 9 | 120— 0 | 12 | 170— 0 | 3 |
| 23—20 | 7 | 73—20 | 10 | 123—20 | 1 | 173—20 | 4 |
| 26—40 | 8 | 76—40 | 11 | 126—40 | 2 | 176—40 | 5 |
| 30— 0 | 9 | 80— 0 | 12 | 130— 0 | 3 | 180— 0 | 6 |
| 33—20 | 10 | 83—20 | 1 | 133—20 | 4 | 183—20 | 7 |
| 36—40 | 11 | 86—40 | 2 | 136—40 | 5 | 186—40 | 8 |
| 40— 0 | 12 | 90— 0 | 3 | 140— 0 | 6 | 190— 0 | 9 |
| 43—20 | 1 | 93—20 | 4 | 143—20 | 7 | 193—20 | 10 |
| 46—40 | 2 | 96—40 | 5 | 146—40 | 8 | 196—10 | 11 |
| 50— 0 | 3 | 100— 0 | 6 | 150— 0 | 9 | 200— 0 | 12 |

## அம்சாயுர்தாயம் (எ) (லக்கினாதிபதி வலிவாயிருக்கும்போது) தொடர்ச்சி.

| பாகை | கலை | ஆயு | பாகை | கலை | ஆயு | பாகை | கலை | ஆயு | பாகை | கலை | ஆயு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 203 | 20 | 1 | 243 | 20 | 1 | 283 | 20 | 1 | 323 | 20 | 1 |
| 206 | 40 | 2 | 246 | 40 | 2 | 286 | 40 | 2 | 326 | 40 | 2 |
| 210 | 0 | 3 | 250 | 0 | 3 | 290 | 0 | 3 | 330 | 0 | 3 |
| 213 | 20 | 4 | 253 | 20 | 4 | 293 | 20 | 4 | 333 | 20 | 4 |
| 216 | 40 | 5 | 256 | 40 | 5 | 296 | 40 | 5 | 336 | 40 | 5 |
| 220 | 0 | 6 | 260 | 0 | 6 | 300 | 0 | 6 | 340 | 0 | 6 |
| 223 | 20 | 7 | 263 | 20 | 7 | 303 | 20 | 7 | 343 | 20 | 7 |
| 226 | 40 | 8 | 266 | 40 | 8 | 306 | 40 | 8 | 346 | 40 | 8 |
| 230 | 0 | 9 | 270 | 0 | 9 | 310 | 0 | 9 | 350 | 0 | 9 |
| 233 | 20 | 10 | 273 | 20 | 10 | 313 | 20 | 10 | 353 | 20 | 10 |
| 236 | 40 | 11 | 276 | 40 | 11 | 316 | 40 | 11 | 356 | 40 | 11 |
| 240 | 0 | 12 | 280 | 0 | 12 | 320 | 0 | 12 | 360 | 0 | 12 |

## அம்சாயுர்தாயம் (பி), அம்சாயுர்தாயம் (சி)—லக்கினாதிபதி வலிவாயிருக்கும்போது

அம்சாயுர்தாயம் (பி) (லக்கினாதிபதி வலிவாயிருக்கும்போது)

| பாகை | ௵ நாள் |
|---|---|
| 1 | 3—18 |
| 2 | 7—6 |
| 3 | 10—24 |

(அம்சாயுர்தாயம் சி) (லக்கினாதிபதி வலிவாயிருக்கும்போது)

| கலை | ௵ நாள் நாழி | கலை | ௵ நாள் நாழி |
|---|---|---|---|
| 1 | 0—1—48 | 8 | 0—14—24 |
| 2 | 0—3—36 | 9 | 0—16—12 |
| 3 | 0—5—24 | 10 | 0—18—0 |
| 4 | 0—7—12 | 20 | 1—6—0 |
| 5 | 0—9—0 | 30 | 1—24—0 |
| 6 | 0—10—48 | 40 | 2—12—0 |
| 7 | 0—12—36 | 50 | 3—0—0 |

நைசர்க்கிக ஆயுர்தாயம் (எ)—(சந்திரன் வலிவாயிருக்கும்போது)

| பாகை | சூரியன், சுக்கிரன் 20 ஞ | | | சந்திரன் 1 ஞ | | | செவ்வாய் 2 ஞ | | | புதன் 9 ஞ | | | குரு 18 ஞ | | | சனி 50 ஞ | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | வ | மா | நா | வ | மா | நா | வ | மா | நா | வ | மா | நா | வ | மா | நா | வ | மா | நா |
| 1 | 0 | 0 | 20 | 0 | 0 | 1 | 0 | 0 | 2 | 0 | 0 | 9 | 0 | 0 | 18 | 0 | 1 | 20 |
| 2 | 0 | 1 | 10 | 0 | 0 | 2 | 0 | 0 | 4 | 0 | 0 | 18 | 0 | 1 | 6 | 0 | 3 | 10 |
| 3 | 0 | 2 | 0 | 0 | 0 | 3 | 0 | 0 | 6 | 0 | 0 | 27 | 0 | 1 | 24 | 0 | 5 | 0 |
| 4 | 0 | 2 | 20 | 0 | 0 | 4 | 0 | 0 | 8 | 0 | 1 | 6 | 0 | 2 | 12 | 0 | 6 | 20 |
| 5 | 0 | 3 | 10 | 0 | 0 | 5 | 0 | 0 | 10 | 0 | 1 | 15 | 0 | 3 | 0 | 0 | 8 | 10 |
| 6 | 0 | 4 | 0 | 0 | 0 | 6 | 0 | 0 | 12 | 0 | 1 | 24 | 0 | 3 | 18 | 0 | 10 | 0 |
| 7 | 0 | 4 | 20 | 0 | 0 | 7 | 0 | 0 | 14 | 0 | 2 | 3 | 0 | 4 | 6 | 0 | 11 | 20 |
| 8 | 0 | 5 | 10 | 0 | 0 | 8 | 0 | 0 | 16 | 0 | 2 | 12 | 0 | 4 | 24 | 1 | 1 | 10 |
| 9 | 0 | 6 | 0 | 0 | 0 | 9 | 0 | 0 | 18 | 0 | 2 | 21 | 0 | 5 | 12 | 1 | 3 | 0 |
| 10 | 0 | 6 | 20 | 0 | 0 | 10 | 0 | 0 | 20 | 0 | 3 | 0 | 0 | 6 | 0 | 1 | 4 | 20 |
| 20 | 1 | 1 | 10 | 0 | 0 | 20 | 0 | 1 | 10 | 0 | 6 | 0 | 1 | 0 | 0 | 2 | 9 | 10 |
| 30 | 1 | 8 | 0 | 0 | 1 | 0 | 0 | 2 | 0 | 0 | 9 | 0 | 1 | 6 | 0 | 4 | 2 | 0 |
| 40 | 2 | 2 | 20 | 0 | 1 | 10 | 0 | 2 | 20 | 1 | 0 | 0 | 2 | 0 | 0 | 5 | 6 | 20 |
| 50 | 2 | 9 | 10 | 0 | 1 | 20 | 0 | 3 | 10 | 1 | 3 | 0 | 2 | 6 | 0 | 6 | 11 | 10 |
| 60 | 3 | 4 | 0 | 0 | 2 | 0 | 0 | 4 | 0 | 1 | 6 | 0 | 3 | 0 | 0 | 8 | 4 | 0 |
| 70 | 3 | 10 | 20 | 0 | 2 | 10 | 0 | 4 | 20 | 1 | 9 | 0 | 3 | 6 | 0 | 9 | 8 | 20 |
| 80 | 4 | 5 | 10 | 0 | 2 | 20 | 0 | 5 | 10 | 2 | 0 | 0 | 4 | 0 | 0 | 11 | 1 | 10 |
| 90 | 5 | 0 | 0 | 0 | 3 | 0 | 0 | 6 | 0 | 2 | 3 | 0 | 4 | 6 | 0 | 12 | 6 | 0 |
| 100 | 5 | 6 | 20 | 0 | 3 | 10 | 0 | 6 | 20 | 2 | 6 | 0 | 5 | 0 | 0 | 13 | 10 | 20 |
| 200 | 11 | 1 | 10 | 0 | 6 | 20 | 1 | 1 | 10 | 5 | 0 | 0 | 10 | 0 | 0 | 27 | 9 | 10 |
| 300 | 16 | 8 | 0 | 0 | 10 | 0 | 1 | 8 | 0 | 7 | 6 | 0 | 15 | 0 | 0 | 41 | 8 | 0 |

## நைசர்க்கிக ஆயுர்தாயம் (பி)-(சந்திரன் வலிவாயிருக்கும்போது)

| கலை | சூரியன், சுக்கிரன் | | சந்திரன் | | செவ்வாய் | | புதன் | | குரு | | சனி | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | நாள் | நாழி | நாள் | நாழி | நாள் | நாழி | நாள் | நாழி | நாள் | நாழி | மீ | நாள் | நாழி |
| 1 | 0 | 20 | 0 | 1 | 0 | 2 | 0 | 9 | 0 | 18 | 0 | 0 | 50 |
| 2 | 0 | 40 | 0 | 2 | 0 | 4 | 0 | 18 | 0 | 36 | 0 | 1 | 40 |
| 3 | 1 | 0 | 0 | 3 | 0 | 6 | 0 | 27 | 0 | 54 | 0 | 2 | 30 |
| 4 | 1 | 20 | 0 | 4 | 0 | 8 | 0 | 36 | 1 | 12 | 0 | 3 | 20 |
| 5 | 1 | 40 | 0 | 5 | 0 | 10 | 0 | 45 | 1 | 30 | 0 | 4 | 10 |
| 6 | 2 | 0 | 0 | 6 | 0 | 12 | 0 | 54 | 1 | 48 | 0 | 5 | 0 |
| 7 | 2 | 20 | 0 | 7 | 0 | 14 | 1 | 3 | 2 | 6 | 0 | 5 | 50 |
| 8 | 2 | 40 | 0 | 8 | 0 | 16 | 1 | 12 | 2 | 24 | 0 | 6 | 40 |
| 9 | 3 | 0 | 0 | 9 | 0 | 18 | 1 | 21 | 2 | 42 | 0 | 7 | 30 |
| 10 | 3 | 20 | 0 | 10 | 0 | 20 | 1 | 30 | 3 | 0 | 0 | 8 | 20 |
| 20 | 6 | 40 | 0 | 20 | 0 | 40 | 3 | 0 | 6 | 0 | 0 | 16 | 40 |
| 30 | 10 | 0 | 0 | 30 | 1 | 0 | 4 | 30 | 9 | 0 | 0 | 25 | 0 |
| 40 | 13 | 20 | 0 | 40 | 1 | 20 | 6 | 0 | 12 | 0 | 1 | 3 | 20 |
| 50 | 16 | 40 | 0 | 50 | 1 | 40 | 7 | 30 | 15 | 0 | 1 | 11 | 40 |

## லக்கினாயுர்தாயம் (ஏ) லக்கினாயுர்தாயம் (பி)

| பாகை | மீ | நாள் | பாகை | மீ | நாள் | பாகை | மீ | நாள் | கலை | மீ | நாழி | கலை | மீ | நாழி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 0 | 12 | 11 | 4 | 12 | 21 | 8 | 12 | 1 | 0 | 12 | 20 | 4 | 0 |
| 2 | 0 | 24 | 12 | 4 | 24 | 22 | 8 | 24 | 2 | 0 | 24 | 30 | 6 | 0 |
| 3 | 1 | 6 | 13 | 5 | 6 | 23 | 9 | 6 | 3 | 0 | 36 | 40 | 8 | 0 |
| 4 | 1 | 18 | 14 | 5 | 18 | 24 | 9 | 18 | 4 | 0 | 48 | 50 | 10 | 0 |
| 5 | 2 | 0 | 15 | 6 | 0 | 25 | 10 | 0 | 5 | 1 | 0 | | | |
| 6 | 2 | 12 | 16 | 6 | 12 | 26 | 10 | 12 | 6 | 1 | 12 | | | |
| 7 | 2 | 24 | 17 | 6 | 24 | 27 | 10 | 24 | 7 | 1 | 24 | | | |
| 8 | 3 | 6 | 18 | 7 | 6 | 28 | 11 | 6 | 8 | 1 | 36 | | | |
| 9 | 3 | 18 | 19 | 7 | 18 | 29 | 11 | 18 | 9 | 1 | 48 | | | |
| 10 | 4 | 0 | 20 | 8 | 0 | 30 | 12 | 0 | 10 | 2 | 0 | | | |

உதாரணம் :—ஒரு குழந்தை வர்த்தமான சாலிவாகன சகாப்தம் 1792-வது ஹு, கலியுகாதி 4971-வது வருஷமாகிய சுக்கில ஹு புரட்டாசிமீ 18உ-க்குச் சரியான இங்கிலீஷ் 1869-வது ஹு அக்டோபர்மீ 2உ சனிக்கிழமை பம்பாய் இராஜதானியிலுள்ள கத்தியவாருக்கு அடுத்த போர்பந்தர் என்ற ஊரில் காலை சூரிய உதையாதி நாழிகை 3 விநாடி 11½-க்கு ஜெனனமானால் அந்த குழந்தைக்கு ஆயுள் கணிக்க.

ஜெனன காலத்தில் கிரகங்களின் ஸ்புடமும் லக்கின ஸ்புடமும் அடியிற்கண்டபடி ஆகும்.

| | பாகை | கலை | | பாகை | கலை |
|---|---|---|---|---|---|
| சூரியன், | 167 | 2 | சுக்கிரன் | 204 | 32 |
| சந்திரன், | 118 | 10 | சனி | 230 | 27 |
| செவ்வாய், | 206 | 30 | ராகு | 102 | 17 |
| புதன், | 191 | 52 | கேது | 282 | 17 |
| குரு, | 28 | 17 (வக்ரி) | லக்கினம் | 184 | 48 |

ஜெனனகாலத்தில் கிரகங்களின் சட்பலம் அடியிற்கண்டபடி ஆகும்.

| | | | |
|---|---|---|---|
| சூரியன் | 615 பங்கு | குரு | 951 பங்கு |
| சந்திரன் | 701 ,, | சுக்கிரன் | 649 ,, |
| செவ்வாய் | 632 ,, | சனி | 787 ,, |
| புதன் | 933 ,, | லக்கினாதிபதி பலம் | 649 ,, |

ஆகையால் சூரியன், சந்திரன், லக்கினாதிபதி இவர்களில் சந்திரன்தான் வலிவாயிருக்கின்றது. ஆகையால் இந்த ஜாதகத்திற்கு நைசர்க்கிக ஆயுர்தாயம் கணிக்கவேண்டும் என்று ஏற்படுகின்றது.

நைசர்க்கிக ஆயுர்தாயம் கணிக்க :—ஒரு கிரகம் கொடுக்கும் ஆயுளைக் கணிக்க வேண்டுமானால் முதலில் அந்த கிரகத்தினுடைய ஸ்புடத்தை அந்த கிரகத்தினுடைய உச்ச ஸ்புடத்திலிருந்து கழிக்க வேண்டியது. இப்படிக் கழிக்க வந்தது 180 பாகையும், 180 பாகைக்கும் மேலானால் அதை அப்படியே வைத்துக்கொள்ளவேண்டியது. 180 பாகைக்குக் குறைந்தால் அதை 360 பாகையிலிருந்து கழிக்க வருவதை வைத்துக்கொள்ளவேண்டியது. இப்படிக் கழிக்க வந்ததை வைத்துக்கொண்டு நைசர்க்கிக வாக்கியங்களை உபயோகித்து ஆயுளைக் கணிக்க வேண்டியது. எல்லா கிரகங்களினுடைய உச்சஸ்புடம் அடியிற்கண்டபடி ஆகும்.

